# அழகப்பா பல்கலைக்கழகம்

தேசியத் தர நிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் A+(CGPA: 3.64) தகுதியும்
மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் - பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல் தரப்
பல்கலைக்கழகம் மற்றும் தன்னாட்சித் தகுதியும் பெற்றது)

காரைக்குடி - 630003

## தொலைநிலைக்கல்வி இயக்ககம்

## இளங்கலை - இரண்டாமாண்டு

## பகுதி-I: தமிழ் தாள்- IV-A

## நான்காம் பருவம்

# பொதுத்தமிழ் - 41-A

# இளங்கலை - இரண்டாமாண்டு

# நான்காம் பருவம்

# 41A- பொதுத்தமிழ்

**பாடத்திட்டம் - பொருளடக்கம்**

நோக்கம் : மொழி அறிவு, இலக்கண அறிவை வளர்த்தல்

**பிரிவு 1: செய்யுள் உறுப்புகள்**

| | |
|---|---|
| கூறு 1: | செய்யுள் உறுப்புகள் - யாப்பு - எழுத்து, அசை, சீர், |
| கூறு 2: | யாப்பு - தளை, அடி, தொடை |
| கூறு 3: | வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா |
| கூறு 4: | புதிய யாப்பு வடிவங்கள் - சிந்து, கண்ணி, கீர்த்தனை |
| கூறு 5: | புதுக்கவிதையில் குறியீடு – படிமம் |

**பிரிவு 2: அகப்பொருள் - புறப்பொருள்**

| | |
|---|---|
| கூறு 6: | அகப்பொருள் - புறப்பொருள் - ஐந்திணை விளக்கம் |
| கூறு 7: | அகப்பொருள் துறைகள் - வரைவு கடாதல் அறத்தொடு நிற்றல், உடன்போக்கு |
| கூறு 8: | புறப்பொருள் துறைகள் - வஞ்சினக்காஞ்சி, கையறுநிலை, செவியறிவுறூஉ |

**பிரிவு 3: அணி**

| | |
|---|---|
| கூறு 9: | அணி இலக்கணம் - உவமை, உருவகம், வேற்றுமை, பிறிது மொழிதல் |
| கூறு 10: | தற்குறிப்பேற்றம், சிலேடை, பின்வருநிலை. நிறுத்தல் குறிகள். |

**பிரிவு 4: காப்பியம் - சங்க இலக்கியம்**

| | |
|---|---|
| கூறு 11: | சங்கஇலக்கியம் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, |
| கூறு 12 | பதினெண்கீழ்க்கணக்கு. |
| கூறு 13: | ஐம்பெருங்காப்பியங்கள் - பிற்காலக் காப்பியங்கள் - கம்பராமாயணம் - பெரியபுராணம். |
| கூறு 14: | இக்காலக் காப்பியங்கள் - பாரதியின் பாஞ்சாலி சபதம் - பாரதிதாசனின் பாண்டியன் பரிசு – கண்ணதாசனின் இயேசு காவியம், சிற்பியின் - மௌன மயக்கங்கள் |

# இளங்கலை - இரண்டாமாண்டு

## நான்காம் பருவம்

## 41A- பொதுத்தமிழ்

## பாடத்திட்டம் - பொருளடக்கம்

நோக்கம் : மொழி அறிவு, இலக்கண அறிவை வளர்த்தல்

### பிரிவு 1: செய்யுள் உறுப்புகள் கூறு

*1: செய்யுள் உறுப்புகள் - யாப்பு - எழுத்து, அசை, சீர்,*

கூறு 2: யாப்பு - தளை, அடி, தொடை

கூறு 3: வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா

கூறு 4: புதிய யாப்பு வடிவங்கள் - சிந்து, கண்ணி, கீர்த்தனை

கூறு 5: புதுக்கவிதையில் குறியீடு – படிமம்

### பிரிவு 2: அகப்பொருள் - புறப்பொருள்

கூறு 6: அகப்பொருள் - புறப்பொருள் - ஐந்திணை விளக்கம்

கூறு 7: அகப்பொருள் துறைகள் - வரைவு கடாதல் அறத்தொடு நிற்றல், உடன்போக்கு

கூறு 8: புறப்பொருள் துறைகள் - வஞ்சினக்காஞ்சி, கையறுநிலை, செவியறிவுறூஉ

### பிரிவு 3: அணி

கூறு 9: அணி இலக்கணம் - உவமை, உருவகம், வேற்றுமை, பிறிது மொழிதல்

கூறு 10 தற்குறிப்பேற்றம் சிலேடை, பின்வருநிலை. நிறுத்தல் குறிகள்.

### பிரிவு 4: காப்பியம் - சங்க இலக்கியம்

கூறு 11: சங்கஇலக்கியம் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு,

கூறு 12 பதினெண்கீழ்க்கணக்கு.

கூறு 13: ஐம்பெருங்காப்பியங்கள் -பிற்காலக் காப்பியங்கள் - கம்பராமாயணம் - பெரியபுராணம்.

கூறு 14: இக்காலக் காப்பியங்கள் - பாரதியின் பாஞ்சாலி சபதம் பாரதிதாசனின் பாண்டியன் பரிசு – கண்ணதாசனின் இயேசு காவியம், சிற்பியின் - மௌன மயக்கங்கள்

## பிரிவு 1: செய்யுள் உறுப்புகள்

### கூறு 1: செய்யுள் உறுப்புகள் - யாப்பு - எழுத்து, அசை, சீர்,

**கூறு 2: யாப்பு - தளை, அடி, தொடை**

3.5.1 குறள் வெண்பா

3.5.1.1 குறள்வெண்பாவின் இனங்கள்

3.5.1.1.1 குறள்வெண் செந்துறை

3.5.1.1.2 குறட்டாழிசை

3.5.2 நேரிசை வெண்பா

3.5.2.1 ஒரு விகற்ப நேரிசை வெண்பா

3.5.2.2 இரு விகற்ப நேரிசை வெண்பா

3.5.3 இன்னிசை வெண்பா

3.5.4 சிந்தியல் வெண்பா

3.5.4.1 நேரிசைச் சிந்தியல் வெண்பா

3.5.4.2 இன்னிசைச் சிந்தியல் வெண்பா

3.5.5 பஃறொடை வெண்பா

3.6 வெண்பாவின் இனங்கள்

3.6.1 வெண்டாழிசை

3.6.2 வெண்டுறை

3.6.3 வெண்விருத்தம்

3.7 ஆசியப்பாவின் பொது இலக்கணம்

3.8 ஆசிரியப்பாவின் வகைகள்

3.8.1 நேரிசை ஆசிரியப்பா

3.8.2 நிலைமண்டில ஆசிரியப்பா

3.8.3 இணைக்குறள் ஆசிரியப்பா

3.8.4 அடிமறிமண்டில ஆசிரியப்பா

3.9 ஆசிரியப்பாவின் இனங்கள்

3.9.1 ஆசிரியத் தாழிசை

3.9.2 ஆசிரியத்துறை

3.9.3 ஆசிரிய விருத்தம்

3.10 கலிப்பாவின் பொது இலக்கணம்

3.11 கலிப்பாவின் உறுப்புகள்

3.11.1 தரவு

3.11.2 தாழிசை

3.11.3 அராகம்

3.11.4 அம்போதரங்கம்



குறிப்புகள்

## கூறு 4: புதிய யாப்பு வடிவங்கள் - சிந்து, கண்ணி, கீர்த்தனை



## கூறு 5: புதுக்கவிதையில் குறியீடு – படிமம்

5.3 குறியீடு - விளக்கம்

5.4 குறியீடு - சான்று

5.5 குறியீடு - பாடுபொருள்

5.6 ந.பிச்சமூர்த்தியின் கவிதைகளில் குறியீடு

5.7 நகுலன் கவிதைகளில் குறியீடு

5.8 கவிஞர் கலாப்பிரியாவின் கவிதைகளில் குறியீடு

5.9 அப்துல் ரகுமானின் கவிதைகளில் குறியீடு

5.10 கவிஞர் பாலகுமாரனின் கவிதைகளில் குறியீடு

5.11 மு.மேத்தா கவிதைகளில் குறியீடு

5.12 கவிஞர் வாலியின் கவிதைகளில் குறியீடு

5.13 ஜகந்நாத ராஜாவின் கவிதைகளில் குறியீடு

5.14 குறியீடுகளின் பொதுவான வகைப்பாடுகள்

5.15 படிமம்

5.16 சங்க இலக்கியத்தில் படிமம்

5.17 பாரதியின் கவிதைகளில் படிமம்

5.18 தருமு.சிவராமின் கவிதைகளில் படிமம்

5.19 சுகுமாரின் கவிதைகளில் படிமம்

5.20 கல்யாண்ஜியின் கவிதைகளில் படிமம்

5.21 ஞானக்கூத்தனின் கவிதைகளில் படிமம்

5.22 பசுவய்யாவின் கவிதைகளில் படிமம்

5.23 தொகுத்துக் காண்போம்

5.24 சோதித்தறியும் வினா விடைகள்

5.25 பயிற்சி வினா

5.26 மேலும் படித்தறிக

## பிரிவு 2: அகப்பொருள் - புறப்பொருள்

### கூறு 6: அகப்பொருள் - புறப்பொருள் - ஐந்திணை விளக்கம்

6.பாடஅமைப்பு

6.1 அறிமுகம்

6.2 குறிக்கோள்கள்

6.3 அகம் விளக்கம்

6.4 அகப்பொருள்

6.5 அகத்தைப் பாடும் முறையும் பாவும்

6.6 அகப்பொருள் பாகுபாடு

6.6.1 முதற்பொருள்

6.6.1.1 மழைக்காலம்

6.6.1.2 பனிக்காலம்

6.6.1.3 கோடைக்காலம்

6.6.2 கருப்பொருள்

6.6.3 உரிப்பொருள்

6.7 புறப்பொருள்

6.7.1 வெட்சி

6.7.2 கரந்தை

6.7.3 வஞ்சி

6.7.4 காஞ்சி

6.7.5 உழிஞை

6.7.6 நொச்சி

6.7.7 தும்பை

6.7.8 வாகை

6.7.9 பாடாண்

6.7.10 பொதுவியல்

6.9.11 கைக்கிளை

6.7.12 பெருந்திணை

6.8 ஐந்திணை விளக்கம்

6.8.1 களவு

6.8.1.1 களவொழுக்கத்தின் வகைகள்

6.8.1.1.1 இயற்கைப் புணர்ச்சி

6.8.1.1.1.1 தலைவியால் கிடைக்கும் புணர்ச்சி

6.8.1.1.1.2 தெய்வத்தால் கிடைக்கும் புணர்ச்சி

6.8.1.1.2 இடந்தலைப்பாடு

6.8.1.1.3 பாங்கற்கூட்டம்

6.8.1.1.4 பாங்கியிற் கூட்டம்

6.8.2 களவுக்காலத்துப் புணர்ச்சியின் திறம்

6.8.3 களவில் கூற்று நிகழ்த்துவதற்கு உரியவர்கள்

6.9 கற்பு

6.9.1 கற்பின் இருவகை

6.9.1.1 களவின்வழி வந்த கற்பு

6.9.1.2 களவின் வழி வாராக் கற்பு

6.9.2 கற்புக்காலப் பிரிவுகள்

6.9.2.1 ஓதற்பிரிவு

6.9.2.2 காவற்பிரிவு

6.9.2.3 தூதிற் பிரிவு,

6.9.2.4 துணைவயிற்பிரிவு,

6.9.2.5 பொருள்வயிற்பிரிவு,

6.9.2.6 பரத்தையிற்பிரிவு

6.10 தொகுத்துக் காண்போம்

6.11 சோதித்தறியும் வினா விடைகள்

6.12 பயிற்சி வினா

6.13 மேலும் படித்தறிக

## கூறு 7: அகப்பொருள் துறைகள் - வரைவு கடாதல், அறத்தொடு நிற்றல்,

உடன்போக்கு

7. பாட அமைப்பு

7.1 அறிமுகம்

7.2 குறிக்கோள்கள்

7.3 அகப்பொருள் துறைகள்

7.4 வரைவு கடாதல்

7.5 வரைவு கடாதலின் வகை

7.5.1 பொய்த்தல்

7.5.1.1 பொய்த்தலுக்கு உரியவை

7.5.2 மறுத்தல்

7.5.1.2 மறுத்தலுக்கு உரியவை

7.5.3 கழறல்

7.5.1.3 கழறலுக்கு உரியவை

7.5.4 மெய்த்தல்

7.5.1.4 மெய்த்தலுக்கு உரியவை

7.6 இரவுக்குறி வந்து நீங்கும் தலைவனிடம் தோழி வரைவு கடாவுதல்

7.7 இற்செறிப்பை அறிவுறுத்தித் தோழி வரைவு கடாவுதல்

7.8 அறத்தொடு நிற்றல்

7.9 அறத்தொடு நிற்றலின் நோக்கம்

7.10 தொல்காப்பிய விளக்கம்

7.11 அறத்தொடு நிற்கக் காரணங்கள்

7.12 அறத்தொடு நிற்போரும் முறைகளும்

7.13 தமர் மறுத்த நிலையில் தோழி அறத்தொடு நிற்றல்

7.14 தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றல்

7.15 உடன்போக்கு

7.16 உடன்போக்கு நிகழ்தல்

7.17 உடன்போக்கின் வகைகள்

7.18 அகப்பொருள் ஓம்படைத்துறை

7.19 கொண்டுதலைக் கழிதல்

7.20 தொகுத்துக் காண்போம்

7.21 சோதித்தறியும் வினா விடைகள்

7.22 பயிற்சி வினா

7.23 மேலும் படித்தறிக

**கூறு 8: புறப்பொருள் துறைகள் - வஞ்சினக்காஞ்சி, கையறுநிலை, செவியறிவுறூஉ**

8. பாட அமைப்பு

8.1 அறிமுகம்

8.2 குறிக்கோள்கள்

8.3 புறப்பொருள் துறைகள்

8.4 வஞ்சினக் காஞ்சி

8.5 புறப்பொருள் வெண்பாமாலையில் வஞ்சினக் காஞ்சி

8.6 புறநானூற்றில் வஞ்சினக் காஞ்சி

8.7 பூதப்பாண்டியனின் வஞ்சினம்

8.8 பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் வஞ்சினம்

**கூறு 9: அணி இலக்கணம் -**

**உவமை,உருவகம்,வேற்றுமை,பிறிதுமொழிதல்,**

9.8 பிறிதுமொழிதல் அணி

9.9 தொகுத்துக் காண்போம்

9.10 சோதித்தறியும் வினாக்கள்

9.11 பயிற்சி வினா

9.12 மேலும் படித்தறிக

## கூறு 10: தற்குறிப்பேற்றம், சிலேடை, பின்வருநிலை. நிறுத்தல் குறிகள்.

10. பாட அமைப்பு

10.1 அறிமுகம்

10.2 குறிக்கோள்கள்

10.3 தற்குறிப்பேற்றம்

10.4 சிலேடை அணி

10.4.1 செம்மொழிச் சிலேடை

10.4.2 பிரிமொழிச் சிலேடை

10.5 பின்வருநிலை அணி

10.5.1 சொல்பின்வருநிலை அணி

10.5.2 பொருள் பின்வருநிலை அணி

10.5.3 சொற்பொருள் பின்வருநிலை அணி

10.6 நிறுத்தற் குறிகள்

10.7 பண்டைக் குறியீடுகள்

10.8 நிறுத்தற் குறியிடுதலின் அறிமுகம்

10.9 நிறுத்தற் குறிகளைப் பயன்படுத்தும் முறைகள்

10.9.1 காற்புள்ளி

10.9.1.1 காற்புள்ளி இடுதல் தொடர்பான சில முதன்மையான செய்திகள்

10.9.2 அரைப்புள்ளி

10.9.3 முக்காற் புள்ளி

10.9.4 முற்றுப்புள்ளி

10.9.5 வினாக்குறி

10.9.6 உணர்ச்சிக் குறி

10.9.7 ஒற்றை மேற்கோள் குறி

10.9.8 இரட்டை மேற்கோள் குறி

10.9.9 விடுகுறி (அல்லது) எச்சக் குறி

10.9.10 மேற்படி குறி

10.9.11 சிறுகோடு

10.9.12 தொடர் விடுநிலைக் குறி

10.9.13 இடைப் பிறவரல் வைப்புக் குறி

10.9.14 பிறை அடைப்புக் குறி

10.9.15 சாய்கோடு

10.9.16 அடிக்கோடு

10.10 தொகுத்துக் காண்போம்

10.11 சோதித்தறியும் வினாக்கள்

10.12 பயிற்சி வினா

10.13 மேலும் படித்தறிக

## கூறு 11: தொல்காப்பியம் - சங்கஇலக்கியம் - எட்டுத்தொகை, பத்துப்பாட்டு,

11. பாடஅமைப்பு

11.1 அறிமுகம்

11.2 குறிக்கோள்கள்

11.3 சங்க இலக்கியம்

11.4 எட்டுத்தொகை நூல்கள்

11.5 அகப்பொருள் நூல்கள்

11.5.1 நற்றிணை

11.5.1.1 நற்றிணையின் சிறப்புகள்

11.5.1.2 நற்றிணையில் வேந்தர்களும் குறுநில மன்னர்களும்

11.5.1.3 தொடரால் பெயர் பெற்ற புலவர்கள்

11.5.2 குறுந்தொகை

11.5.2.1 குறுந்தொகையின் சிறப்புகள்

11.5.3 ஐங்குறுநூறு

11.5.3.1 ஐங்குறுநூற்றின் சிறப்புகள்

11.5.4 கலித்தொகை

11.5.4.1 கலித்தொகையின் சிறப்புகள்

குறிப்புகள்

11.9.2 வீரநிலை இலக்கியம் (வீரயுகப் பாடல்கள்)



11.10 தொகுத்துக் காண்போம்

11.11 சோதித்தறியும் வினாக்கள்



11.12 பயிற்சி வினா

11.13 மேலும் படித்தறிக

**கூறு 12: பதினெண்கீழ்க்கணக்கு.**

12 பாட அமைப்பு

12.1 அறிமுகம்

12.2 குறிக்கோள்கள்

12.3 பிற பெயர்கள்

12.4 காலம்

12.5 தொகுத்தவர் தொகுப்பித்தோர்

12.6 பா அமைப்பு

12.7 பாடுபொருள்

12.8 பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள்

12.9 அற இலக்கியங்கள்

12.10 அறநூல்களின் இலக்கணம்

12.11 அறநூல்கள்

12.11.1 திருக்குறள்

12.11.1.1 பாகுபாடு

12.11.1.2 அறத்துப்பால்

12.11.1.3 பொருட்பால்

12.11.1.4 இன்பத்துப்பால்

12.11.1.5 உலகப் பொதுமறை

12.11.2 நாலடியார்

12.11.3 நான்மணிக்கடிகை

12.11.4 இன்னா நாற்பது

12.11.5 இனியவை நாற்பது

12.11.6 திரிகடுகம்

12.11.7 ஆசாரக்கோவை

12.11.8 பழமொழி நானூறு

## கூறு 13. ஐம்பெருங்காப்பியங்கள் - பிற்காலக் காப்பியங்கள் - கம்பராமாயணம் -

பெரியபுராணம்.

13.4.1.8 கம்பரின் சொல்லோவியம்

13.4.1.9 கம்பராமாயணத்தில் ஓசைச் சிறப்பு

13.4.1.2 பெரியபுராணம்

13.4.2.1 நூற்குறிப்பு

13.4.2.2 காப்பியச் சுருக்கம்

13.4.2.3 காப்பியத்தில் சில பகுதிகள்

13.5 தொகுத்துக் காண்போம்

13.6 சோதித்தறியும் வினாக்கள்

13.7 பயிற்சி வினா

13.8 மேலும் படித்தறிக

## கூறு 14 இக்காலக் காப்பியங்கள் - பாரதியின் பாஞ்சாலி சபதம் - பாரதிதாசனின் பாண்டியன் பரிசு – கண்ணதாசனின் இயேசு காவியம், சிற்பியின் - மௌன மயக்கங்கள்.

14. பாட அமைப்பு

14.1 அறிமுகம்

14.2 குறிக்கோள்கள்

14.3 பாஞ்சாலி சபதம்

14.3.1 அமைப்பு முறை

14.3.2 காப்பியச் சுருக்கம்

14.3.3 காப்பியத்தின் தனித்தன்மை

14.4 பாண்டியன் பரிசு

14.4.1 காப்பியச் சுருக்கம்

14.4.2 காப்பியத்தின் தனித்தன்மை

14.5 இயேசு காவியம்

14.5.1 நூற்குறிப்பு

14.5.2 காப்பியத்தின் தனித்தன்மைகள்

14.6 மௌன மயக்கங்கள்

14.6.1 நூற்குறிப்பு

14.6.2 காப்பியச் சுருக்கம்

14.6.3 காப்பியத்தின் தனித்தன்மைகள்

14.7 தொகுத்துக் காண்போம்

14.8 சோதித்தறியும் வினாக்கள்

14.9 பயிற்சி வினா

14.10 மேலும் படித்தறிக

# பிரிவு 1: செய்யுள் உறுப்புகள்



## கூறு 1: செய்யுள் உறுப்புகள் - யாப்பு - எழுத்து, அசை, சீர்,

1.9 பயிற்சி வினா

1.10 மேலும் படித்தறிக



## 1.1 அறிமுகம்

தமிழில் கிடைக்கும் முதல் நூல் தொல்காப்பியமாகும். இது எழுத்து, சொல், பொருள் ஆகிய மூன்றனுக்கும் இலக்கணம் வகுத்துள்ளது. தொல்காப்பியர் எழுத்து வடிவம் பெற்ற அனைத்து நூல்களையும் செய்யுள் என்னும் சொல்லால் குறிப்பிடுகிறார். செய்யுள் ஏழு நிலைகளில் அமையும். அவை பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல், என்பனவாகும். செய்யுள் என்னும் சொல் பயிர் செய்யும் விளைநிலத்தைக் குறிப்பதாகும். பயிர் விளைந்து உணவுப் பொருளைத் தரும். அதுபோன்று மொழியில் வரும் செய்யுளில் வாழ்வியல் விளைந்து மக்களைப் பண்படுத்தும்.

யாப்பு என்பதைச் செய்யுள் உறுப்பாகத் தொல்காப்பியர் சுட்டுகிறார். ஆனால் பின் வந்த இலக்கண நூலார் தொல்காப்பியத்தை மூலநூலாகக் கொண்டு யாப்பு என்ற செய்யுள் வடிவத்தை தனி நூலாகச் செய்தனர். யாப்பு பற்றி யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை போன்ற பல நூல்கள் வெளிவந்துள்ளன. தொல்காப்பியர் மாத்திரை, எழுத்து, அசை, சீர், அடி, யாப்பு, மரபு, தூக்கு, தொடை, நோக்கு, பா, அளவியல், திணை, கைகோள், கண்டோர், கேட்போர், இடம், காலம், பயன், மெய்ப்பாடு, எச்சம், முன்னம், பொருள், துறை, மாட்டு, வண்ணம், அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு ஆகிய முப்பத்து நான்கு செய்யுள் உறுப்புகளைச் செய்யுளியலில் குறிப்பிட்டுள்ளார்.

செய்யுள் இயற்றும் முறையைப் பற்றிக் கூறும் இலக்கணம் யாப்பிலக்கணம் எனப்படும். எலும்பு, தசை, நரம்பு முதலியவற்றால் கட்டப் பெற்றதை யாக்கை அல்லது உடம்பு என்பது போல எழுத்து, அசை, சீர், தளை, அடி முதலியவற்றால் கட்டப்பெற்றது ‘யாப்பு’ (செய்யுள்) எனப்பெற்றது. யாப்பு – கட்டுதல், யாப்பு, செய்யுள், பாட்டு, பா, கவிதை என்பன ஒரு பொருள் தரும் பல சொற்கள் ஆகும். இவற்றுள் எழுத்து, அசை, சீர் ஆகிய மூன்று செய்யுளுறுப்புகளைப் பற்றியும் இப்பகுதியின் மூலம் தெரிந்து கொள்ளலாம்.

## 1.2 குறிக்கோள்கள்:

- செய்யுள் உறுப்புகளை யாப்பருங்கலக்காரிகை என்னும் நூல் வழியாகத் தெரிந்து கொள்வீர்கள்.
- எழுத்தின் வகை குறில், நெடில், ஆவி (உயிர்), குற்றியலிகரம், குற்றியலுகரம், ஐகாரக்குறுக்கம், மெய் என்ற எட்டு வகைகளைப் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- நேரசை, நிரையசை என்ற இரண்டு அசை வகைகளைப் பற்றியும், நான்கு வகை சீர் பற்றிய இலக்கணங்களையும் தெரிந்து கொள்வீர்கள்.

## 1.3 யாப்பு உறுப்புகளுக்கான பெயர்க்காரணம்

யாப்பு உறுப்புகள் பற்றிய பெயர்க்காரணத்தை யாப்பருங்கலக்காரிகை,

“எழுதப் படுதலின் எழுத்தே அவ்வெழுத்து
அசைத்திசை கோடலின் அசையே அசையியைந்து
சீர்கொள நிற்றலிற் சீரே சீரிரண்டு
தட்டு நிற்றிலின் தளையே அத்தளை
அடுத்து நடத்தலின் அடியே அடியிரண்டு
தொடுத்தல் முதலாயின தொடையே அத்தொடை
பாவி நடத்தலிற் பாவே பாவொத்து
இனமா நடத்தலின் இனமெனப் படுமே!
(யாப்பலங்கலக்காரிகை – உரைமேற்கோள் பாடல்)

என்று குறிப்பிடுகிறது.

## 1.4 எழுத்து

எழுதப்படுவதால் **எழுத்து** எனப்படுகிறது. இவ்வெழுத்து 1.குறில், 2.நெடில், 3.ஆவி(உயிர்), குறுகிய மூவுயிர் 4.குற்றியலிகரம், 5.குற்றியலுகரம், 6.ஐகாரக்குறுக்கம், 7.ஆய்தம், 8.மெய் என்பவை எழுத்து எனப்படுகிறது.

### 1.4.1 குறில்

குறில் என்பது குற்றெழுத்து ஆகும். அது உயிர் எழுத்துக்களான அ, இ, உ, எ, ஒ ஆகிய ஐந்து எழுத்துக்களும் குற்றெழுத்து எனப்படும். இவை தவிர உயிரோடு கூடிய மெய்யெழுத்தும் குற்றெழுத்து எனப்படும். சான்றாக க, கி, கு, கெ, கொ, ச, சி, சு, செ, சொ போன்றவை

இவற்றைத் தொல்காப்பியம்

அஇஉஎஒ என்னும் அப்பால் ஐந்தும்
ஓரள பிசைக்குங் குற்றெழுத் தென்ப"

என்கிறது.

### 1.4.2 நெடில்

நெடில் என்பது நெட்டெழுத்து ஆகும். உயிர் எழுத்துக்களான ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ ஆகிய ஏழு எழுத்துக்களும் நெட்டெழுத்துக்கள் எனப்படும். உயிரோடு கூடும் மெய்யெழுத்தும் நெட்டெழுத்துக்குள் அடங்கும். சான்றாக கா, கீ, கூ, கே, கை, கோ, கௌ, சா, சீ, சூ, சே, சை, சோ, சௌ போன்றவை

இவற்றைத் தொல்காப்பியம்,

"ஆஈஊஏஐஓஔ என்னும் அப்பால் ஏழும்
ஈரள பிசைக்கும் நெட்டெழுத் தென்ப"

என்று குறிப்பிடுகிறது.

### 1.4.3 உயிர்

ஆவி என்பது உயிரெழுத்து எனப்படும். அவை அகரம் முதல் ஔகாரம் இறுதியாக அமைந்த பன்னிரண்டு எழுத்தும் ஆவி அல்லது உயிரெழுத்து எனப்படும்.

அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ ஆகிய பன்னிரண்டு எழுத்தும் உயிரெழுத்தாகும்.

இதனைத் தொல்காப்பியம்,

"ஔகார இறுவாய்ப்
பன்னீ ரெழுத்தும் உயிரென மொழிப"

என்கிறது.

### 1.4.4 குறுகிய மூவுயிர்

குறுகிய மூவுயிர் என்பன குற்றியலிகரம், குற்றியலுகரம், ஐகாரக்குறுக்கம் என்பனவாகும். இவை தனக்குரிய மாத்திரை அளவிலிருந்து செய்யுளில் குறுகி ஒலிப்பதால் குறுகிய மூவுயிர் எனப்படுகிறது.

#### 1.4.4.1 குற்றியலிகரம்

குறுமை + இயல் + இகரம் = குற்றியலிகரம். குறைந்த ஒலியை உடைய 'இ' என்னும் எழுத்து. இது தன்னுடைய ஒரு மாத்திரை அளவில் குறைந்து அரை மாத்திரையாக ஒலிக்கும்.

ஒரு குற்றியலுகரச் சொல்லின் முன் 'யா' என்னும் எழுத்தை முதலாக உடைய சொல் சேரும் பொழுது அக்குற்றியலுகரச் சொல்லின் இறுதியில் உள்ள உகரம் இகரமாக மாறும். இதுவே குற்றியலிகரம் எனப்படும். இதற்குக் கால அளவு அரை மாத்திரையாகும். மேலும் 'மியா' என்னும் அசைச்சொல் வருமொழியாக வந்தால் அதில் உள்ள இகரமும் (ம் + இ = மி) ஒலி குறைந்து குற்றியலிகரமாகும்.

எடுத்துக்காட்டு

வீடு + யாது = வீடியாது?

பட்டு + யாது = பட்டியாது?

எ∴கு + யாது = எ∴கியாது

கேள் + மியா = கேண்மியா

#### 1.4.4.2 குற்றியலுகரம்

குறுமை + இயல் + உகரம் = குற்றியலுகரம். குறைந்த அளவு ஒலிக்கின்ற உ என்னும் எழுத்து தன்னுடைய ஒரு மாத்திரையின் குறைந்து அரை மாத்திரையாக ஒலிக்கும்.

வல்லின மெய்களுள் ஏதேனும் ஒன்றின் மேல் சேர்ந்து வரும் உகரம் (கு, சு, டு, து, பு, று) சொல்லின் இறுதியில் வரும்பொழுது தனக்குரிய ஒரு மாத்திரையிலிருந்து குறைந்து அரை மாத்திரை அளவினதாக ஒலிக்கும். இதுவே குற்றியலுகரமாகும். இவ்வாறு ஒலிக்கும் பொழுது இரண்டு எழுத்துகளாலான சொல்லாக இருப்பின் முதல் எழுத்து நெடிலாக இருத்தல் வேண்டும்.

‘உ’ என்னும் எழுத்தைத் தனியாக ஒலிக்கும் பொழுது ஒரு மாத்திரை அளவு ஒலிக்கின்றது. பந்து என்னும் சொல்லை ஒலிக்கும் பொழுது ‘உ’ என்னும் ஒலி (த் + உ) முழுமையாக ஒலிக்கவில்லை. அரை மாத்திரை அளவே ஒலிக்கின்றது. பந்து என்னும் சொல்லின் இறுதியில் உள்ள உகரம் குற்றியலுகரமாகும்.



குறிப்புகள்

**1.4.4.2.1 குற்றியலுகர வகைகள்**

ஈற்றுக்கு அயலெழுத்து (இறுதியெழுத்துக்கு முன்னுள்ள எழுத்து) வேறுபடுவதன் அடிப்படையில் குற்றியலுகரத்தை ஆறு வகையாகப் பிரிப்பர்.

அவையாவன 1. நெடில் தொடர்க் குற்றியலுகரம், 2. ஆய்தத் தொடர்க் குற்றியலுகரம், 3. உயிர்த்தொடர்க் குற்றியலுகரம், 4. வன்றொடர்க் குற்றியலுகரம், 5.மென்றொடர்க் குற்றியலுகரம், 6.இடைத்தொடர்க் குற்றியலுகரம்

**1.4.4.3 ஐகாரக் குறுக்கம்**

தனித்து ஒலிக்காது, சொற்களில் சேர்ந்து ஒலிக்கின்ற ஐகாரம் தனக்குரிய இரண்டு மாத்திரை அளவிலிருந்து குறைந்து ஒலிக்கின்றது. இதற்கு ஐகாரக்குறுக்கம் என்று பெயர். எடுத்துக்காட்டு. தை, வை என்ற தனியாக ஒலிக்கும் பொழுது இரண்டு மாத்திரை அளவு ஒலிக்கின்றது.

இளைஞர், பறவை என்று சொற்களில் சேர்ந்து ஒலிக்கின்ற பொழுது குறைந்து ஒலிக்கும். குறைந்து ஒலிப்பதால் குறுக்கம் என்று பெயர் பெற்றது. சொல்லின் முதல், இடை, கடை ஆகிய மூவிடங்களிலும் குறைந்து ஒலிக்கும். சொல்லின் முதலில் ஒன்றரை மாத்திரை அளவாகும். சொல்லின் இடையிலும், இறுதியிலும் ஒரு மாத்திரை அளவாகும்.

**1.4.5 ஆய்தம்**

ஆய்தம் என்பது அஃகேனம் என்றும், ஆய்தம் என்றும், தனிநிலை என்றும், புள்ளி என்றும், ஒற்று என்றும் பெயர்பெறும்.

எடுத்துக்காட்டு

எஃகு, கஃசு, கஃடு, கஃது, கஃபு, கஃறு என வரும்.

### 1.4.6 மெய்

மெய்யெழுத்துக்கள் பதினெட்டு ஆகும். க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன் என்பன மெய்யெழுத்துகளாகும். இம்மெய்யெழுத்துக்கள் உடம்பு என்றும், ஒற்று என்றும், புள்ளி என்றும் பெயர்பெறும். இவை ஒலிக்கும் முறையால் வல்லினம், மெல்லினம், இடையினம் என மூவகைப்படும். அவை

க், ச், ட், த், ப், ற் - வல்லின மெய்கள்

ங், ஞ், ண், ந், ம், ன் - மெல்லின மெய்கள்

ய், ர், ல், வ், ழ், ள் - இடையின மெய்கள்

என்பனவாகும்.

## 1.5 அசை

அசைத்துச் சொல்லப்படுதலால் அசை எனப்பட்டது.

செல்வன் - இச்சொல்லைச் சொல்வதற்குச் செல் - வன் என இரண்டு முறை வாயை அசைக்கிறோம். ‘செல்வன்’ என்னும் சொல் இரண்டு அசைகளால் ஆன சொல் ஆகும்.

மணிமேகலை - இச்சொல்லைச் சொல்வதற்கு மணி – மே – கலை என மூன்று முறை வாயை அசைக்கிறோம். ‘மணிமேகலை’ என்பது மூன்று அசைகளால் ஆன சொல் ஆகும்.

### 1.5.1 இலக்கணம்

ஒரு சொல் அல்லது சீரைச் சொல்லும்போது குறில், நெடில், ஒற்று என்னும் மூவகை எழுத்துகளால் அசைக்கப்படுவது அசை எனப்படும். அசை, சீருக்கு உறுப்பாக அமையும்.

எடுத்துக்காட்டு

உலகம் - உல-கம். ‘உல’ என்பது ஓர் அசை, ‘கம்’ என்பது ஓர் அசை

மூவேந்தர் - மூ-வேந்-தர்.

அகழ்வாரை – அகழ்-வா-ரை அசையின் வகைகள்

அசையானது நேரசை, நிரையசை என்று இருவகைப்படும்.

#### 1.5.2 நேரசை

குறில் தனித்தும் குறில் ஒற்றெடுத்தும், நெடில் தனித்தும் நெடில் ஒற்றடுத்தும் வருவன நேரசையாம்.

எடுத்துக்காட்டு

1. அ – குறில் தனித்து வந்த நேரசை
2. அல் - குறில் ஒற்றெடுத்து வந்த நேரசை
3. ஆ – நெடில் தனித்து வந்த நேரசை
4. ஆல் - நெடில் ஒற்றடுத்து வந்த நேரசை

#### 1.5.3 நிரையசை

இரு குறில் இணைந்தும், இரு குறில் இணைந்து ஒற்றடுத்தும், குறில் நெடில் இணைந்தும், குறில் நெடில் இணைந்து ஒற்றடுத்தும் வருவன நிரையசையாம்.

எடுத்துக்காட்டு

1. அணி - இரு குறில் இணைந்து வந்த நிரையசை
2. அணில் - இரு குறில் இணைந்து ஒற்றடுத்து வந்த நிரையசை
3. படா – குறில் நெடில் இணைந்து வந்த நிரையசை
4. படாம் - குறில் நெடில் இணைந்து ஒற்றடுத்து வந்த நிரையசை

## 1.6 சீர்

'உலகம் யாவையும் தாமுள வாக்கலும்' இவ்வடியில் 'தாம் + உளவாக்கலும்' என்னும் இரண்டு சொற்கள், செய்யுள் ஓசைக்கு ஏற்பவும், செய்யுள் இலக்கணத்திற்கு ஏற்பவும் 'தாமுள + வாக்கலும் என இரண்டு சீர்களாக அமைக்கப் பெற்றுள்ளன.

#### 1.6.1 இலக்கணம்

ஓர் அசை தனியாகவோ, பல அசைகள் சேர்ந்தோ ஓர் ஒழுங்குபடச் செய்யுள் அடிகளில் அமைவது 'சீர்' எனப்படும். (சீர் - ஒழுங்கு), சீர், செய்யுள் அடிக்கு உறுப்பாக வரும். ஒரு சீரில் ஒன்று முதல் நான்கு அசைகள் வரை இருக்கும்.

எடுத்துக்காட்டு

| **சீர்** | **அசைப்பிரிப்பு** | **அசை** | **சீர்வகை** |
|---|---|---|---|
| மன் | மன் | நேர் | ஓரசைச்சீர் |
| தம்மை | தம்-மை | நேர் நேர் | ஈரசைச்சீர் |
| அகழ்வாரை | அகழ்-வா-ரை | நிரை நேர் நேர் | மூவசைச்சீர் |

**1.6.2 சீரின் வகைகள்**

சீர் நான்கு வகைப்படும். அவை ஓரசைச்சீர், ஈரசைச்சீர், மூவசைச்சீர், நாலசைச்சீர் என்பனவாகும்.

**1.6.2.1 குறிப்பு**

ஒரு சீரில் எத்தனை அசைகள் உள்ளன என்பதையும், ஒரு சீர் எந்த அசையில் முடிந்துள்ளது என்பதையும் தெளிவாக அறிந்து கொள்ளும் பொருட்டுச் சீர்களுக்கு வழங்கும் மற்றொரு பெயர் 'வாய்பாடு' எனப்படும். வாய்பாட்டைக் குறிக்கும் சொல்லிலேயே அந்தச் சீருக்குரிய அசைகள் அடங்கி இருக்கும்.

**1.6.2.2 ஓரசைச்சீர்**

எடுத்துக்காட்டு

| **சீர்** | **அசை** | **வாய்பாடு** |
|---|---|---|
| 1. மன் | நேர் | நாள் |
| 2. தலை | நிரை | மலர் |
| 3. நன்று | நேர்பு | காசு |
| 4. பொதிந்து | நிரைபு | பிறப்பு |

**1.6.2.3 ஈரசைச்சீர்கள்**

இரண்டு அசைகளால் ஆன சீர்கள் நான்கு ஆகும்.

| **சீர்** | **அசை** | **வாய்பாடு** | **பெயர்** |
|---|---|---|---|
| 1. வந்தான் | நேர் நேர் | தேமா | மாச்சீர் |
| 2. வருவான் | நிரை நேர் | புளிமா | மாச்சீர் |
| 3. வருகிறான் | நிரை நிரை | கருவிளம் | விளச்சீர் |
| 4. போகிறான் | நேர் நிரை | கூவிளம் | விளச்சீர் |

இவை நான்கும் ஆசிரிய உரிச்சீர்களாகும்.

**1.6.2.4 மூவசைச் சீர்கள்**

மூன்று அசைகளால் ஆன சீர்கள் எட்டு ஆகும்.

எடுத்துக்காட்டு

| சீர் | அசை | வாய்பாடு | பெயர் |
|---|---|---|---|
| 1. வந்தானே | நேர் நேர் நேர் | தேமாங்காய் | காய்ச்சீர் |
| 2. வருவானே | நிரை நேர் நேர் | புளிமாங்காய் | |
| 3. வருகிறானே | நிரை நிரை நேர் | கருவிளங்காய் | வெண்சீர் |
| 4. போகிறானே | நேர் நிரை நேர் | கூவிளங்காய் | |
| 5. வந்தானடி | நேர் நேர் நிரை | தேமாங்கனி | |
| 6. வருவானடி | நிரை நேர் நிரை | புளிமாங்கனி | கனிச்சீர் |
| 7. வருகிறானடி | நிரை நிரை நிரை | கருவிளங்கனி | |
| 8. போகிறானடி | நேர் நிரை நிரை | கூவிளங்கனி | வஞ்சியுரிச்சீர் |

### 1.6.2.4.1 குறிப்பு

ஈரசைச்சீர்கள் ஒவ்வொன்றின் இறுதியிலும் ‘நேர்’ என்னும் அசையைச் சேர்த்தால் ‘நேர்’ ஈற்று மூவசைச் சீர்கள் நான்கு உண்டாகும். ஈரசை வாய்பாடுகளின் இறுதியில் ‘காய்’ என்னும் வாய்பாடு சேரும். (நேர் நேர் + நேர் - தேமா + காய்)

ஈரசைச்சீர்கள் ஒவ்வொன்றின் இறுதியிலும் ‘நிரை’ என்னும் அசையைச் சேர்த்தால் ‘நிரை’ ஈற்று மூவசைச்சீர்கள் நான்கு உண்டாகும். ஈரசை வாய்பாடுகளின் இறுதியில் ‘கனி’ என்னும் வாய்பாடு சேரும். (நேர் நேர் + நிரை – தேமா + கனி)

### 1.6.2.5 நாலசைச்சீர்

(பொதுச் சீர்கள்) நான்கு அசைகளால் ஆன சீர்கள் பதினாறு ஆகும்.

(அ) ஈரசைச் சீர் ஒவ்வொன்றின் இறுதியிலும் ‘நேர் நேர்’ என இரண்டு நேரசைகளைச் சேர்த்தால் “நேர்’ ஈற்று நாலசைச் சீர்கள் நான்கு உண்டாகும். ஈரசை வாய்பாடுகளின் இறுதியில் ‘தண்பூ’ என்னும் வாய்பாடு சேரும். (நேர் நேர் + நேர் நேர் - தேமா + தண்பூ)

(ஆ) ஈரசைச் சீர்கள் ஒவ்வொன்றன் இறுதியிலும், ‘நிரை நேர்’ என இரண்டு அசைகளைச் சேர்த்தால் நேர் ஈற்று நாலசைச் சீர்கள் நான்கு உண்டாகும். ஈரசை வாய்பாடுகளின் இறுதியில் ‘நறும்பூ’ என்னும் வாய்பாடு சேரும். (நேர் நேர் + நிரை நேர் -தேமா + நறும்பூ)

(இ) ஈரசைச் சீர்கள் ஒவ்வொன்றின் இறுதியிலும் 'நேர் நிரை' என்னும் இரண்டு அசைகளைச் சேர்த்தால் நிரை ஈற்று நாலசைச் சீர்கள் நான்கு உண்டாகும். ஈரசை வாய்பாடுகளின் இறுதியில் 'தண்ணிழல்' என்னும் வாய்பாடு சேரும். (நேர் நேர் + நேர் நிரை – தேமா + தண்ணிழல்)

(ஈ) ஈரசைச் சீர்கள் ஒவ்வொன்றன் இறுதியிலும் 'நிரை நிரை' என்னும் இரண்டு அசைகளைச் சேர்த்தால் நிரை ஈற்று நாலசைச் சீர்கள் நான்கு உண்டாகும். ஈரசை வாய்பாடுகளின் இறுதியில் 'நறுநிழல்' என்னும் வாய்பாடு சேரும். (நேர் நேர் + நிரை நிரை – தேமா + நறுநிழல்)

எடுத்துக்காட்டு

| **சீர்** | **அசை** | **வாய்பாடு** |
|---|---|---|
| (அ) | | |
| 1. அங்கண்வானம் | நேர் நேர் நேர் நேர் | தேமாந்தண்பூ |
| 2. வடிவார்கூந்தல் | நிரை நேர் நேர் நேர் | புளிமாந்தண்பூ |
| 3. எழில்மிகு பாவாய் | நிரை நிரை நேர் நேர் | கருவிளந்தண்பூ |
| 4. வெங்களியானை | நேர் நிரை நேர் நேர் | கூவிளந்தண்பூ |
| (ஆ) | | |
| 5. கள்வார் குழலாய் | நேர் நேர் நிரை நேர் | தேமா நறும்பூ |
| 6. செழுநீர்ப் பவளம் | நிரை நேல் நிரை நேர் | புளிமா நறும்பூ |
| 7. முழுமதிப்புரையும் | நிரை நிரை நிரை நேர் | கருவிளநறும்பூ |
| 8. கொங்கவிரசோகின் | நேர் நிரை நிரை நேர் | கூவிளநறும்பூ |
| (இ) | | |
| 9. நீள்வான்செல்மதி | நேர் நேர் நேர் நிரை | மாந்தண்ணிழல் |
| 10. கயல்போல் கண்ணனை | நிரை நேர் நேர் நிரை | புளிமாந்தண்ணிழல் |
| 11.கலைபல கற்றவர் | நிரை நிரை நேர்நிரை | கருவிளந்தண்ணிழல் |
| 12. அந்தர துந்துபி | நேர் நிரை நேர் நிரை | விளந்தண்ணிழல் |

(ஈ)

13. வெங்கண் வினைப்பயன் நேர் நேர் நிரை நிரை தேமாநறுநிழல்
14. மதியோவிதுவென நிரை நேர் நிரை நிரை புளிமாநறுநிழல்
15. கொதிதிரையெறிகடல் நிரை நிரை நிரை நிரை கருவிளநறுநிழல்
16. பொன்புனை நெழுமதில் நேர் நிரை நிரை நிரை கூவிளநறுநிழல்



## 1.7 தொகுத்துக் காண்போம்

- செய்யுள் உறுப்புகளை யாப்பருங்கலக்காரிகை என்னும் நூல் வழித் தெரிந்து கொண்டீர்கள்.
- எழுத்தின் வகை குறில், நெடில், ஆவி (உயிர்), குற்றியலிகரம், குற்றியலுகரம், ஐகாரக்குறுக்கம், மெய் என்ற எட்டு வகைகளைப் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- நேரசை, நிரையசை என்ற இரண்டு அசை வகைகளைப் பற்றியும், நான்கு வகை சீர் பற்றியும் அனைத்தின் இலக்கணங்களும் குறித்தும் தெரிந்து கொண்டீர்கள்.

## 1.8 சோதித்தறியும் வினா விடைகள்

**1.** எழுத்து என்றால் என்ன? எழுத்துகளின் வகைகள் பற்றி விளக்குக

எழுதப்படுவதால் எழுத்து எனப்படுகிறது. இவ்வெழுத்து 1.குறில், 2.நெடில், 3.ஆவி(உயிர்), குறுகிய மூவுயிர் 4.குற்றியலிகரம், 5.குற்றியலுகரம், 6.ஐகாரக்குறுக்கம், 7.ஆய்தம், 8.மெய் என்பவை எழுத்து எனப்படுகிறது.

2. அசை என்றால் என்ன? அசையின் வகைகளை விளக்குக

அசைத்துச் சொல்லப்படுதலால் அசை எனப்பட்டது.

செல்வன் - இச்சொல்லைச் சொல்வதற்குச் செல் - வன் என இரண்டு முறை வாயை அசைக்கிறோம். ‘செல்வன்’ என்னும் சொல் இரண்டு அசைகளால் ஆன சொல் ஆகும்.

மணிமேகலை - இச்சொல்லைச் சொல்வதற்கு மணி – மே – கலை என மூன்று முறை வாயை அசைக்கிறோம். ‘மணிமேகலை’ என்பது மூன்று அசைகளால் ஆன சொல் ஆகும்.

அசை நேரசை நிரையசை என்று இரண்டு வகைப்படும்.

3. சீர் என்றால் என்ன? சீரின் வகைகள் பற்றி எழுதுக

ஒரு சீரில் எத்தனை அசைகள் உள்ளன என்பதையும், ஒரு சீர் எந்த அசையில் முடிந்துள்ளது என்பதையும் தெளிவாக அறிந்து கொள்ளும் பொருட்டுச் சீர்களுக்கு வழங்கும் மற்றொரு பெயர் 'வாய்பாடு' எனப்படும். வாய்பாட்டைக் குறிக்கும் சொல்லிலேயே அந்தச் சீருக்குரிய அசைகள் அடங்கி இருக்கும். சீர்கள் நான்கு வகைப்படும். அவை ஓரசைச்சீர், ஈரசைச்சீர், மூவசைச்சீர், நாலசைச்சீர் என்பனவாகும்.

## 1.9 பயிற்சி வினா

1. செய்யுள் உறுப்புகளுள் யாப்பு பற்றிய சிந்தனையை தொல்காப்பியர் வழி நின்று விளக்குக

## 1.10 மேலும் படித்தறிக

1. யாப்பருங்கலக்காரிகை, ந.மு. வேங்கடசாமிநாட்டார்-, சாரதா பதிப்பகம், சென்னை, பதிப்பு- 2005

## கூறு 2: யாப்பு - தளை, அடி, தொடை

## 2 பாட அமைப்பு

2.1 அறிமுகம்

2.2 குறிக்கோள்கள்

2.3 தளை

2.4 தளையின் வகைகள்

2.4.1 நேரொன்றாசிரியத்தளை

2.4.2 நிரையொன்றாசிரியத்தளை

2.4.3 இயற்சீர் வெண்டளை

2.4.4 வெண்சீர் வெண்டளை

2.4.5 கலித்தளை

2.4.6 ஒன்றிய வஞ்சித்தளை

2.4.7 ஒன்றாத வஞ்சித்தளை

2.5 தளை வகைச் சுருக்கம்

2.6 பாவும் தளையும்

2.7 அடி

2.8 அடியின் வகைகள்

2.9 தொடை

2.10 தொடை வகைகள்

2.11 மோனைத் தொடை வகைகள்

2.11.1 அடி மோனை

2.11.2 சீர் மோனை

2.11.2.1 இணை மோனை

2.11.2.2 பொழிப்பு மோனை

2.11.2.3 ஒரூஉ மோனை

2.11.2.4 கூழை மோனை

2.11.2.5 மேற்கதுவாய் மோனை

2.11.1.6 கீழ்க்கதுவாய் மோனை

2.11.2.7 முற்று மோனை

2.12 எதுகைத் தொடை

2.13 எதுகைத் தொடை வகைகள்

2.14 அடி எதுகை

2.15 சீர் எதுகைகள்

2.15.1 இணை எதுகை

2.15.2 பொழிப்பு எதுகை

2.15.3 ஒரூஉ எதுகை

2.15.4 கூழை எதுகை

2.15.5 மேற்கதுவாய் எதுகை

2.15.6 கீழ்க்கதுவாய் எதுகை

2.15.7 முற்று எதுகை

2.16 முரண் தொடை

2.17 முரண் தொடை வகைகள்

2.18 இயைபுத் தெடை

2.19 அளபெடைத் தொடை

2.20 தொகுத்துக் காண்போம்

2.21 சோதித்தறியும் வினா விடைகள்

2.22 பயிற்சி வினா

2.23 மேலும் படித்தறிக

குறிப்புகள்

## 2.1 அறிமுகம்

யாக்கப்படுவது யாப்பு எனப்படும். இவை செய்யுளில் பயின்று வரும். புலவர்கள் தங்கள் செய்திகளை செய்யுள் அமைப்பில் பாடும்பொழுது அவர்களுக்கென்று தனித்தன்மையைப் பின்பற்றுவார்கள். அவ்வகையில் தளை, அடி, தொடை போன்றவை அமைகின்றன. இத்தளை, அடி, தொடை போன்றவை இணை, பொழிப்பு, ஒரூஉ, கூழை, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், முற்று என்ற நிலையில் அமையும். யாப்பின் உறுப்புகளான தளை, அடி, தொடை போன்றவற்றைப் பற்றியும், அவற்றின் வகைகள் பற்றியும் எடுத்துக்காட்டுகளுடன் விரிவாக இப்பகுதியின் மூலம் தெரிந்து கொள்ளலாம்..

## 2.2 குறிக்கோள்கள்:

- யாப்பின் உறுப்புகளான தளை, அடி, தொடை போன்றவற்றைப் பற்றியும், அவற்றின் வகைகள் பற்றியும் எடுத்துக்காட்டுகளுடன் விரிவாக ஆராய்வது நோக்கமாகும். செய்யுளில் அமையும் தளை, அடி, தொடை பற்றித் தெரிந்து கொள்வீர்கள்
- தளையின் வகைகளான நேரொன்றாசிரியத்தளை, நிரையொன்றாசிரியத்தளை, இயற்சீர் வெண்டளை, வெண்சீர் வெண்டளை, கலித்தளை, ஒன்றிய வஞ்சித்தளை, ஒன்றாத வஞ்சித்தளை பற்றியும், அடி பற்றிய விளக்கங்களும், அடியின் வகைகள் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- தொடை பற்றிய வரையறைகளும், தொடையின் வகைகளான அடி மோனை, சீர் மோனை பற்றியும், சீர் மோனையானது இணை, பொழிப்பு, ஒரூஉ, கூழை, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், முற்று என்ற வகைகள் பற்றியும், எதுகை பற்றிய விளக்கங்களும், எதுகைத் தொடையின் வகைகளான அடி எதுகை, சீர் எதுகை பற்றியும், சீர் எதுகையானது இணை, பொழிப்பு, ஒரூஉ, கூழை, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், முற்று என்ற வகைகள் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.

- முரண் தொடை, முரண் தொடை வகைகள் பற்றியும், இயைபுத் தொடை, அளபெடைத் தொடைகள் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.

## 2.3 தளை

நின்ற சீரின் ஈற்றசையும் வருஞ்சீரின் முதலசையும் ஒன்றியும் ஒன்றாமலும் அமைவது தளை எனப்படும்.

எடுத்துக்காட்டு

அன்புடைமை + ஆன்ற

நேர் நிரை நேர் + நேர் நேர்

முதல் சீரின் இறுதி அசை 'நேர்' என்று முடிந்து, அடுத்த சீரின் முதல் அசை 'நேர்' என்று தொடங்குகிறது.

செய்யுள் அடிகளில் ஒரு சீரின் இறுதி அசையும் அடுத்த சீரின் முதல் அசையும் ஒன்றியும் (நேர் + நேர்) (நிரை + நிரை) ஒன்றாமலும் (நேர் + நிரை, நிரை + நேர்) செய்யுளுக்கு உரிய ஓசை அமைப்பால் கட்டப்படும். இவ்வாறு இரண்டு சீர்கள் ஓசை அமைப்பால் கட்டப்படுவது தளை எனப்படும். (தளை – கட்டு).

எடுத்துக்காட்டு

| | | |
|---|---|---|
| அகழ்வாரைத் | + | தாங்கும் |
| நிரை நேர் நேர் | + | நேர் நேர் |
| புளி மாங்காய் | | காய் முன் நேர் வந்த தளை |
| ஆன்ற | + | குடிப்பிறத்தல் |
| நேர் நேர் | + | நிரை நிரை நேர் |
| தேமா | | மா முன் நிரை வந்த தளை |

தளை கூறும்பொழுது முதல் சீர் இறுதி அசையின் வாய்பாட்டோடு அடுத்த சீரின் முதல் அசையைச் சேர்த்துக் கூற வேண்டும்.

## 2.4 தளையின் வகைகள்

தளை ஏழு வகைப்படும். அவை நேரொன்றாசிரியத்தளை, நிரை ஒன்று ஆசிரியத்தளை, இயற்சீர் வெண்டளை, வெண்சீர்

வெண்டளை, கலித்தளை, ஒன்றிய வஞ்சித்தளை, ஒன்றாத வஞ்சித்தளை என்பன.

குறிப்புகள்

### 2.4.1 நேரொன்றாசிரியத் தளை

(மா முன் நேர் வருவது) நின்ற சீரின் இறுதி வாய்பாடு மா என முடிந்து வருஞ்சீர் முதல் அசை 'நேர்' எனத் தொடங்குவது நேரொன்றாசிரியத்தளை ஆகும்.

எடுத்துக்காட்டு

சின்ன + மூக்கு

நேர் நேர் + நேர் தேமா

மா முன் நேர் வந்த நேரொன்றாசிரியத்தளை

### 2.4.2 நிரையொன்றாசிரியத்தளை

(விள முன் நிரை வருவது) நின்ற சீரின் இறுதி வாய்பாடு 'விளம்' என முடிந்து, வருஞ்சீரின் முதல் அசை 'நிரை' எனத் தொடங்குவது நிரையொன்றாசிரியத் தளை ஆகும்.

எடுத்துக்காட்டு

துளிஒளி + விளக்கின்

நிரை நிரை + நிரை கருவிளம்

விள முன் நிரை வந்த நிரையொன்றாசிரியத் தளை

### 2.4.3 இயற்சீர் வெண்டளை

(மா முன் நிரையும், விள முன் நேரும் வருவது) நின்ற சீரின் இறுதி வாய்பாடு 'மா' என முடிந்து, வருஞ்சீரின் முதல் அசை 'நிரை' எனத் தொடங்குவதும், நின்ற சீரின் இறுதி வாய்பாடு 'விளம்' என முடிந்து, வருஞ்சீரின் முதல் அசை 'நேர்' எனத் தொடங்குவதும் இயற்சீர் வெண்டளை ஆகும்.

எடுத்துக்காட்டு

1) ஊனைக் + குறித்த

நேர் நேர் + நிரை தேமா

மா முன் நிரை வந்த இயற்சீர் வெண்டளை

2) நயனொடு + நன்றி

நிரை நிரை + நேர் நேர் கருவிளம்

விள முன் நேர் வந்த இயற்சீர் வெண்டளை

**2.4.4 வெண்சீர் வெண்டளை**

(காய் முன் நேர் வருவது) நின்ற சீரின் இறுதி வாய்பாடு 'காய்' என முடிந்து வருஞ்சீரின் முதல் அசை 'நேர்' எனத் தொடங்குவது வெண்சீர் வெண்டளை ஆகும்.

எடுத்துக்காட்டு

அகழ்வாரைத் + தாங்கும்

நிரை நேர் நேர் + நேர் புளிமாங்காய்

காய் முன் நேர் வந்த வெண்சீர் வெண்டளை

**2.4.5 கலித்தளை**

(காய் முன் நிரை வருவது) நின்ற சீரின் இறுதி வாய்பாடு 'காய்' என முடிந்து, வருஞ்சீரின் முதல் அசை 'நிரை' எனத் தொடங்குவது கலித்தளை ஆகும்.

எடுத்துக்காட்டு

வானார்ந்த + பொதியின்மிசை

நேர் நேர் நேர் + நிரை தேமாங்காய்

காய் முன் நிரை வந்த கலித்தளை

**2.4.6 ஒன்றிய வஞ்சித்தளை**

(கனி முன் நிரை வருவது) நின்ற சீரின்இறுதி வாய்பாடு 'கனி' என முடிந்து, வருஞ்சீரின் முதல் அசை 'நிரை' எனத் தொடங்குவது ஒன்றிய வஞ்சித்தளை ஆகும்.

எடுத்துக்காட்டு

தண்டாமரைத் + தனி மலர்

நேர் நேர் நிரை + நிரை தேமாங்கனி

கனி முன் நிரை வந்த ஒன்றிய வஞ்சித்தளை

### 2.4.7 ஒன்றாத வஞ்சித்தளை

(கனி முன் நேர் வருவது) நின்ற சீரின் இறுதி வாய்பாடு ‘கனி’ என முடிந்து, வருஞ்சீரின் முதல் அசை ‘நேர்’ எனத் தொடங்குவது ஒன்றாத வஞ்சித்தளை ஆகும்.

எடுத்துக்காட்டு

| | | |
|---|---|---|
| வண்டோலிடும் | + | வண்டமிழகம் |
| நேர் நேர் நிரை | + | நேர் தேமாங்கனி |

கனி முன் நேர் வந்த ஒன்றாத வஞ்சித்தளை

## 2.5 தளை வகைச் சுருக்கம்

| | | |
|---|---|---|
| 1) மா முன் நேர் | - | நேரொன்றாசிரியத் தளை |
| 2) விள முன் நிரை | - | நிரையொன்றாசிரியத் தளை |
| 3) மா முன் நேர் | - | இயற்சீர் வெண்டளை |
| விள முன் நேர் | - | இயற்சீர் வெண்டளை |
| 4) காய் முன் நேர் | - | வெண்சீர் வெண்டளை |
| 5) காய் முன் நிரை | - | கலித்தளை |
| 6) கனி முன் நிரை | - | ஒன்றிய வஞ்சித்தளை |
| 7) கனி முன் நேர் | - | ஒன்றாத வஞ்சித்தளை |

## 2.6 பாவும் தளையும்

| | | |
|---|---|---|
| 1) ஆசிரியப்பா | - | நேரொன்றாசிரியத் தளை |
| | | நிரையொன்றாசிரியத் தளை |
| | | இயற்சீர் வெண்டளை |
| 2) வெண்பா | - | வெண்சீர் வெண்டளை |
| | | இயற்சீர் வெண்டளை |
| 3) கலிப்பா | - | கலித்தளை |
| | | வெண்சீர் வெண்டளை |
| 4) வஞ்சிப்பா | - | ஒன்றிய வஞ்சித்தளை |
| | | ஒன்றாத வஞ்சித்தளை |

வெண்பாவில் வெண்சீர் வெண்டளை, இயற்சீர் வெண்டளை தவிர வேறு தளைகள் வாரா. பிற பாக்களில், சிறுபான்மை வேறு தளைகளும் கலந்து வரும்.



## 2.7 அடி

சீர்கள் பல தொடர்ந்து வந்து ஓர் அடியாக அமைந்து செய்யுளுக்கு உறுப்பாவது ‘அடி’ எனப்படும்.

எடுத்துக்காட்டு

‘மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்’ (நான்கு சீர்களால் ஆன அடி)

‘தகுதியான் வென்று விடல்’ (மூன்று சீர்களால் ஆன அடி)

## 2.8 அடியின் வகைகள்

அடி ஐந்து வகைப்படும். அவை குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடி என்பன.

1) குறளடி இரண்டு சீர்களால் ஆன அடி

எடுத்துக்காட்டு -ஒண்செங் காந்தள்

2) சிந்தடி - மூன்று சீர்களால் ஆன அடி

எடுத்துக்காட்டு -இகழ்வார்ப் பொறுத்தல் தலை

3) அளவடி - நான்கு சீர்களால் ஆன அடி

எடுத்துக்காட்டு -அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை

4) நெடிலடி - ஐந்து சீர்களால் ஆன அடி

எடுத்துக்காட்டு -வரத்தின்மேல் நின்றவேத வள்ளலும் மனையில் போந்தார்

5) கழிநெடிலடி -ஐந்துக்கு மேற்பட்ட சீர்களால் ஆன அடி ஓர் அடியில் ஆறு சீர்கள் முதல் பதினான்கு சீர்கள் வரை அமைந்திருக்கும்.

எடுத்துக்காட்டு -வானுறு மதியை அடைந்ததுன்
வதனம் மறிகடல் புகுந்ததுன் கீர்த்தி
(ஏழு சீர்கள்)

## 2.9 தொடை

செய்யுள் அடிகளில் ஓசை இன்பமும் பொருள் சிறப்பும் ஏற்படும் வண்ணம் எழுத்துகளையும் சீர்களையும் அமைப்பது தொடை எனப்படும்.

"பசியும் பிணியும் பகையும் நீங்கி
வசியும் வளனும் சுரக்கென"

இச்செய்யுள் அடிகளில் பசியும், வசியும் என்னும் சீர்களில் இரண்டாம் எழுத்து (சி) ஒரே எழுத்தாக அமைந்திருப்பதால் படிப்பதற்கு ஓசை இன்பம் உண்டாகின்றது. முதல் அடியில் பசியும், பகையும் என்னும் சீர்களில் முதல் எழுத்து (ப) ஒரே எழுத்தாக அமைந்திருப்பதால் படிப்பதற்கு ஓசை இன்பம் உண்டாகின்றது. இவ்வாறு செய்யுள் அடிகளிலும் சீர்களிலும் ஓசை இன்பம் தரும் முறையில் எழுத்துகளை அமைப்பது தொடை எனப்படும். பூக்களை அழகுணர்ச்சியுடன் தொடுத்து ஆக்கும் பூமாலை காண்பதற்கு அழகாக விளங்கும். அதுபோல எழுத்துக்களையும் சீர்களையும் ஓசை இன்பமும் பொருட் சிறப்பும் உண்டாகும்படி தொடுத்து இயற்றப்படும் செய்யுள் கற்போருக்கு இன்பம் தரும்.

எடுத்துக்காட்டு

"அன்பாகி அருளாகி அறிவாகி உலகுயிரின்
முன்பாகி ஒளியாகி முதலாகி முடியாத"

## 2.10 தொடை வகைகள்

மோனை, எதுகை, முரண், இயைபு, அளபெடை, அந்தாதித் தொடை, இரட்டைத்தொடை, செந்தொடை எனத் தொடை பல வகைப்படும்.

## 2.11 மோனைத் தொடை

(முதல் எழுத்து ஒன்றி வருவது மோனை) செய்யுள் முதல் அடியின் முதல் எழுத்து அடுத்த அடிகளின் முதல் எழுத்தாக வருவதும், ஓர் அடியில் உள்ள முதல் சீரின் முதல் எழுத்து அவ்வடியில் உள்ள மற்ற சீர்களின் முதல் எழுத்தாக வருவதும் மோனைத் தொடை எனப்படும். ஓர் எழுத்துக்கு மோனையாக அதன் இன எழுத்தும் வரலாம்.

இன எழுத்துக்கள் அ, ஆ - ஒன்றுக்கு ஒன்று இனம்

உ, ஊ, ஒ, ஓ - ஒன்றுக்கு ஒன்று இனம்

எடுத்துக்காட்டு

1) நாணகத் தில்லார் இயக்கம் மரப்பாவை
நாணால் உயிர்மருட்டி யற்று

2) இன்மையுள் இன்மை விருந்தொரால் வன்மையுள்

## 2.12 மோனைத் தொடை வகைகள்

மோனைத் தொடை அடி மோனை, சீர் மோனை என இரு வகைப்படும்.

### 2.12.1 அடி மோனை

செய்யுள் முதல் அடியின் முதல் எழுத்து, அடுத்த அடிகளின் முதல் எழுத்தாக வருவது அடிமோனை ஆகும். (இன எழுத்தும் மோனையாக அமையும்)

எடுத்துக்காட்டு

**நா**ணால் உயிரைத் துறப்பர் உயிர்ப்பொருட்டால்
**நா**ண்துறவார் நாணாள் பவர்

### 2.12.2 சீர் மோனை

சீர் மோனை இணை, பொழிப்பு, ஒரூஉ, கூழை, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், முற்று என ஏழு வகைப்படும்.

#### 2.12.2.1 இணை மோனை:

அளவடியில் முதல் சீரின் முதல் எழுத்து, இரண்டாம் சீரிலும் முதல் எழுத்தாக வருவது இணை மோனை ஆகும். இன எழுத்தும் மோனையாக அமையும். (1, 2 சீர்கள்)

எடுத்துக்காட்டு: **க**மழக் **க**மழத் தமிழிசை பாடினாள்.

#### 2.12.2.2 பொழிப்பு மோனை

அளவடியில் 1, 3 சீர்களில் முதல் எழுத்து ஒன்றி வருவது பொழிப்பு மோனை எனப்படும்.

எடுத்துக்காட்டு: **ந**ண்பாற்றா ராகி **ந**யமில செய்தார்க்கும்

**2.12.2.3 ஒரூஉ மோனை**

அளவடியில் 1, 4 சீர்களில் முதல் எழுத்து ஒன்றி வருவது ஒரூஉ மோனை எனப்படும்.

எடுத்துக்காட்டு:

**அ**ணியன்றோ நாணுடைமை சான்றோர்க்கு **அ**ஃதின்றேல்.

**2.12.2.4 கூழை மோனை**

அளவடியில் 1, 2, 3 சீர்களில் முதல் எழுத்து ஒன்றி வருவது கூழை மோனை எனப்படும்.

எடுத்துக்காட்டு: **எ**ண்பதத்தால் **எ**ய்தல் **எ**ளிதென்ப யார்மாட்டும்

**2.12.2.5 மேற்கதுவாய் மோனை**

அளவடியில் 1, 3, 4 சீர்களில் முதல் எழுத்து ஒன்றி வருவது மேற்கதுவாய் மோனை எனப்படும்.

எடுத்துக்காட்டு: **பா**வை விளக்கும் **ப**லவுடன் **ப**ரப்புமின்

**2.12.2.6 கீழ்க்கதுவாய் மோனை**

அளவடியில் 1, 2, 4 சீர்களில் முதல் எழுத்து ஒன்றி வருவது கீழ்க்கதுவாய் மோனை எனப்படும்.

எடுத்துக்காட்டு: **அ**விர்மதி **அ**னைய திருநுதல் **அ**ரிவை

**2.12.2.7 முற்று மோனை**

அளவடியில் 1, 2, 3, 4 சீர்களிலும் முதல் எழுத்து ஒன்றி வருவது முற்று மோனை எனப்படும். (அனைத்துச் சீர்களிலும் மோனை இருக்கும்)

எடுத்துக்காட்டு: **க**ண்ணுங் **க**ருத்துமாய்க் **க**லைகளைக் **கா**த்தனர்

## 2.13 எதுகைத் தொடை

(இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது எதுகை) செய்யுள் அடிகளிலும் சீர்களிலும் முதல் எழுத்து அளவொத்திருக்க இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது எதுகைத் தொடை எனப்படும்.

## 2.14 எதுகைத் தொடை வகைகள்

எதுகைத் தொடை அடி எதுகை, சீர் எதுகை என இருவகைப்படும். சீர் எதுகை இணை, பொழிப்பு, ஒரூஉ, கூழை, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், முற்று என ஏழு வகைப்படும்.

**2.14.1 அடி எதுகை:** செய்யுள் அடிகளின் முதல் எழுத்து அளவொத்திருக்க இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது அடி எதுகை எனப்படும்.

எடுத்துக்காட்டு: ஒறுத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து

**2.14.2 சீர் எதுகைகள்**

**2.14.2.1 இணை எதுகை:** அளவடியில் 1, 2 சீர்களில் முதல் எழுத்து அளவொத்திருக்க இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது.

**எடுத்துக்காட்டு**: க**ற்**றாரைக் க**ற்**றது உணரார் என மதியார்

**2.14.2.2 பொழிப்பு எதுகை:** அளவடியில் 1, 3 சீர்களில் முதல் எழுத்து அளவொத்திருக்க இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது.

**எடுத்துக்காட்டு**: வே**று**வேறு சிறப்பின் வே**று**வேறு செய்வினை

**2.14.2.3 ஒரூஉ எதுகை:** அளவடியில் 1, 4 சீர்களில் முதல் எழுத்து அளவொத்திருக்க இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது

**எடுத்துக்காட்டு**: ஒ**று**த்தார்க்கு ஒருநாளை இன்பம் பொ**று**த்தார்க்கு

**2.14.2.4 கூழை எதுகை:** அளவடியில் 1, 2, 3 சீர்களில் முதல் எழுத்து அளவொத்திருக்க இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது.

**எடுத்துக்காட்டு**: ந**ன்**னிறு மெ**ன்**முகை மி**ன்**னிடை வருத்தி

**2.14.2.5 மேற்கதுவாய் எதுகை:** அளவடியில் 1, 3, 4 சீர்களில், முதல் எழுத்து அளவொத்திருக்க, இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது.

**எடுத்துக்காட்டு:** எ**ன்**னையும் இடுக்கண் து**ன்**னுவித் தி**ன்**னிசை

**2.14.2.6 கீழ்க்கதுவாய் எதுகை:** அளவடியில் 1, 2, 4 சீர்களில், முதல் எழுத்து அளவொத்திருக்க, இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது.

**எடுத்துக்காட்டு**: **இன்**மையுள் **இன்**மை விருந்தொரால் வ**ன்**மையுள்

**2.14.2.7 முற்று எதுகை:** அளவடியில் 1, 2, 3, 4 சீர்களிலும், முதல் எழுத்து அளவொத்திருக்க, இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது. (அனைத்துச் சீர்களிலும் எதுகை இருக்கும்)

**எடுத்துக்காட்டு**: துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்கு

## 2.15 முரண்தொடை

செய்யுள் அடிகளில் உள்ள முதற்சீர்களோ ஓர் அடியில் உள்ள சீர்களோ சொல்லாலும் பொருளாலும் எதிர்மறையாக அமைவது முரண்தொடை எனப்படும்.

எடுத்துக்காட்டு: நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா

(சொல்லும் பொருளும் எதிர்மறையாக இருப்பது) பழமணல் மாற்றுமின் புதுமணல் பரப்புமின், இவ்வடியில் முதல் சீர் பழமணல், மூன்றாம் சீர் புதுமணல். இவை ஒன்றுக்கு ஒன்று எதிர்மறையாக உள்ளன. முதல் சீரும் மூன்றாம் சீரும் முரண் ஆகும். (முரண் - மாறுபாடு)

## 2.16 முரண்தொடை வகைகள்

மோனை வகைகளைப் போலவே முரண்தொடையும் அடிமுரண், சீர்முரண் என இருவகைப்படும். சீர் முனை இணை, பொழிப்பு, ஒரூஉ, கூழை, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், முற்று என ஏழு வகைப்படும்.

**எடுத்துக்காட்டு**

**ஒறுத்தாரை** ஒன்றாக வையாரே வைப்பர்

**பொறுத்தாரைப்** பொன்போல் பொதிந்து – (அடிமுரண்)

**ஒறுத்தார்க்கு** ஒருநாளை இன்பம் **பொறுத்தார்க்கு** (ஒரூஉ முரண்)

**பழமணல்** மாற்றுமின் **புதுமணல்** பரப்புமின் (பொழிப்பு முரண்)

## 2.17 இயைபுத் தொடை

செய்யுளின் அடிகளிலும் இறுதி எழுத்தோ அசையோ சீரோ ஒன்றி வருவது இயைபுத் தொடை எனப்படும். சீர் இயைபுத் தொடை

வகைகள் காணும் பொழுது அளவடியில் இறுதிச்சீரே முதற்சீராகக் கொண்டு வழங்கப்படும்.

**எழுத்துக்காட்டு**

திங்கள்முடி சூடுமலை தென்றல்விளை யாடுமலை

தங்குபுயல் சூழுமலை தமிழ்முனிவன் வாழு மலை

இரண்டு அடிகளின் இறுதியிலும் ஒரே ஒலி தரும் சொற்கள் அமைந்துள்ளன. இவ்வாறு அமைவது அடி இயைபுத் தொடை எனப்படும்.

**எடுத்துக்காட்டு:**

வாழிய தேவ**பிரான்**

எங்கும் நிறைந்த**பிரான்** - அடி இயைபு

பழமணல் மாற்று**மின்** புதுமணல் பரப்பு**மின்** (பொழிப்பு இயைபு)

அன்புக்கோர் **உரைகல்லாய்** அருளுக்கோர் **நிரையில்லாய்** (பொழிப்பு இயைபு)

## 2.18 அளபெடை

அளபெடுத்து வருவது அளபெடைத் தொடை எனப்படும்.

**எடுத்துக்காட்டு**

**தாஅட் டாஅ** மரைமல ருழக்கிப் (இணை அளபெடை)

**பூஉ**க் குவளைப் **போழ** தருத்திக் (பொழிப்பு)

**காஅ**ய்ச் செந்நெற் கறித்துப் **போஒய்** (ஒரூஉ)

**மாஅ**த் **தாஅ**ண் **மோஒட்** டெருமை (கூழை)

**தேஎ**ம் புனரலிடைச் **சோஒர் பாஅ**ல் (மேற்கதுவாய்)

## 2.19 தொகுத்துக் காண்போம்

- செய்யுளில் அமையும் தளை, அடி, தொடை பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- தளையின் வகைகளான நேரொன்றாசிரியத்தளை, நிரையொன்றாசிரியத்தளை, இயற்சீர் வெண்டளை, வெண்சீர் வெண்டளை, கலித்தளை, ஒன்றிய வஞ்சித்தளை, ஒன்றாத வஞ்சித்தளை பற்றியும், அடி பற்றிய விளக்கங்களும், அடியின் வகைகள் பற்றியும தெரிந்து கொண்டீர்கள்.

- தொடை பற்றிய வரையறைகளும், தொடையின் வகைகளான அடி மோனை, சீர் மோனை பற்றியும், சீர் மோனையானது இணை, பொழிப்பு, ஒரூஉ, கூழை, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், முற்று என்ற வகைகள் பற்றியும், எதுகை பற்றிய விளக்கங்களும், எதுகைத் தொடையின் வகைகளான அடி எதுகை, சீர் எதுகை பற்றியும், சீர் எதுகையானது இணை, பொழிப்பு, ஒரூஉ, கூழை, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், முற்று என்ற வகைகள் பற்றியும் தெரிந்து கொண்டீர்கள்.
- முரண் தொடை, முரண் தொடை வகைகள் பற்றியும், இயைபுத் தொடை, அளபெடைத் தொடைகள் பற்றியும் தெரிந்து கொண்டீர்கள்.

## 2.20 சோதித்தறியும் வினா விடைகள்

**1. தளை என்றால் என்ன? தளையின் வகைகள் பற்றி விளக்குக**

நின்ற சீரின் ஈற்றசையும் வருஞ்சீரின் முதலசையும் ஒன்றியும் ஒன்றாமலும் அமைவது தளை எனப்படும்.

தளையின் வகைகளாவன நேரொன்றாசிரியத் தளை, நிரையொன்றாசிரியத் தளை, இயற்சீர் வெண்டளை, வெண்சீர் வெண்டளை, கலித்தளை, ஒன்றிய வஞ்சித்தளை, ஒன்றாத வஞ்சித்தளை என ஏழு வகைப்படும்

**2. அடி என்றால் என்ன? அடியின் வகைகள் பற்றி விளக்குக**

சீர்கள் பல தொடர்ந்து வந்து ஓர் அடியாக அமைந்து செய்யுளுக்கு உறுப்பாவது ‘அடி’ எனப்படும்.

குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடி என அடி வகைகள் ஐந்து வகைப்படும்.

**3. முரண் தொடை என்றால் என்ன? தொடையின் வகைகள் பற்றி விளக்குக**

செய்யுள் அடிகளில் உள்ள முதற்சீர்களோ ஓர் அடியில் உள்ள சீர்களோ சொல்லாலும் பொருளாலும் எதிர்மறையாக அமைவது முரண்தொடை எனப்படும்.

மோனை வகைகளைப் போலவே முரண்தொடையும் அடிமுரண், சீர்முரண் என இருவகைப்படும். சீர் முனை இணை, பொழிப்பு, ஒரூஉ, கூழை, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், முற்று என ஏழு வகைப்படும்.

### 2.21 பயிற்சி வினா

1.செய்யுளுக்கு உறுப்பாக அமையும் தளை, அடி, தொடை பற்றி விரிவாக விளக்குக

### 2.22 மேலும் படித்தறிக

யாப்பருங்கலக்காரிகை, குணசாகரர் உரை, திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை 101.

## கூறு 3: வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா,

3. பாட அமைப்பு
3.1 அறிமுகம்
3.2 குறிக்கோள்கள்
3.3 பா வகைகள்
3.4 வெண்பாவின் பொது இலக்கணம்
3.5 வெண்பாவின் வகைகள்
3.5.1 குறள் வெண்பா
3.5.1.1 குறள்வெண்பாவின் இனங்கள்
3.5.1.1.1 குறள்வெண் செந்துறை
3.5.1.1.2 குறட்டாழிசை
3.5.2 நேரிசை வெண்பா
3.5.2.1 ஒரு விகற்ப நேரிசை வெண்பா
3.5.2.2 இரு விகற்ப நேரிசை வெண்பா
3.5.3 இன்னிசை வெண்பா
3.5.4 சிந்தியல் வெண்பா
3.5.4.1 நேரிசைச் சிந்தியல் வெண்பா
3.5.4.2 இன்னிசைச் சிந்தியல் வெண்பா
3.5.5 பஃறொடை வெண்பா

3.6 வெண்பாவின் இனங்கள்

3.6.1 வெண்டாழிசை

3.6.2 வெண்டுறை

3.6.3 வெண்விருத்தம்

3.7 ஆசியப்பாவின் பொது இலக்கணம்

3.8 ஆசிரியப்பாவின் வகைகள்

3.8.1 நேரிசை ஆசிரியப்பா

3.8.2 நிலைமண்டில ஆசிரியப்பா

3.8.3 இணைக்குறள் ஆசிரியப்பா

3.8.4 அடிமறிமண்டில ஆசிரியப்பா

3.9 ஆசிரியப்பாவின் இனங்கள்

3.9.1 ஆசிரியத் தாழிசை

3.9.2 ஆசிரியத்துறை

3.9.3 ஆசிரிய விருத்தம்

3.10 கலிப்பாவின் பொது இலக்கணம்

3.11 கலிப்பாவின் உறுப்புகள்

3.11.1 தரவு

3.11.2 தாழிசை

3.11.3 அராகம்

3.11.4 அம்போதரங்கம்

3.11.5 தனிச்சொல்

3.11.6 சுரிதகம்

3.12 கலிப்பாவின் வகைகள்

3.12.1 நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா

3.12.2 அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா

3.12.3 வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா

3.12.4 வெண்கலிப்பா

3.12.5 கலிவெண்பா

3.12.6 கொச்சகக் கலிப்பா

3.12.6.1 தரவு கொச்சகக் கலிப்பா

3.12.6.2 தரவிணைக் கொச்சகக் கலிப்பா

3.12.6.3 சி∴றாழிசைக் கொச்சகக் கலிப்பா

குறிப்புகள்

## 3.1 அறிமுகம்

பாவகைகளைப் பற்றிப் படிப்பதன் மூலம் மாணவர்கள் தங்களின் படைப்புத் திறனை வெளிப்படுத்த முடியும். இப்பாவகைகள் மரபுக் கவிதை எழுதுவதற்குத் துணைபுரிகின்றன. இவற்றை மாணவர்கள் அறிந்து கொள்வதால் பண்டைக்கால செய்யுள் அமைப்புப் பற்றிய தெளிவை அடைதல்.

செய்யுள் அமைக்கும் போது இன்ன பாவகையில் தான் பாடவேண்டும் என்ற மரபைத் பண்டைத் தமிழ்ப் புலவர்கள் இலக்கணம் வகுத்தனர். அதன்படி இங்கு பாவகைகளான வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா ஆகியவற்றின் இலக்கணங்கள் இங்கு அறிமுகப்படுத்தப்படுகின்றன.

## 3.2 குறிக்கோள்கள்

- பா வகைகளான வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா ஆகியவற்றின் பொது இலக்கணத்தைப் பற்றி அறிந்து கொள்வீர்கள்.
- அவற்றின் வெண்பாவின் வகைகளான குறள் வெண்பா, நேரிசை வெண்பா, இன்னிசை வெண்பா, சிந்தியல் வெண்பா, ப:்றொடை வெண்பா ஆகியவற்றின் இலக்கணங்களைப் பற்றி அறிந்து கொள்வீர்கள்.
- ஆசிரியப்பாவின் வகைகளான நேரிசை ஆசிரியப்பா, நிலைமண்டில ஆசிரியப்பா, இணைக்குறள் ஆசிரியப்பா, அடிமறிமண்டில ஆசிரியப்பா ஆகியவற்றின் இலக்கணங்களைப் பற்றி அறிந்து கொள்வீர்கள்.
- கலிப்பாவின் வகைகளான நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா, அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா, வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா, வெண்கலிப்பா, கலிவெண்பா, கொச்சகக் கலிப்பா ஆகியவற்றின் இலக்கணங்களையும் பற்றியும் அறிந்து கொள்வீர்கள்.

## 3.3 பா வகைகள்

பா வகைகள் வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என நான்கு வகைப்படும்.

## 3.4 வெண்பாவின் பொது இலக்கணம்

1. வெண்பாவின் ஈற்றடி முச்சீராகவும், ஏனைய அடிகள் நான்கு சீர்களாகவும் இருக்கும்.
2. இயற்சீரும் வெண்சீரும் பயின்று வரும்.
3. இயற்சீர் வெண்டளையும், வெண்சீர் வெண்டளையும் பெற்று வரும்.
4. ஈற்றடியின் ஈற்றுச்சீர் நாள், மலர், காசு, பிறப்பு என்ற வாய்பாடுகளில் ஒன்றைப் பெற்று முடியும்.
5. செப்பலோசை பெற்று வரும்.

6. இரண்டடி முதல் பன்னிரண்டு அடிகள் வரை வரும்.
7. ஒரு விகற்பமாகவோ – பல விகற்பமாகவோ வரும்.

## 3.5 வெண்பாவின் வகைகள்

குறள் வெண்பா, நேரிசை வெண்பா, இன்னிசை வெண்பா, சிந்தியல் வெண்பா, ப.்.றொடை வெண்பா என ஐந்து வகைப்படும்.

### 3.5.1 குறள் வெண்பா

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக

இக்குறள் வெண்பா முதலடியின் முதற்சீரும் இரண்டாமடியின் முதற்சீரும் ஒரே எதுகையைப் பெற்று வந்தமையால் 'ஒரு விகற்பக் குறள் வெண்பா' எனப்படும்.

மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற

இக்குறள் வெண்பாவில் முதலடியின் முதற்சீரிலும் இரண்டாம் அடியின் முதற்சீரிலும் எதுகை ஒன்றாக அமையாது இரண்டு விதமாக அமைந்துள்ளதால் 'இருவிகற்பக் குறள் வெண்பா' எனப்படும்.

#### 3.5.1.1 குறள் வெண்பாவின் இனங்கள்

குறள்வெண் செந்துறை, குறட்டாழிசை ஆகிய இரண்டும் குறள்வெண்பாவின் இனங்களாகும்.

#### 3.5.1.1.1 குறள்வெண் செந்துறை

இது செந்துறை வெள்ளை என்றும் பெயரிட்டு வழங்கப் பெறும். இரண்டடியாய்த் தம்முள் அளவொத்து விழுமிய பொருளும் ஒழுகிய ஓசையும் உடையதாகய் வரப்பெறுவது குறள்வெண் செந்துறை ஆகும்.

சான்று

ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
ஓதலிற் சிறந்ததன் றொழுக்க முடைமை

**3.5.1.1.2 குறட்டாழிசை**

இது தாழிசைக் குறள் எனவும் பெயர் பெறும். நாற்சீரின் மிக்க பல சீர்களான் வந்து இரண்டடியாய் ஈற்றடி குறைந்து வரப்பெறுவது குறட்டாழிசையாகும்.

சான்று

நண்ணு வார்வினை நைய நாடொறு நற்ற வர்க்கர சாய
ஞானநற் கண்ணி னானடி யேயடை வார்கள் கற்றவரே

## 3.5.2 நேரிசை வெண்பா

வேண்பாவின் பொது இலக்கணம் பெற்று நான்கடிகளாய் இரண்டாம் அடியின் இறுதிச் சீர் தனிச்சொல் பெற்று வருவது 'நேரிசை வெண்பா' எனப்படும். இதுவும் ஒரு விகற்ப நேரிசை வெண்பா, இருவிகற்ப நேரிசை வெண்பா என அமையும்.

**3.5.2.1 ஒரு விகற்ப நேரிசை வெண்பா**

மல்லல்மா ஞாலத்து வாழ்ப வருளெல்லாஞ்
செல்வ ரெனினுங் கொடாதார் - நல்கூர்ந்தார்
நல்கூர்ந்தக் கண்ணும் பெருமுத் தரையரே
செல்வரைச் சென்றிரவா தார்.

வெண்பாவிற்குரிய இலக்கணம் பெற்று நான்கு அடிகளாய் இரண்டாம் அடியின் இறுதியில் தனிச்சொல் பெற்று நான்கடிகளிலும் ஒரே எதுகையைப் பெற்றுள்ளமையால் இஃது 'ஒரு விகற்ப நேரிசை வெண்பா' எனப்படும்

**3.5.2.2 இரு விகற்ப நேரிசை வெண்பா**

சாதி இரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்
நீதி வழுவா நெறிமுறையின் - மேதினியில்
இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கில் உள்ள படி.

நேரிசை வெண்பாவிற்குரிய இலக்கணத்தைப் பெற்று முதலிரண்டு அடிகளில் முதற்சீர் ஓர் எதுகையாகவும் பின் இரண்டு அடிகளில் முதற்சீர் வேறோர் எதுகையாகவும் வந்துள்ளமையால் இஃது 'இரு விகற்ப நேரிசை வெண்பா' எனப்படும்.

### 3.5.3 இன்னிசை வெண்பா

வெண்பாவிற்குரிய பொது இலக்கணம் பெற்று, நான்கடிகளால் தனிச்சொல் இன்றி வருவது 'இன்னிசை வெண்பா' எனப்படும்.

வைகலும் வைகல் வரக்கண்டு ம.்.துணரார்
வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர்
வைகலும் வைகற்றம் வாழ்நாண்மேல் வைகுதல்
வைகலை வைத்துணரா தார்.

இது ஒரு விகற்பத்தோடு தனிச்சொல் இன்.றி வந்த இன்னிசை வெண்பா.

கடித்துக் கரும்பினைக் கண்டகர நூறி
இடித்துநீர் கொள்ளினு மின்சுவைத்தே யாகும்
வடுப்பட வைத்திறந்தக் கண்ணுங் - குடிப்பிறந்தார்
கூறார் தம்வாயிற் சிதைந்து.

இது மூன்று விகற்பத்தோடு மூன்றாம் அடியில் தனிச்சொல் பெற்று வந்த இன்னிசை வெண்பா.

### 3.5.4 சிந்தியல் வெண்பா

வெண்பாவின் பொது இலக்கணத்தோடு, மூன்றடிகள் பெற்று வருவது 'சிந்தியல் வெண்பா' எனப்படும். இது நேரிசைச் சிந்தியல் வெண்பா, இன்னிசைச் சிந்தியல் வெண்பா என இருவகைப்படும்.

#### 3.5.4.1 நேரிசைச் சிந்தியல் வெண்பா

அறிந்தானை ஏத்தி அறிவாங் கறிந்து
சிறந்தார்க்குச் செல்வ னுரைப்ப – சிறந்தார்
சிறந்தமை யாராய்ந்து கொண்டு

எடுத்துக்காட்டு

விருந்தினர் மூத்தோர் பசுசிறைப் பிள்ளை
இவர்க் கூண் கொடுத்தல்லால் உண்ணார் - என்றும்
ஒழுக்கம் பிழையா தவர்.

நேரிசை வெண்பாவைப் போல் இரண்டாம் அடியின் இறுதியில் தனிச்சொல் பெற்று மூன்று அடிகளால் வந்த நேரிசைச் சிந்தியல் வெண்பாவாகும்.

**3.5.4.2 இன்னிசைச் சிந்தியல் வெண்பா**

எடுத்துக்காட்டு

திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்
கொங்கலர்த்தார்ச் சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ்
வங்கண் உலகளித்த லான்.

இது இன்னிசை வெண்பாவைப் போல் தனிச்சொல் இன்றி ஒரு விகற்பத்தோடு மூன்றடிகளால் வந்த 'இன்னிசைச் சிந்தியல் வெண்பா' ஆகும்.

**3.4.5 ப∴றொடை வெண்பா**

வெண்பாவிற்குரிய பொது இலக்கணம் பெற்று ஐந்தடிகள் முதல் பன்னிரண்டடிகள் வரை வருவது 'ப∴றொடை வெண்பா' எனப்படும். (பல் + தொடை – ப∴றொடை)

எடுத்துக்காட்டு

நன்றி யறிதல் பொறையுடைமை இன்சொல்லோடு
இன்னாத எவ்வுயிர்க்கும் செய்யாமை கல்வியோடு
ஒப்புரவு ஆற்ற அறிதல் அறிவுடைமை
நல்லினத் தாரோடு நட்டல் இவையெட்டும்
சொல்லிய ஆசார வித்து.

இது ஐந்து அடிகள் கொண்ட ப∴றொடை வெண்பா.

## 3.6 வெண்பாவின் இனங்கள்

வெண்டாழிசை, வெண்டுறை, வெண்விருத்தம் என்ற மூன்றும் வெண்பாவின் இனங்களாகும்.

### 3.6.1 வெண்டாழிசை

மூன்றடியாய் இறுதியடி வெண்பாவே போன்று முச்சீரான் முடியப் பெறுவது வெண்டாழிசை ஆகும். இது வெள்ளொத்தாழிசை எனவும் வழங்கப் பெறும்.

சான்று

நண்பி தென்று தீய சொல்லார்
முன்பு நின்று முனிவு செய்யார்
அன்பு வேண்டு பவர்

### 3.6.2 வெண்டுறை

இது மூன்றடிச் சிறுமையாகவும் ஏழடிப் பெருமையாகவும் வரும். இடையிடை நான்கடியாகவும், ஐந்தடியாகவும், ஆறடியாகவும் வந்து பின்பிற் சிலவடி சிலசீர் குறைந்து வரும். எல்லா அடிகளும் ஒரே ஓசையாய் வருவது ஓரொலி வெண்டுறை எனப்படும். முன்பிற் சிலவடி ஒரோசையாகவும் பின்பிற் சிலவடி மற்றோரோசையாகவும் வருவது வேற்றொலி வெண்டுறை எனப்படும்.

சான்று

குழலிசைய வண்டினங்கள் கோழிலைய செங்காந்தட் குலை மேற்பாய
ஆழலெரியின் மூழ்கினவா லந்தோ வளியவென் றயல்வாழ் மந்தி
கலுழ்வனபோ னெஞ்ச யர்ந்து கல்லருவி தூஉம்
நிழல்வரை நன்னாட னீப்பனோ வல்லன்.

இது நான்கடியாய் ஈற்றடி இரண்டு இரண்டு சீர் குறைந்து வந்த ஓரொலி வெண்டுறையாகும்.

### 3.6.3 வெளிவிருத்தம்

மூன்றடியானும் நான்கடியானும் வந்து அடிதோறும் ஒரு சொல்லே தனிச்சொல்லாக இறுதியில் வந்து அமையுமானால் அது வெளிவிருத்தம் எனப்பெறும். தனிச்சொல் ஐந்தாவது சீராக வரப்பெறும்.

சான்று

ஆவா வென்றே அஞ்சின ராழ்ந்தார் - ஒருசாரார்
கூகூ வென்றே கூவிளி கொண்டார் - ஒருசாரார்
மாமா வென்றே மாய்ந்தனர் நீந்தார் - ஒருசாரார்
ஏகீர் நாய்கீர் என்செய்தும் என்றார் - ஒருசாரார்.

இது நான்கடியாய் ‘ஒருசாரார்’ என்னும் தனிச்சொல் பெற்று வந்த வெளிவிருத்தமாகும்.

## 3.7 ஆசிரியப்பாவின் பொது இலக்கணம்

1. அடிதோறும் நான்கு சீர்களைப் பெற்று வரும்.

2. பெரும்பாலும் ஈரசைச் சீர்களாகிய மாச்சீர் - விளச்சீர் (ஆசிரிய உரிச்சீர்கள்) பெற்று வரும்.

3. வஞ்சி உரிச்சீர்கள் வாரா.

4. நேரொன்றாசிரியத்தளையும் நிரையொன்றாசிரியத்தளையும் மிகுந்து வரும்.

5. குறைந்தது மூன்றடிகள் கொண்டும், மிகுதியாக பாடுவோரின் எண்ணப்படி மிக்கும் வரும்.

6. ஈற்றடியின் இறுதிச்சீர் ஏ, ஐ, ஓ, ஈ, ஆய், என் - என்னும் அசைகளுள் ஒன்றைக் கொண்டு முடியும். 'ஏகாரத்தால்' முடிவதே சிறப்பாகும்.

7. அகவல் ஓசை பெற்று வரும். அகவல் ஓசை உடையதால் 'அகவற்பா' எனவும் பெயர் பெறும்.

## 3.8 ஆசிரியப்பாவின் வகைகள்

ஆசிரியப்பா நேரிசை ஆசிரியப்பா, நிலைமண்டில ஆசிரியப்பா, இணைக்குறள் ஆசிரியப்பா, அடிமறிமண்டில ஆசிரியப்பா என நான்கு வகைப்படும்.

### 3.8.1 நேரிசை ஆசிரியப்பா

ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே
சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே
ஒளிறுவா ளருஞ்சம முருக்கிக்
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே!

இச்செய்யுள் ஆசிரியப்பாவிற்குரிய இலக்கணம் பெற்று, ஈற்றயலடி மூன்று சீர்கள், ஏனைய அடிகள் நான்கு சீர்கள் பெற்று வருவதனால் இது 'நேரிசை ஆசிரியப்பா' எனப்படும்.

### 3.8.2 நிலைமண்டில ஆசிரியப்பா

நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்
அதனால் யான்உயிர் என்பது அறிகை
வேன்மிகு தானை வேந்தர்க்குக் கடனே

இச்செய்யுள் ஆசிரியப்பாவின் பொது இலக்கணம் பெற்று அனைத்து அடிகளிலும் நான்கு சீர்கள் பெற்று வருவதனால் 'நிலைமண்டில ஆசிரியப்பா' ஆகும்.

### 3.8.3 இணைக்குறள் ஆசிரியப்பா

நீரின் தண்மையும் தீயின் வெம்மையும்
சாரச் சார்ந்து
தீரத் தீரும்
சாரல் நாடன் கேண்மை
சாரச் சாரச் சார்ந்து:
தீரத் தீரத் தீர்பொல் லாதே!

இச்செய்யுள் ஆசிரியப்பாவின் பொது இலக்கணம் பெற்று, முதலடியும் ஈற்றடியும் நான்கு சீர்களாகவும் இடையிடையே இருசீர் அடிகளாகவும் முச்சீர் அடிகளாகவும் அமைவதனால் இஃது 'இணைக்குறள் ஆசிரியப்பா' எனப்படும்.

### 3.8.4 அடிமறி மண்டில ஆசிரியப்பா

மாறாக் காதலர் மலைமறந் தனரே
ஆறாக் கட்பனி வரலா னாவே!
வேறா மென்றோள் வளைநெகி ழும்மே!
கூறாய் தோழி யான்வாழு மாறே!

இச்செய்யுள் ஆசிரியப்பாவின் பொது இலக்கணம் பெற்று, ஒவ்வோர் அடிக்குள்ளும் பொருள் முடியுமாறும் அடிகளை மாற்றி அமைத்தாலும் பொருளும் ஓசையும் கெடாமல் இருப்பதாலும் 'அடிமறிமண்டில ஆசிரியப்பா' எனப்படும்.

## 3.9 ஆசிரியப்பாவின் இனங்கள்

ஆசிரியத் தாழிசை, ஆசிரியத் துறை, ஆசிரிய விருத்தம் ஆகிய மூன்றும் ஆசிரியப்பாவின் இனங்களாகும்.

### 3.9.1 ஆசிரியத் தாழிசை

மூன்றடியாய்த் தம்முள் அளவொத்து வருவன ஆசிரியத் தாழிசை எனப்படும். இது ஒரு பொருள் மேல் மூன்றடுக்கி வருவது சிறப்புடையது. தனியே வரப்பெறினும் ஆசிரியத் தாழிசையாகவே கொள்ளப்படும்.

சான்று

கன்று குணிலாக் கனியுகுத்த மாயவன்
இன்றுநம் மானுள் வருமே லவன்வாயிற்
கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழி
பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாயவன்
ஈங்குநம் மானுள் வருமே லவன்வாயில்
ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழி
கொல்லையஞ் சாரற் குருந்தொசித்த மாயவன்
எல்லிநம் மானுள் வருமே லவன்வாயின்
முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழி

இவை ஒரு பொருள் மேல் மூன்றடுக்கி வந்த ஆசிரியத் தாழிசை.

### 3.9.2 ஆசிரியத் துறை

இதற்குச் சீர் வரையறை கிடையாது. நான்கடியாய் வருவது இதன் பொது இலக்கணம். நான்கடியாய் ஈற்றயலடி குறைந்தும், நான்கடியாய் ஈற்றயலடி குறைந்து இடைமடக்காயும், நான்கடியாய் இடை இடை குறைந்து இடைமடக்காயும் வருவன எல்லாம் ஆசிரியத் துறை என்று வழங்குவர். இவற்றுள் ஈற்றயலடி குறைந்து வருவனவற்றை ஆசிரிய நேர்த்துறை என்றும் இடை இடை குறைந்து வருவனவற்றை ஆசிரிய இணைக்குறட்டுறை என்றும் கூறுவதுண்டு.

சான்று

கரைபொரு கான்யாற்றங் கல்லத ரெம்முள்ளி வருதி ராயின்
அரையிருள் யாமத் தடுபுலியே றும்மஞ்சி யகன்று போக
நரையுறு மேறுநுங் கைவே லஞ்சு நும்மை
வரையர மங்கையர் வௌவுத லஞ்சுதும் வார லையோ
இது நான்கடியாய் ஈற்றயலடி குறைந்து வந்த ஆசிரியத்துறை

### 3.9.3 ஆசிரிய விருத்தம்

அளவொத்த கழிநெடிலடி நான்காய் வருவன ஆசிரிய விருத்தமாகும். ஐந்து சீர் கொண்ட அடிகளிலிருந்து பத்து சீர் கொண்ட அடிகள் வரை ஆசிரிய விருத்தம் வரப் பெறும். இருப்பினும் எட்டு சீர்க்கு அதிகமாக வரக்கூடிய ஆசிரிய விருத்தம் சிறப்பில்லாதனவாகும்.

சான்று

விடஞ்சூ ழரவி னிடைநுடங்க
மினல்வான் விரையார் வேங்
கடஞ்சூழ் நாடன் காளிங்கன்
கதிர்வேல் பாடும் மாதங்கி
வடஞ்சேர் கொங்கை மலைதாந்தாம்
வடிக்கண் ணீலமலர் தாந்தாம்
தடந்தோ ளிரண்டும் வேய்தாந்தா
மென்னுந் தன்கைத் தண்ணுமையெ

இ.்.து அறுசீர்க் கழிநெடிலடியான் வந்த ஆசிரிய விருத்தம் ஆகும்.

## 3.10 கலிப்பாவின் பொது இலக்கணம்

1. நாற்சீர் கொண்ட அளவடி உடையதாய் வரும்.
2. வெண்சீர் மிகப்பெற்று வரும்.
3. மாச்சீரும் விளங்கனிச்சீரும் பெறாமல் ஏனைய சீர்கள் சிறுபான்மையாகக் கொண்டு வரும்.
4. கலித்தளையும் பிற தளையும் தழுவி வரும்.
5. துள்ளலோசை உடையது.
6. மூன்றடிச் சிறுமை உடையதாய், தரவு, தாழிசை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்னும் ஆறு உறுப்புகளுள் ஏற்பன கொண்டு முடியும்.

## 3.11 கலிப்பாவின் உறுப்புகள்

தரவு, தாழிசை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் ஆகிய ஆறும் கலிப்பாவின் உறுப்புகளாகும்.

### 3.11.1 தரவு

இது கலிப்பாவின் முதல் உறுப்பாகும். தரவு என்பதை எருத்தம் என்றும் கூறுவர். இது சிறுமை மூன்றடியாகவும் பெருமை வரையறை இல்லாமலும் வரப்பெறும். இவ்வுறுப்பு பாடலின் பொருளைத் தொகுத்து முதலில் சுட்டுவதால் தரவு எனப்படும்.

### 3.11.2 தாழிசை

இதுவும் முதல் உறுப்பு என்ற தகுதி பெற்றது. தாழம்பட்ட ஓசையை உடையதால் தாழிசை எனப்பெயர் பெற்றது. இது கலிப்பாவின் இடையில் வரும். சுருக்கம் இரண்டடியாகவும் பெருக்கம் நான்கடியாகவும் வரும்.

### 3.11.3 அராகம்

இது துணையுறுப்பு என்ற தகுதி பெற்றது. முடுகிய ஓசையுடையது. முடுகியல், வண்ணகம், அடுக்கியல் என்பன இதன் வேறு பெயர்களாகும். அளவடி முதலாய எல்லா அடியானும் வரப்பெறும். சிறுமை நான்கடி பெருமை எட்டடி. இது தாழிசையை அடுத்தும் அம்போதரங்கத்திற்கு முன்னும் அமைந்து வரும்.

### 3.11.4 அம்போதரங்கம்

தரங்கம் என்றால் அலை என்று பொருள். நீரலையானது கடலிடைத் தோன்றும் பொழுது உயர்ந்தும் குறுகியும் காணப்படும். கரைக்கு வரவர அகன்றும் விரிந்தும் குறைந்தும் வரப்பெறும். அதுபோல நாற்சீரடியும் முச்சீரடியும் இருசீரடியும் ஆகிய அடிகளைப் பெற்று வருவதால் அம்பொதரங்கள் எனப்பட்டது. இது தாழிசைக்கும் தனிச்சொல்லுக்கும் நடுவேயோ அராகத்திற்கும் தனிச்சொல்லுக்கும் நடுவேயோ வரப்பெறும். அசையடி, பிரிந்திசைக்குறள், சொற்சீரடி, எண் என்பன இதன் வேறுபெயர்களாகும்.

நாற்சீரடி இரண்டு கொண்ட அம்போதரங்கம் பேரெண் எனவும், நாற்சீர் ஓரடி நான்கு கொண்ட அம்போதரங்கம் அளவெண் எனவும், முச்சீரடி நான்கோ எட்டோ கொண்ட அம்போதரங்கம் இடையெண்

எனவும், இருசீரடி எட்டோ பதினோறோ கொண்ட அம்போதரங்கம் சிற்றெண் எனவும் பெயர் பெறும்.



### 3.11.5 தனிச்சொல்

ஒரு சீரே அடியாக வருவதால் தனிச்சொல் எனப்பட்டது. இது பெரும்பாலும் சுரிதகத்தின் முன்னும் சில இடங்களில் மற்றைய உறுப்புகளின் இடையிலும் வரப்பெறும். விட்டிசை, கூன், தனிநிலை என்பன இதன் வேறு பெயர்கள்

### 3.11.6 சுரிதகம்

இது கலிப்பாவின் இறுதி உறுப்பாக அமையும். நீர்ச்சுழி போல் மற்றைய உறுப்புகளின் பொருள்களைத் தன்பால் அடக்கி முடிப்பது. சுருங்கங்கூறின் முடிப்புரை போல நிற்பது. இது ஈற்றயலடி முச்சீராக வரின் ஆசிரியச் சுரிதகம் எனவும் ஈற்றடி முச்சீராக வரின் வெண்பாச் சுரிதகம் எனவும் பெயர் பெறும். அடக்கியல், வாரம், வைப்பு, போக்கியல் என்பன இதன் வேறுபெயர்கள்.

## 3.12 கலிப்பாவின் வகைகள்

நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா, அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா, வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா, வெண்கலிப்பா, கலிவெண்பா, கொச்சகக் கலிப்பா என்று ஆறு வகைப்படும்.

### 3.12.1 நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா

முன் ஒரு தரவு வந்து அதன் பின்பு மூன்று தாழிசை வந்து அதன்பின் ஒரு தனிச்சொல் வந்து அதன்பின் வெண்பாவானது ஒரு சுரிதக உறுப்புப் பெற்று வருவது நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா எனப்படும்.

சான்று

வாணெடுங்கண் பனிகூர வண்ணம்வே றாய்த்திரிந்து
தோணெடுந் தகைதுறந்து துன்பங்கூர் பசப்பினவாய்ப்

இது தரவு

சூருடைய கடுங்கடங்கள் வெலற்கரிய வென்பவாற்
பீருடைய நலந்தொலையப் பிரிவாரோ பெரியவரே
சேணுடைய கடுங்கடங்கன் செலற்கரிய வெண்பாவால்
நாணுடைய நலந்தொலைய நடப்பாரோ நலமிலரே
சிலம்படைந்த வெங்கானஞ் சீரிலவே யென்பவாற்
புலம்படைந்த நலந்தொலையப் போவாரோ பொருளிலரே

இவை மூன்றும் தாழிசை.

எனவாங்கு

இது தனிச்சொல்

அருளெனு மிலராய்ப் பொருள்வயிற் பிரிவோர்
பன்னெடுங் காலமும் வாழியர்
பொன்னெடுத் தேரோடு தானையிற் பொலிந்தே

இது சுரிதகம்

இப்பாடல் தரவு மூன்றடியாய்த் தாழிசை மூன்றும் இரண்டிரண்டடியாய்த் தனிச்சொல் பெற்று மூன்றடி ஆசிரியச் சுரிதகத்தால் முடிந்த நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பாவாகும்.

### 3.12.2 அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா

நாற்சீர் அடியும் முச்சீர் அடியும் இருசீர் அடியும் ஆகிய அசையடிகளைத் தாழிசைக்கும், தனிச்சொல்லுக்கும் நடுவே தொடுத்துத் தரவு தாழிசை அம்போதரங்கம் தனிச்சொல் சுரிதகம் என்னும் ஐந்து உறுப்புடைத்தாய் வருவது அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா எனப்படும்.

சான்று

'கெடலரு மாமுனிவர் கிளர்ந்துடன் தொழுதேத்த' பாடலில் அம்போதரங்கம் என்னும் உறுப்பு கீழ்க்காணுமாறு அமைந்துள்ளது.

இலங்கொளி மகரத் தெழின்மிகு வியன் கடல்
வலம்புரித் தடக்கையின் மாஅ னின்னிறம்
விரியிணர்க் கோங்கமும் வெந்தெரி பசும்பொனும்
பொருகளி றட்டோய் புரையு நின்னுடை

இசை நாற்சீர் ஈரடி இரண்டாம் போதரங்கம் (பேரெண்)

கண்கவர் கதிர்முடி கனலுஞ் சென்னியை

தண்கட ருறுபகை தவிர்ந்த வாழியை
ஒலியிய லுவண மோங்கிய கொடியினை
வலிமிகு சகட மாற்றிய வடியினை
இவை நாற்சீர் ஓரடி நான்கு அம்போதரங்கம் (அளவெண்)
போரவுணர்க் கடந்தோய் நீ
புணர்மருதம் பிளந்தோய் நீ
நீரகல மளந்தோய் நீ
நிழறிகழைம் படையோய் நீ
இவை முச்சீர் ஓரடி நான்கு அம்போதரங்கம் (இடையெண்)
ஊழி நீ உருவு நீ
உலகு நீ அருவு நீ
ஆழி நீ அறமு நீ
அருளு நீ மறமு நீ
இசை இருநீர் ஓரடி எட்டு அம்போதரங்கம் (சிற்றெண்)

### 3.12.3 வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா

அம்போதரங்க உறுப்பிற்கும் தாழிசைக்கும் நடுவே அராக உறுப்புப் பெற்றுத் தரவு தாழிசை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்னும் ஆறு உறுப்புகளையும் உடையதாய் வருவது வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா எனப்படும்.

சான்று

'விளங்கு மணிப் பசும்பொன்னின் விரித்தமைமைத்துக் கதிர்கான்று' என்று தொடங்கும் பாடலில் அராகம் கீழ்க்காணுமாறு அமைந்துள்ளது.

தாதுறு முறிசெறி தடமல ரிடையிடை தழலென விரிவன பொழில்
போதறு நறுவிரை புதுமலர் தெரிதெரு கருநெய்தல் விரிவன கழி
தீதறு திறமறு கெனநனி முனிவன துணையொடு பிணைவன துறை
மூதறு மொலிகலி நுரைதரு திரையொடு கழிதொடர் புடையது கடல்
இவை நான்கும் அராகம்.

### 3.12.4 வெண்கலிப்பா

கலித்தளை அமைந்து கலியோசை தழுவியும், வெண்தளை அமைந்து வெள்ளோசை தழுவியும் வரும். ஈற்றடி சிந்தடியாய் முடிவது வெண்கலிப்பா எனப்படும். இதில் ஆசிரியத்தளையும் கலந்து வரலாம்.

சான்று

வாளார்ந்த மழைத்தடங்கண் வனமுலைமேல் வம்பனுங்கக்
கோளார்ந்த பூணாகங் குழைபுரளக் கோட்டெருத்தின்
மாலைதாழ் கூந்தலர் வரன்முறையான வந்தேத்தச்
சோலைதாழி பிண்டிக்கீழ்ச் சூழ்ந்தவர்தஞ் சொன்முறையான்
மனையறமுந் துறவறமு மண்ணவர்க்கும் விண்ணவர்க்கும்
வினையறுக்கும் வனை தெரிந்து வீடொடுகட் டிவையுரைத்த
தொன்மைசால் மிகுகுணத்தெந் துறவரசைத் தொழுதேத்த
நன்மைசால் வீடெய்து மாறு

இது கலித்தளையானும் துள்ளல் ஓசையானும் வந்தமையால் வெண்கலிப்பா எனப்பெறும்.

### 3.12.5 கலிவெண்பா

வெண்டளைகளால் அமைந்து வெள்ளோசை கொண்டு பல அடிகள் வந்து ஈற்றடி சிந்தடியாக வருவது கலிவெண்பா ஆகும். பல அடிகளால் வரும் வெண்பா, ப∴றொடை வெண்பா. தொல்காப்பியர் வெண்பாவுக்குக் கூறிய இலக்கணத்தின்படி ப∴றொடை வெண்பா 12 அடிகளுக்குள் அமையும். அதற்கு மேல் அடிகள் பெற்று வருவது கலிவெண்பா என்று கொள்ளலாம். இது ஒரு கருத்து. ஒரே பொருள் பற்றியதாக வருவது கலிவெண்பா என்றும், அவ்வாறு வராதது ப∴றொடை வெண்பா என்றும் வேறுபாடு காட்டுவது மற்றொரு கருத்து. எவ்வாறு இருப்பினும் கலித்தளைகளோ, பிறதளைகளோ கலக்காமல் முழுமையும் வெண்டளைகளால் மட்டுமே அமைந்து ஈற்றடி சிந்தடியாக அமையும் பாவைக் கலிப்பாவுடன் தொடர்புபடுத்துவது எப்படி என்ற ஐயத்திற்குத் தெளிவான விளக்கம் காண்பது இயலாததாகவே உள்ளது.

சான்று

சுடத்தொடீஇ கேளாய் தெருவினா மாடும்
மணற்சிற்றில் காலிற் சிதையா அடைச்சிய
கோதைப் பரிந்து வரிப்பந்து கொண்டோடி
நோதக்கச் செய்யும் சிலுபட்டி மேலோர் நாள்
அன்னையும் யானு மிருந்தோமா இல்லிரே
உண்ணுநீர் வேட்டே னெனவந்தாற் கன்னை
அடற்பொற் சிரகத்தால் வாக்கிச் சுடரிழாய்
உண்ணுநீ ருட்டிவா வென்றா ளெனயானும்
தன்னை யறியாது சென்றேன்மற் றென்னை
வளைமுன்கை பற்றி நலியத் தெருமந்திட்
டின்னா யிவனொருவன் செய்ததுகா ணென்றேனா
அன்னை யலறிப் படர்தரத் தன்னையாள்
உண்ணுநீர் விக்கினா னென்றேனா அன்னையும்
தன்னைப் புறம்பழித்து நீவமற் றென்னைக்
கடைக்கண்ணாற் கொல்வான்போ னோக்கி நகைக்கூட்டஞ்
செய்தானக் கள்வன் மகன்

இது வெண்டளை தட்டு வெள்ளோசை தழுவி ஒரு பொருண்மேல் வந்தமையால் கலிவெண்பா எனப்பெறும்.

### 3.12.6 கொச்சகக் கலிப்பா

கொச்சகக் கலிப்பா தரவு கொச்சகக் கலிப்பா, தரவிணைக் கொச்சகக் கலிப்பா, சி∴றாழிசைக் கொச்சகக் கலிப்பா, ப∴றாழிசைக் கொச்சகக் கலிப்பா, மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா என ஐந்து வகைப்படும்.

#### 3.12.6.1 தரவு கொச்சகக் கலிப்பா

ஒரு தரவு வரும் கொச்சகக் கலிப்பா தரவு கொச்சகக் கலிப்பா எனப்படும்.

சான்று

செல்வப்போர்க் கதக்கண்ணன் செயிர்த்தெறிந்த சினவாழி
முல்லைத்தார் மறமன்னர் முடித்தலையை முடுக்கிப்போய்
எல்லைநீர் வியன்கொண்மூ விடைநுழையு மதியம்போல்
மல்லலோங் கெழில்யானை மருமம்பாய்ந் தொளித்ததே

இது தனிச்சொல் சுரிதகம் பெறாது தரவு மட்டும் அமைந்த தரவுக்கொச்சகக் கலிப்பா ஆகும்.

**3.12.6.2 தரவிணைக் கொச்சகக் கலிப்பா**

சில தாழிசை வரும் கொச்சகக் கலிப்பா சி.்.றாழிசைக் கொச்சகக் கலிப்பா எனப்படும்.

சான்று

வடிவுடை நெடுமுடி வானவர்க்கும் வெலற்கரிய

என்னும் பாடல் இரண்டு தரவும் இடையிடையே தனிச்சொல்லும் பெற்று ஆசிரியச் சுரிதகத்தால் முடிந்த தரவினைக் கொச்சகக் கலிப்பா ஆகும்.

**3.12.6.3 சி.்.றாழிசைக் கொச்சகக் கலிப்பா**

சில தாழிசை வரும் கொச்சகக் கலிப்பா சி.்.றாழிசைக் கொச்சகக் கலிப்பா எனப்படும்.

சான்று

'பரூஉத்தடக்கை மதயானைப் பணையெருத்தின்மிசைத் தோன்றிக்' என்ற பாடல் நான்கடித் தரவும், மூன்றடித் தாழிசை மூன்றும், சுரிதகமுமாய் இடையிடையே தனிச்சொல் பெற்று நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பாவிலிருந்து சிறிது வேறுபட்டு வந்த சி.்.றாழிசைக் கொச்சகக் கலிப்பா ஆகும்.

**3.12.6.4 ப.்.றாழிசைக் கொச்சகக் கலிப்பா**

பல தாழிசை வரும் கொச்சகக் கலிப்பா ப.்.றாழிசைக் கொச்சகக் கலிப்பா எனப்படும்.

சான்று

'தண்மதியேர் முகத்தாளைத் தனியிடத்து நனிகண்டாங்கு' என்ற பாடல் நாலடித் தரவும் இரண்டடித்தாழிசை ஆறும் தனிச்சொல்லும் நான்கடிச் சுரிதகமும் பெற்று வந்த ப.்.றாழிசைக் கொச்சகக் கலிப்பா ஆகும்.

**3.12.6.5 மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா**

தம்முள் மயங்கியும் பிறவற்றினோடு மயங்கியும் வரும் கொச்சகக் கலிப்பா மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா எனப்படும்.

சான்று

'மணிகிளர் நெடுமுடி மாயவனுந் தம்முனும்போன்' என்ற பாடல் இதற்குச் சான்றாகும்.

## 3.13 கலிப்பாவின் இனங்கள்

கலித்தாழிசை, கலித்துறை, கலிவிருத்தம் என்பன கலிப்பாவின் இனங்களாகும்.

### 3.13.1 கலித்தாழிசை

இரண்டடியும் பலவடியும் வந்து ஈற்றடி மிகுந்தும் அல்லாத அடிகள் சீரினால் தம்முள் ஒத்தும் ஒவ்வாதும் வரப்பெறுவது கலித்தாழிசையாகும். இது ஒரு பொருள்மேல் மூன்றடக்கி வருவது சிறப்புடையது.

சான்று

கொய்தினை காத்துங் குளவி யடுக்கத்தெம்
பொய்தற் சிறுகுடி வாரல்நீ ஐய நலம்வேண்டின்
ஆய்தினை காத்தும் அருவி யடுக்கத்தெம்
மாசில் சிறுகுடி வாரல்நீ ஐய நலம்வெண்டின்
மென்தினை காத்து மிகுபூங் கமழ்சோலைக்
குன்றச் சிறுகுடி வாரல்நீ ஐய நலம்வேண்டின்

இது இரண்டடியாய் ஈற்றடி மிக்கு ஒருபொருள்மேல் மூன்றடுக்கி வந்த கலித்தாழிசையாகும்.

### 3.13.2 கலித்துறை

ஒவ்வொரு அடியிலும் ஐந்து சீர்களைப் பெற்று நான்கு அடிகளாய் வருவது கலித்துறையாகும்.

சான்று

யானுந் தோழியு மாயமு மாடுந் துறைநண்ணித்
தானுந் தேரும் பாகனும் வந்தென் னலனுண்டான்
தேனும் பாலும் போல்வன சொல்லிப் பிரிவானேல்
கானும் புள்ளுங் கதையு மெல்லாங் கரியன்றே

### 3.13.3 கலிவிருத்தம்

ஒவ்வொரு அடியிலும் நான்கு சீர்களைப் பெற்று நான்கு அடிகளான் வருவது கலிவிருத்தமாகும்.

சான்று

வேய்தலை நீடிய வெள்ளி விலங்கலின்
ஆய்தலி னொண்சுட ராழியி னான்றமர்
வாய்தலி னின்றனர் வந்தென மன்னர்முன்
நீதலை சென்றுரை நீள்கடை காப்போய்

## 3.14 வஞ்சிப்பாவின் பொது இலக்கணம்

1. இருசீர் அடிகளும் முச்சீர் அடிகளும் கலந்து வரும்.
2. காய்ச்சீரும் கனிச்சீரும் மிகுந்திருக்கும்.
3. வஞ்சித் தளைகள் மிகுந்தும் பிற தளைகள் குறைந்தும் வரும்.
4. தனிச்சொல், ஆரிசியர் சுரிதகம் வரும்.
5. மூன்று அடிகள் முதல் பல அடிகள் வரும்.
6. தூங்கல் ஓசை பெறும்.

எடுத்துக்காட்டு

செங்கண்மேதி கரும்புழக்கி
அங்கணீலத் தலரருந்திப்
பொழில்காங்சி நிழல்துயிலும்
செழுநீர்
நல்வயல் கழனி ஊரன்
புகழ்தல் ஆனாப் பெருவண் மையனே.

## 3.15 வஞ்சிப்பாவின் வகைகள்

வஞ்சிப்பா குறளடி வஞ்சிப்பா, சிந்தடி வஞ்சிப்பா என இருவகைப்படும்.

### 3.15.1 குறளடி வஞ்சிப்பா

இருசீர் கொண்ட அடிகளால் வந்து தனிச்சொல்லும் ஆசிரியச் சுரிதகமும் பெற்று வரின் அது குறளடி வஞ்சிப்பா எனப்பெறும்.

### 3.15.2 சிந்தடி வஞ்சிப்பா

முச்சீர் கொண்ட அடிகளால் வந்து தனிச்சொல்லும் ஆசிரியச் சுரிதகமும் பெற்று முடிவது சிந்தடி வஞ்சிப்பா எனப்பெறும்.

வஞ்சிப்பாவில் வரும் சுரிதகம் ஆசிரியச் சுரிதகமாக வருவதன்று வெண்பாச் சுரிதகமாக வரப்பெறாது.

## 3.16 வஞ்சிப்பாவின் இனங்கள்

வஞ்சித்தாழிசை, வஞ்சித்துறை, வஞ்சிவிருத்தம் என்பன வஞ்சிப்பாவின் இனங்களாகும்.

### 3.16.1 வஞ்சித்தாழிசை

நான்கு அடிகளாய், அடிதோறும் இரண்டு சீர்களைப் பெற்று ஒருபொருள்மேல் மூன்று அடுக்கி வருவன வஞ்சித்தாழிசையாகும்.

சான்று

மடப்பிடியை மதவேழம்
தடக்கையான் வெயின்மறைக்கும்
இடைச்சுர மிறந்தார்க்கே
நடக்குமென் மனனேகாண்
பேடையை யிரும்போத்துத்
தோகையான் வெயின்மறைக்கும்
காடக மிறந்தார்க்கே
ஓடுமென் மனனேகாண்
இரும்பிடியை யிகல்வேழம்
பெருங்கையான் வெயின்மறைக்கும்
அருஞ்சுர மிறந்தார்க்கே
விரும்புமென் மனனேகாண்

### 3.16.2 வஞ்சித்துறை

நான்கு அடிகளாய் அடிதோறும் இரண்டு சீர்களைப் பெற்று ஒரு பொருள்மேல் ஒன்றாய் வருவது வஞ்சித்துறையாகும்.

சான்று

மைசிறந்தன மணிவரை
கைசிறந்தன காந்தளும்
பொய்சிறந்தனர் காதலர்
மெய்சிறந்திலர் விளங்கிழாய்

### 3.16.3 வஞ்சி விருத்தம்

நான்கு அடிகளாய் அடிதோறும் மூன்று சீர்களைப் பெற்று வருவது வஞ்சி விருத்தமாகும்.

சான்று

சோலை யார்ந்த சுரத்திடைக்
குாலை யார்கழ லார்ப்பவும்
மாலை மார்பன் வருமாயின்
நீல வுண்க ணிவள்வாழுமே

## 3.17 தொகுத்துக் காண்போம்

- பா வகைகளான வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா ஆகியவற்றின் பொது இலக்கணத்தைப் பற்றி அறிந்து கொண்டீர்கள்.
- வெண்பாவின் வகைகளான குறள் வெண்பா, நேரிசை வெண்பா, இன்னிசை வெண்பா, சிந்தியல் வெண்பா, ப∴றொடை வெண்பா ஆகியவற்றின் இலக்கணங்களைப் பற்றி அறிந்து கொண்டீர்கள்.
- ஆசிரியப்பாவின் வகைகளான நேரிசை ஆசிரியப்பா, நிலைமண்டில ஆசிரியப்பா, இணைக்குறள் ஆசிரியப்பா, அடிமறிமண்டில ஆசிரியப்பா ஆகியவற்றின் இலக்கணங்களைப் பற்றி அறிந்து கொண்டீர்கள்.
- கலிப்பாவின் வகைகளான நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா, அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா, வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா, வெண்கலிப்பா, கலிவெண்பா, கொச்சகக் கலிப்பா ஆகியவற்றின் இலக்கணங்களையும் பற்றியும் அறிந்து கொண்டீர்கள்.

பா வகைகளான வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா ஆகியவற்றின் பொது இலக்கணத்தைப் பற்றியும், வெண்பாவின் வகைகளான குறள் வெண்பா, நேரிசை வெண்பா, இன்னிசை வெண்பா, சிந்தியல் வெண்பா, ப∴றொடை வெண்பா ஆகியவற்றின் இலக்கணங்களையும், ஆசிரியப்பாவின் வகைகளான நேரிசை ஆசிரியப்பா, நிலைமண்டில ஆசிரியப்பா, இணைக்குறள் ஆசிரியப்பா, அடிமறிமண்டில ஆசிரியப்பா ஆகியவற்றின் இலக்கணங்களையும், கலிப்பாவின் வகைகளான நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா, அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா, வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா, வெண்கலிப்பா,

கலிவெண்பா, கொச்சகக் கலிப்பா ஆகியவற்றின் இலக்கணங்களைப் பற்றியும் விளக்கப்பட்டுள்ளது.



## 3.18 சோதித்தறியும் வினா விடைகள்

1. வெண்பாவின் பொது இலக்கணங்கள் யாவை?

1. வெண்பாவின் ஈற்றடி முச்சீராகவும், ஏனைய அடிகள் நான்கு சீர்களாகவும் இருக்கும்.

2. இயற்சீரும் வெண்சீரும் பயின்று வரும்.

3. இயற்சீர் வெண்டளையும், வெண்சீர் வெண்டளையும் பெற்று வரும்.

4. ஈற்றடியின் ஈற்றுச்சீர் நாள், மலர், காசு, பிறப்பு என்ற வாய்பாடுகளில் ஒன்றைப் பெற்று முடியும்.

5. செப்பலோசை பெற்று வரும்.

6. இரண்டடி முதல் பன்னிரண்டு அடிகள் வரை வரும்.

7. ஒரு விகற்பமாகவோ – பல விகற்பமாகவோ வரும்.

2. ஆசிரியப்பாவின் வகைகளைக் கூறுக

ஆசிரியப்பா நேரிசை ஆசிரியப்பா, நிலைமண்டில ஆசிரியப்பா, இணைக்குறள் ஆசிரியப்பா, அடிமறிமண்டில ஆசிரியப்பா என நான்கு வகைப்படும்.

3. வஞ்சிப்பாவின் பொது இலக்கணத்தைக் கூறுக

1. இருசீர் அடிகளும் முச்சீர் அடிகளும் கலந்து வரும்.

2. காய்ச்சீரும் கனிச்சீரும் மிகுந்திருக்கும்.

3. வஞ்சித் தளைகள் மிகுந்தும் பிற தளைகள் குறைந்தும் வரும்.

4. தனிச்சொல், ஆரிசியர் சுரிதகம் வரும்.

5. மூன்று அடிகள் முதல் பல அடிகள் வரும்.

6. தூங்கல் ஓசை பெறும்.

### 3.19 பயிற்சி வினா

கலிப்பாவின் பொது இலக்கணத்தைக் கூறி அதனைச் சான்றுகளுடன் நிறுவுக

**3.20 மேலும் படித்தறிக**

1. **யாப்பருங்கலக்காரிகை, இபி.சி.ஜெகதாதமிழ்ச்செல்வன்(ம) –** சாரதா பதிப்பகம் சென்னை, பதிப்பு – 2017.

## கூறு 4:

# புதிய யாப்பு வடிவங்கள் - சிந்து, கண்ணி, கீர்த்தனை

**4. பாட அமைப்பு**

## 4.1 அறிமுகம்

காலந்தோறும் இலக்கிய யாப்பு வடிவங்கள் மாறிக்கொண்டே வருகின்றன. செய்யுள் மரபுக்கேற்ப அமைந்த பழைய யாப்பு வடிவங்களான வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா ஆகியவை எழுதுவதற்குக் கடினமானவையாகவும், புரிந்து கொள்வதற்கு கடினமானவையாகவும் காணப்பட்டதால் நவீனக் கவிஞர்கள் தற்காலத்திற்கேற்ற வகையில் புதிய யாப்பு வடிவங்களைக் கொண்டு வந்தனர். அவற்றுள் சிந்து, கண்ணி, கீர்த்தனை போன்றவை குறிப்பிடத்தக்கவையாகும். செய்யுள் உறுப்பாக அமைந்த பா வகைகளைத் தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்கள் குறிப்பிடுகின்றன. இவை மரபுக்கவிதை எழுதுவதற்குத் துணைபுரிகின்றன.

## 4.2 குறிக்கோள்கள்:

- தமிழில் புதிதாகத் தோன்றிய கவிதை இலக்கிய வகைகளுள் சிந்து, கண்ணி, கீர்த்தனை பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- சிந்து சிந்தடியில் பாடப்பெறுகிறது. கண்ணி என்பது இரண்டு அடிகளால் பாடப்பெறும். இதற்குச் சான்றாக சிற்றிலக்கியங்களில் ஒன்றான தமிழ்விடு தூதில் இத்தகைய அமைப்பு காணப்படுகிறது என்பது பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- ஒரே பாடல் அமைப்பில் பல வகைக் கண்ணிகள் தொடர்ந்தும் வரும். கீர்த்தனை இசையோடு பாடப்படுகிறது. கீர்த்தனை நாடகங்களும் அரங்கேற்றப்பட்டன எனத் தெரிந்து கொள்வீர்கள்.

## 4.3 சிந்து

சிந்துப் பாடல்கள் நாட்டுப்பாடல்களையும் தெம்மாங்குப் பாடல்களையும் அடிப்படையாகக் கொண்டு சிற்சில மாறுதல்களோடு இயற்றப்பெற்றனவாகும்.

**4.3.1 சிந்துப் பாடலின் இலக்கணம்**

சிந்துப் பாடல்களின் இலக்கணத்தை த.சரவணத்தமிழன் என்பார் தம் யாப்பு நூலில்

முதலடிச் சீர்களும் தனிச்சொல் அன்றி
மறியடிச் சீர்களும் எண்ஒத்து இருப்பின்
சமநிலைச் சிந்தாம் ஒன்றின் மற்றொன்றுசீர்
மிகுநிலை யாயின் வியனிலைச் சிந்தாம்

என்பர். இதனால் முதலடியிலேயே தனிச்சொல் பெற்று வருவது சிந்து என்பது விளங்கும்.

**4.3.2 சிந்துப்பாவின் வகை**

சிந்துப்பா சமநிலைச்சிந்து, வியனிலைச் சிந்து என இருவகைகளில் இதன் அடியளவைக் கொண்டு பாகுபடுத்தப்படுகிறது.

**4.3.2.1 சமநிலைச் சிந்து**

முதலடியும் அடுத்த அடியும் சீரின் எண்ணிக்கையால் ஒத்து இருப்பின் அது சமநிலைச் சிந்து எனப்படும்.

**4.3.2.2 வியனிலைச் சிந்து**

அடியும் சீரும் எண்ணிக்கையால் வேறுபட்டு இருப்பின் அது வியனிலைச் சிந்து எனப்படும்.

## 4.4 சிந்துப்பாவின் தனித்தன்மை

சிந்து இலக்கியங்களில் சிந்தடி காணப்பட்டாலும் ஒரு குறிப்பிட்ட பாவகையைக காண இயலவில்லை. பெரும்பாலும் கண்ணி அமைப்பே காணப்படுகிறது. அக்கண்ணிகளும் சிந்தடியும் அளவடியும் ஆகிய அடி அமைப்பில் அமைந்துள்ளன. பின்னர் எழுந்த சில சிந்து இலக்கியங்களில் பல்லவி, அனுபல்லவி, சரணங்கள் என்ற கீர்த்தனை அமைப்பு காணப்படுகிறது. வேறுசில சிந்து நூல்களில் இரண்டு அடிக்கண்ணிகள் மட்டுமே காணப்படுகின்றன. இன்னும் வேறு சில சிந்துகளில் அடிகள் அதிகமாகக் காணப்படுகின்றன. எனவே எந்த ஒரு யாப்பையும் சிந்து நூலிற்கு உரியதாக வரையறுக்க இயலவில்லை.

## 4.5 சிந்து இலக்கியத்தின் தோற்றம்

சிந்து இலக்கியங்களுள் காலத்தால் மிகவும் முற்பட்டது கி.பி 18ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த அண்ணாமலை ரெட்டியாரின் காவடிச்சிந்து ஆகும். இது கி.பி 1865இல் நூலாக வெளியிடப்பட்டுள்ளது. பழ.முத்தப்பன் அவர்கள் சிந்து இலக்கியம் என்னும் நூலில் 52 சிந்து இலக்கிய நூல்களைப் பட்டியலிட்டுள்ளார்.

சிந்து இலக்கியம் கி.பி 18ஆம் நூற்றாண்டில் தனி இலக்கியமாகத் தோன்றியிருந்தாலும் அதற்கான அடிப்படை கி.பி. 12ஆம் நூற்றாண்டைச் சார்ந்த ஆழ்வார் பாசுரங்களிலேயே காணப்படுகிறது. திருவாய்மொழியில்,

நாரணன் எம்மான் - பாரணங்காளன்
வாரணம் தொலைத்த காரணன்தானே

என வரும் பாடல் அடி இதற்குச் சான்றாகும். பின்னர்த் தோன்றிய அம்மானை, பள்ளு இலக்கியங்களிலும் சிந்து ஓசை சிறப்பிடம் பெற்றுள்ளது. முக்கூடற்பள்ளு இலக்கியத்தில்,

கொண்டல் கோபுரம் அண்டையில் - கூடும்
கொடிகள் வானம்பா டிதர மூடும்

என வரும் அடிகள் சிந்து ஓசை கொண்டனவாகும். பிற்காலத்தில் வடலூர் வள்ளலார் சிந்து ஓசையை 734 பாடல்களில் பயன்படுத்தியுள்ளார். இருபதாம் நூற்றாண்டில் பாரதி சிந்து ஓசையைப் பயன்படுத்தி சிந்துக்குத் தந்தை என்று பாவேந்தரால் பாராட்டப்பெற்றுள்ளார்.

## 4.6 சிந்து இலக்கியங்களின் வகைகள்

சிந்து இலக்கியங்களைக் காவடிச்சிந்து, வழிநடைச்சிந்து, நொண்டிச்சிந்து, வரலாற்றுச்சிந்து, கொலைச்சிந்து, விபத்துச்சிந்து, நீதிச்சிந்து எனப் பலவாறாகப் பாகுபடுத்துவர்.

### 4.6.1 காவடிச்சிந்து

காவடிச்சிந்து என்பது முருகனுக்கு நேர்த்திக் கடன் செலுத்த மயிலிறகுகளால் அலங்கரிக்கப்பட்ட காவடியைத் தோளில் சுமந்து செல்லும்போது பாடப்பெறுவதற்கு எழுந்த சிந்து ஆகும். இவ்வகைச்

சிந்துகளில் அண்ணாமலை ரெட்டியாரின் கழுகுமலை முருகன் காவடிச்சிந்து குறிப்பிடத்தக்கதாகும். இச்சிந்து நூல்களில் முருகப் பெருமானின் பெயர்கள், வரலாறுகள், அறுபடை வீடுகளின் பெயர்கள், பெருமைகள் ஆகியன குறிக்கப்பெறுகின்றன. மேலும் அகப்பொருட்சுவை இச்சிந்துகளில் முக்கியத்துவம் பெற்று விளங்குகிறது.

### 4.6.2 வழிநடைச்சிந்து

தோளில் காவடி தூக்கிப் பாடிடப் பயன்பெற்ற காவடிச்சிந்து காலப்போக்கில் வளர்ந்து காவடி தூக்கிச் செல்லும் வழியையோ அல்லது காவடியே இல்லாது ஊர்விட்டு ஊர் செல்லும்போது அவ்வழியில் காணும் இயற்கை வளங்களையோ செயற்கைக் கட்டிடங்களையோ வருணனை செய்து பாடப்பெறும் நிலையைப் பெற்றது. அதனை வழிநடைச் சிந்து என்று குறித்தனர். பாண்டவர் மங்கலம் சங்கரநாராயண பாரதியின் கண்டலூர் கார்த்திகை மாதக் கடைச்சோமவார வழிநடைச் சிந்து இவ்வகையில் குறிப்பிடத்தக்கதாகும்.

### 4.6.3 நொண்டிச்சிந்து

சிந்து இலக்கியங்களில் நொண்டிச் சிந்து என்றொரு வகை காணப்படுகிறது. இவ்வகை நூல்கள் அனைத்தும் பெரும்பாலும் முருகன் மீது பாடப்பெற்றனவாகவே உள்ளன. முதலடியைவிட அடுத்த அடியில் அசையோ சீரோ நீண்டிருப்பது நொண்டிச் சிந்துப் பாடல்களின் பொது இயல்பாக உள்ளது. இதுவே இவ்வகை நொண்டிச்சிந்து எனப்பெயர் பெறுவதற்குக் காரணமாகும். இவ்வகை நூல்களில் தங்கவேலு பிள்ளையின் நொண்டிச்சிந்து குறிப்பிடத்தக்கதாகும். இவ்வகைப் பாடல்கள் வேல்வேல் என்னும் அசைகளையும் வாவா என்னும் அசைகளையும் பெற்று விளங்குகிறது.

ஆண்டி மகனாண்டி மலையாண்டி வேல்வேல்
ஆண்டி சிலையாண்டி மகனாண்டியே வா – வா
அபிசேக சாமான்கள் எடுத்து வேல்வேல்
ஆடிவரும் காவடிகள் கண்டிடவும் வா வா

என்பது வேல்பாட்டு என்னும் நொண்டிச்சிந்தில் அமைந்த பாடலாகும்.

### 4.6.4 வரலாற்றுச்சிந்து

காவடிச்சிந்துகள் மக்கள் உள்ளத்தில் ஏற்றம் பெற்ற பெருமை கண்டு ரெட்டியாருக்குப் பின் வந்த கவிஞர் சிலர் நாட்டில் வழங்கி வந்த புராண வரலாறுகளையும், சமயக் குரவர் வரலாறுகளையும் அக்காவடிச்சிந்து சந்த அமைப்பில் பாடினர். அவை வரலாற்றுச் சிந்துகள் எனப்பட்டன. இவ்வைகச் சிந்தில் விரகாலூர் சுப்பையா பிள்ளை பாடிய கோவலன் சரித்திரத் திருப்புகழ் சிந்து குறிப்பிடத்தக்கதாகும்.

### 4.6.5 கொலைச்சிந்து

காலப்போக்கில் செய்தித்தாள்களில் வரும் கொலை நிகழ்ச்சிகளையும், தாம் வாழும் சுற்றுப்புறத்தில் நிகழ்ந்த கொலை நிகழ்ச்சிகளையும் சிந்து சந்த அமைப்பில் பாடினர். இவை கொலைச்சிந்து எனப்பட்டன. கொலைச் சிந்துகளில் சிறுமணவூர் முனுசாமி சீடன் மாணிக்கம் என்பார் பாடிய சிதம்பரம் கசாய்கடை கோபாலு நாயகர் கொலைச் சிந்து குறிப்பிடத்தக்கதாகும்.

### 4.6.6 விபத்துச்சிந்து

கொலைச் சிந்துகளைப் போல செய்தித்தாள் நிகழ்ச்சிகளைக் கொண்டும் அறிந்த செய்திகளைக் கொண்டும் எழுதப்பெற்ற மற்றொரு வகைச் சிந்து விபத்துச்சிந்து ஆகும். பெரும்பாலும் ரயில் விபத்துக்கள், தீ விபத்துக்கள், லாரி விபத்துக்கள் ஆகியன சிந்துகளாகப் பாடப்பெற்றுள்ளன. செங்கோட்டை ரயில்வே பரிதாபச்சிந்து, டி.என்.தங்கவேறு பாடிய லாரி விபத்துச்சிந்து ஆகியன குறிப்பிடத்தக்கனவாகும்.

### 4.6.7 நீதிச்சிந்து

இறைவழிபாடு செய்வதற்கும், கதை கூறுவதற்கும், செய்திகளைச் செய்தி வடிவத்தில் தருவதற்கும் பயன்பட்ட சிந்து இலக்கியங்கள் சமுதாயம் வாழ்வதற்கும் வழிகாட்டின. ஆவை நீதிச்சிந்து எனப்பட்டன. திருக்குறள் நீதிச்சிந்து, கட்குடிச்சிந்து, ஆத்திச்சூடிச்சிந்து,

ஆண்பிள்ளை நீதிச்சிந்து, பெண்புத்திச்சிந்து போன்றவை அவற்றில் குறிப்பிடத்தக்கன. பெண்புத்திமாலை

அன்னிய புருஷர் மெத்த அழகாய் இருந்தாலும்
ஆசை வையாள் நல்ல பதிவிரதை - இல்லாமல்
என்ன சாதியாய் இருந்தாலும் புருஷர்மேல்
இச்சை கொண்டு திரிவாள் தடிக்கழுதை

என அறிவுரை கூறுகிறது.

இத்தகைய சிந்துகளில் எளிய நடை என்பது தனிச்சிறப்பாகும். வருணனை, உவமை போன்றவையும் சிறப்பாக அமைந்துள்ளன.

## 4.7 கண்ணி

கலிவெண்பாவில் இரண்டடியாய் வரும் உறுப்பு கண்ணி எனப்படும். மலர்களைக் கயிற்றில் தொகுத்த அமைப்பிற்கு அமைந்த கண்ணி என்னும் சொல் ஒரு வகையில் ஒப்புமையாக அமைந்த கலிவெண்பாவின் ஈரடி கொண்ட உறுப்பிற்கும் ஆகுபெயராக அவ்வகையிலமையும் இசைப்பாடல், நூல் ஆகியற்றுக்கும் பெயராக அமைந்துள்ளது. கலிவெண்பாவில் அமையும் உலா, தூது முதலிய சிற்றிலக்கியங்கள் இத்தகைய கண்ணிகள் பலவற்றைத் தொடர்ந்து கொண்டு முடியும்.

## 4.8 கண்ணி அமைப்பு

கலிவெண்பாவின் இரண்டு அடிகள் கொண்ட இவ்வுறுப்பினைக் கண்ணி என்னும் பெயரால் சுட்டும் மரபினைத் தமிழ்விடு தூது,

நராதிபன் கூத்தனெதிர் நண்ணியோர் - கண்ணிக்கு
ஓராயிரம் பொன் ஈந்த உலாவும்

என்று தன்மீது பாடப்பெற்ற உலாவின் சிறப்பு உணர்ந்த சோழ மன்னன் ஒருவன் அதனைப் போற்றும் வகையில் அதிலுள்ள கண்ணி ஒவ்வொன்றிற்கும் ஆயிரம் பொன் பரிசு வழங்கிய செய்தியைக் குறிப்பிடும்போது சுட்டுகிறது.

நெடிதாகத் தொடர்ந்து செல்லும் கலிவெண்பாவில ஈரடி கொண்ட உறுப்பாக அமையும் கண்ணி பொருளால் தொடராமல்

தனித்தனியாக அமைவதும் ஒரு பொருள் பற்றி அமைவதும் உண்டு. இவ்வாறு தனித்தனிக் கண்ணிகள் பலவற்றைக் கொண்டு அமையும் நூல்கள் பிற்காலத்தில் உருவாயின. இத்தகு நூல்களில் அமையும் கண்ணிகளின் ஈற்றுச்சீர், எதுகைக்கேற்ப அமையாமல் யாதானுமொரு தொடரையே தொடர்ந்து கொண்டமைவதுண்டு. தாயுமானவரின் பராபரக்கண்ணி இவ்வகையில் அமைந்ததாகும். ஆதன் கண்ணிதோறும் பராபரமே என்னும் ஒரே தொடர் இடம்பெறுகிறது. இதற்கு

'எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன்று அறியேன் பராபரமே'
'சினம்அடங்கக் கற்றாலும் சித்திஎலாம் பெற்றாலும்
முனம்அடங்கக் கல்லார்க்கு வாய்ஏன் பராபரமே'

என்பன சான்றாகும். இவ்வகையில் பத்திரகிரியாரின் நூல் கண்ணிதோறும் 'எக்காலம்' என்னும் சொல்லைக் கொண்டு முடிவதால் அது 'எக்காலக்கண்ணி' என்று சொல்லப்படுகிறது.

பின்னர்க் கிளிக்கண்ணி என்னும் பெயரில் இத்தகைய அமைப்புக் கொண்ட இசைப்பாடல்கள் உருவாயின. தாயுமானவரின் பைங்கிளிக்கண்ணி இதற்குச் சான்றாகும். தாயுமானவர்,

அகமேவும் அண்ணனுக்குஏன் அல்லல் எல்லாம் சொல்லச்
சுகமான நீபோய்ச் சுகம்கொடுவா பைங்கிளியே'
கண்டதனைக் கண்டு கலக்கம் தவிர்எனவே
விண்ட பெருமானையும் நான் மேவுவனோ பைங்கிளியே'

என கண்ணிகளில் பாடியுள்ளார். இத்தகைய பாடல்கள் கிளிக்கண்ணி எனவும் அதன் இசை கிளிக்கண்ணி மெட்டு எனவும் வழங்கப்படுகிறது.

## 4.9 கீர்த்தனை

பல்லவி, அனுபல்லவி, சரணம் என்னும் மூன்று உறுப்புகள் கொண்டமையும் இசைப்பாடல்கள் கீர்த்தனை எனப்படும். சில கீர்த்தனைகள் அனுபல்லவி இல்லாமலும் உருவாக்கப்படும். ஒரு கீர்த்தனையில் பல சரணங்கள் இடம்பெறும். அச்சரணங்கள் அனைத்தும் ஒரே மெட்டில் அமையும். கீர்த்தனையில் இசை அமைதி மிக்கிருத்தல் வேண்டும். தமிழில் கோபாலகிருட்டின பாரதி, அருணாசலக்கவிராயர்,

முத்துத்தாண்டவர், பாபநாசம் சிவன், சுத்தானந்த பாரதி போன்றவர்கள் கீர்த்தனைகள் இயற்றியுள்ளனர்.



குறிப்புகள்

## 4.10 கீர்த்தனை நாடகம்

ஒரு வரலாற்றைத் தொடர்ந்து கீர்த்தனைகளால் நாடகப் பாங்கில் அமைக்கும்போது அது கீர்த்தனை நாடகம் எனப்படும். தமிழில் எழுந்த முதல் கீர்த்தனை நாடகம் சீர்காழி அருணாசலக் கவிராயர் பாடிய இராம நாடகக் கீர்த்தனையே ஆகும். இதை அவர் கி.பி. 1717 இல் எழுதினார். இவரையடுத்து இராமச்சந்திர கவிராயர் பாரத விலாசம் என்ற நாடகத்தையும், கி.பி 1867இல் அரங்கப்பிள்ளை என்பார் அரிச்சந்திர விலாசத்தையும் படைத்தளித்துள்ளார். அதன் பின்னர் கோபால கிருட்டிண பாரதியார் நந்தனார் சரித்திரக் கீர்த்தனைகளை எழுதியுள்ளார். இந்நூல் பெரியபுராணத்தில் உள்ள திருநாளைப்போவார் புராணத்தைத் தழுவியதாகும்.

கீர்த்தனை நாடகங்களின் கதைக்கரு மக்கட்கு முன்னரே தெரிந்த புராணச் செய்திகளைக் கொண்டதாக இருந்தமையால் மக்கள் அதனை இசைக்காகவே சுவைத்தனர். பின்னர் நிலைமை மாறவே கீர்த்தனை நாடகங்கள் தோன்றாமல் நின்றுவிட்டன.

## 4.11 தொகுத்துக் காண்போம்:

- தமிழில் புதிதாகத் தோன்றிய கவிதை இலக்கிய வகைகளுள் சிந்து, கண்ணி, கீர்த்தனை பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- சிந்து சிந்தடியில் பாடப்பெறுகிறது. கண்ணி என்பது இரண்டு அடிகளால் பாடப்பெறும். இதற்குச் சான்றாக சிற்றிலக்கியங்களில் ஒன்றான தமிழ்விடு தூதில் இத்தகைய அமைப்பு காணப்படுகிறது என்பது பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- ஒரே பாடல் அமைப்பில் பல வகைக் கண்ணிகள் தொடர்ந்தும் வரும். கீர்த்தனை இசையோடு பாடப்படுகிறது. கீர்த்தனை நாடகங்களும் அரங்கேற்றப்பட்டன எனத் தெரிந்து கொண்டீர்கள்.

## 4.12 சோதித்தறியும் வினா விடைகள்



1. சிந்து என்றால் என்ன? சிந்துப் பாவின் இலக்கணத்ததைக் கூறுக

சிந்துப் பாடல்கள் நாட்டுப்பாடல்களையும் தெம்மாங்குப் பாடல்களையும் அடிப்படையாகக் கொண்டு சிற்சில மாறுதல்களோடு இயற்றப்பெற்றனவாகும். சிந்துப்பா சமநிலைச்சிந்து, வியனிலைச் சிந்து என இருவகைகளில் இதன் அடியளவைக் கொண்டு பாகுபடுத்தப்படுகிறது.

2. கண்ணி பற்றி அமையும் நூல்கள் இரண்டினைக் கூறுக

தமிழ்விடு தூது, தாயுமானவரின் பராபரக் கண்ணி

3. கீர்த்தனை நாடகம் பற்றி விளக்குக

ஒரு வரலாற்றைத் தொடர்ந்து கீர்த்தனைகளால் நாடகப் பாங்கில் அமைக்கும்போது அது கீர்த்தனை நாடகம் எனப்படும். தமிழில் எழுந்த முதல் கீர்த்தனை நாடகம் சீர்காழி அருணாசலக் கவிராயர் பாடிய இராம நாடகக் கீர்த்தனையே ஆகும். இதை அவர் கி.பி. 1717 இல் எழுதினார். இவரையடுத்து இராமச்சந்திர கவிராயர் பாரத விலாசம் என்ற நாடகத்தையும், கி.பி 1867இல் அரங்கப்பிள்ளை என்பார் அரிச்சந்திர விலாசத்தையும் படைத்தளித்துள்ளார். அதன் பின்னர் கோபால கிருட்டிண பாரதியார் நந்தனார் சரித்திரக் கீர்த்தனைகளை எழுதியுள்ளார். இந்நூல் பெரியபுராணத்தில் உள்ள திருநாளைப்போவார் புராணத்தைத் தழுவியதாகும்.

கீர்த்தனை நாடகங்களின் கதைக்கரு மக்கட்கு முன்னரே தெரிந்த புராணச் செய்திகளைக் கொண்டதாக இருந்தமையால் மக்கள் அதனை இசைக்காகவே சுவைத்தனர். பின்னர் நிலைமை மாறவே கீர்த்தனை நாடகங்கள் தோன்றாமல் நின்றுவிட்டன.

## 4.13 பயிற்சி வினா

1. தற்காலக் கவிதை அமைப்பில் சிந்து, கண்ணி, கீர்த்தனை பெறும் இடத்தைச் சான்றுகளுடன் விளக்குக

## 4.14 மேலும் படித்தறிக

**1. க.ப.அறவாணன், கவிதையில் உயிர் உள்ளம் உடல், மெரினா புக்ஸ், அமைந்தகரை, சென்னை**

# கூறு 5: புதுக்கவிதையில் குறியீடு – படிமம்

## 5. பாடஅமைப்பு



## 5.1. அறிமுகம்

தொடக்கக் கால மரபுக் கவிதைகளில் காணப்படும் உள்ளுறை, இறைச்சி போன்றவையே புதுக்கவிதையில் குறியீடு என்னும்

நிலையை எட்டியுள்ளன. படிமத்துக்கு அடுத்த நிலை எனினும் இரண்டும் இரண்டு நிலைகளில் பயன்படுத்தப்படுகிறது. இரண்டுக்கும் வேறுபாடு உண்டு. முதுமொழி, மந்திரம், குறிப்பு என தொல்காப்பியத்தில் காணப்படுபவை குறிப்பால் மற்றொன்றை உணர்த்துபவையென அறியமுடிகின்றது. புதுக்கவிதைகளில் குறியீடும் படிமமும் இலக்கிய உத்திகளாகத் திகழ்கின்றன. இவை இரண்டும் ஒரு பொருளைக் கூறுவதன் மூலம் மற்றொரு பொருளை உணர்த்தும். இலக்கிய உத்திகளாகும். ஒரு கருத்தை நேரடியாகக் கூறாமல் மறைமுகமாக உணர்த்துவதற்கு இவ்வுத்திகள் பயன்படுகின்றன. இவற்றைக் காண்போம்.



## 5.2 குறிக்கோள்கள்

- குறியீடு படிமம் ஆகியவை சங்க இலக்கியத்திலும் நாம் காணலாம் என்பது பற்றித் தெரிந்து கொள்வீர்கள்..
- தற்காலக் கவிஞர்களான ந.பிச்சமூர்த்தி, நகுலன், கலாப்பிரியன், அப்துல் ரகுமான், பாலகுமாரன், மு.மேத்தா, வாலி, ஜகந்நாத ராஜா ஆகியேர்களின் கவிதைகளில் காணப்படும் குறியீடுகள் பற்றித் தெரிந்து கொள்வீர்கள். .
- சங்க இலக்கியத்திலும் மற்றும் பாரதி, தருமு சிவராம், சுகுமார், கல்யாண்ஜி, ஞானக்கூத்தன், பசுவையா ஆகியோர்களின் கவிதையில் படிமமும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.

## 5.3. குறியீடு- விளக்கம்

இதனை ஆங்கிலத்தில் Symbol என்பர். தமிழில் குறியீடு என்பதற்கு சின்னம், அடையாளம் என்று பொருள்படும். குறியீடு என்பது ஒரு பொருளுக்குப் பதிலாக மற்றொரு பொருளைப் பதிலியாகக் காட்டுவதாகும். காட்டப்படும் பொருள் ஒன்றாகவும் உணர்த்தப்படும் பொருள் வேறொன்றாகவும் அமைத்து ஒரு வெளிப்பாட்டுச் சிறப்பைத் தோற்றுவிப்பது குறியீடு.

## 5.4 குறியீடு சான்று

திரைப்படங்களில் ஒரு கொடியவன் வீடு என்பதை உணர்த்த உறுமுகின்ற ஒரு புலியின் பொம்மை வடிவத்தைக் காட்டுதல் என்பது ஓர் எளிய சான்றாகும். புலி இங்கு குறியீட்டு நிலையில் ஒரு கொடியவனை உணர்த்துகிறது. இக்குறியீடுகள் திரும்பத் திரும்ப வரும்பொழுது அழுத்தமான மரபுகளாகி மக்கள் மனங்களில் எளிதில் கண்டுகொள்ளக்கூடிய அடையாளங்களாகி விடுகின்றன.

## 5.5 குறியீடு – பாடுபொருள்

காதலர்களுக்கு இணைப்பறவைகளும், விலங்குகளும் குறியீடுகளாகும். இவ்வாறே மனக்கொந்தளிப்பு, வாழ்க்கைச் சிதைவு ஆகியவற்றைக் குறிக்கக் குமுறும் கடலும், சீறும் புயலும் குறியீடுகளாகின்றன. உயர் பிரிதலைக் குறிக்க விளக்கு அணைதலும், விதவை நிலையைக் குறிக்க வெள்ளை உடையும், கோபம் அல்லது துயர நிலையைக் குறிக்க கூந்தல் விரிப்பும், மகிழ்ச்சி நிலையைக் குறிக்க வான வேடிக்கையும் குறியீடுகளாகின்றன.

## 5.6 ந.பிச்சமூர்த்தி கவிதைகளில் குறியீடு

புதுக்கவிதைக்கு வித்திட்டவர் பாரதி எனினும் புதுக்கவிதையின் முதல் கவிஞர் என்று அறியப்பட்டவர் ந.பிச்சமூர்த்தி. அவரின் பம்பரம் என்னும் கவிதை குறியீட்டு அடிப்படையில் எழுதப்பட்டதாகும்.

பம்பரமும் மன்றங்களாய்
எல்லை, மொழித் தகராறாய்
எவ்வளவோ விவசாயங்களாய்
எங்கும் வளர்ந்திருக்கு
நானும் வளர்ந்து விட்டேன்
கைநகமும் வளர்ந்திருக்கு
ஆனாலும் அழுகின்றேன்.

இக்கவிதை வன்முறைக்குக் குறியீடாய் அமைந்துள்ளது. வன்முறையின் தீவிரத்தைக் காட்டியுள்ளது. ஆனால் வன்முறை என்னும் சொல் எங்கும் இல்லை.

ந.பிச்சமூர்த்தியின் ‘கிளிக்கூண்டு’ என்ற கவிதை குறியீட்டுத் தன்மைக்குத் தெளிவான சான்றாகும். இக்கவிதையில் கிளிக்கூண்டு கவிதையின் வடிவம் குறிக்கும் குறியீடாகவும் கூண்டில் உள்ள கிளி கவிதையில் உள்ள கவித்துவம் குறிக்கும் குறியீடாகவும் அமைந்துள்ளன.

## 5.7 நகுலன் கவிதையில் குறியீடு

சித்தர்களுக்கு குதம்பை, பாரதிக்கு கண்ணம்மா போல் நகுலனுக்கு சுசீலா. கவிஞர் சுசீலாவை குறியீடாக்கி ஏராளமான கவிதைகள் எழுதியுள்ளார்.

நேற்று ஒரு கனவு
முதல் பேற்றில்
சுசீலாவின்
கர்ப்பம் அலசி விட்டதாக
இந்த மனதை
வைத்துக் கொண்டு
ஒன்றும் செய்ய முடியாது

இக்கவிதையின் தலைப்பு ‘அலைகள்’ மனத்தில் கா அலைகள் எழ செய்கின்றது. இதுவொரு வகையான குறியீடு.

## 5.8 கவிஞர் கலாப்பிரியாவின் கவிதைகளில் குறியீடு

சிலரின் சில
பிரார்த்தனைகள்
ஆமென்னுடன்
முடிகின்றன
என் எல்லாப்
பிரார்த்தனைகளும்
சசியுடன் முடிகின்றன

என்கிறார். இக்கவிதையில் சசி குறியீடாக உள்ளது.

## 5.9 அப்துல் ரகுமான் கவிதைகளில் குறியீடு

குறியீட்டுக் கவிதை எழுதுவதில் அப்துல் ரகுமான் புகழ்பெற்றவராகத் திகழ்கிறார்.

சமரச வேசமிட்ட குரங்கினிடம்
அப்பத்தைப் பறிகொடுத்த
பூனைகள் நாம்

இதில் அமைந்துள்ள ஒவ்வொரு சொல்லும் குறியீடாக அமைந்துள்ளது. குரங்கு, அப்பம், பூனைகள் என்னும் சொற்கள் வாசகனுக்குள் பிறிதொன்றை உணர்த்திக் கொண்டே இருக்கும்.

என் ஆறாவது விரல் வழியே
சிலுவையிலிருந்து
வடிகிறது ரத்தம்
ஆம்
என் மாமிசம்
வார்த்தை ஆகிறது

இக்கவிதை பால்வீதி என்னும் கவிதைத் தொகுப்பில் இடம்பெற்றுள்ளது. பால்வீதியில் அப்துல் ரகுமான் ஏராளமான குறியீடுகளைக் காண்பித்துள்ளார்.

அப்துல் ரகுமான் தொன்மக் குறியீடுகளை அதிகமாகப் பயன்படுத்துபவர். அவர்,

விற்க எதுவும் இல்லை
கண்ணகியைப் பேரம்பேசும்
கோவலர்கள் (பால்வீதி)
உதய குமாரர்களுக்குத்
தங்கள் உடல்களையே
அட்சய பாத்திரமாக்கித்
தம் வயிற்றுப் பசியைத்
தணித்துக் கொள்ளும்
மணிமேகலைகள் (பால்வீதி)

என்ற கவிதைகளில் கண்ணகி, கோவலன், உதயகுமாரன், மணிமேகலை ஆகிய பழங்கதை மாந்தர்களை இன்றைய நடைமுறை மாந்தருக்குக் குறியீடாகக் காட்டியுள்ளார்.

## 5.10 கவிஞர் பாலகுமாரனின் கவிதைகளில் குறியீடு

முட்டி முட்டிப் பால் குடிக்கின்றன
நீலக் குழல் விளக்கில்
விட்டில் பூச்சிகள்

இக்கவிதையில் கவிதையே குறியீடாக உள்ளது. விட்டில் பூச்சிகள் ஏமாந்து நிற்கும் மக்களைக் குறிக்கிறது. சொல்லின் பொருளைக் கவிதை வாயிலாக நேரடியாகக் கூறுவதைத் தவிர்த்து பிறிதொரு சொல்லைப் பிரயோகித்து அதன் மூலம் வாசகனுக்குள் ஒரு புதிய அர்த்தத்தை, பொருளை புரியச் செய்கிறது. இதுவே குறியீட்டுத் தன்மை.

## 5.11 மு.மேத்தா கவிதைகளில் குறியீடு

புதுக்கவிதை உலகில் ஒரு தனிக்காட்டு ராஜாவாக விளங்கியவர் கவிஞர் மு.மேத்தா. புதுக்கவிதை மூலம் பலவற்றைப் பேசியுள்ளார். அரளிப்பூ அழுகிறது என்னும் கவிதை குறியீட்டிற்கு நல்ல எடுத்துக்காட்டு ஆகும்.

பூக்களிலிலே நானுமொரு
பூவாய்த்தான் பிறப்பெடுத்தேன்
பூவாகப் பிறந்தாலும்
பொன் விரல்கள் தீண்டலையே
பொன் விரல்கள் தீண்டலையே – நான்
பூமாலையாகலையே

இக்கவிதை நாட்டுப்புறப் பாடல் வடிவில் அமைந்து இருந்தாலும் குறியீடும் முக்கியப் பங்க வகிக்கிறது. அரளிப்பூ என்னும் சொல்லே ஒரு முதிர்கன்னியைக் குறிக்கிறது. ஒரு முதிர்கன்னியின் மனநிலையைப் படம் பிடித்துக் காட்டுகிறது. ஒரு பூவின் வாயிலாகவே ஒரு முதில் கன்னியின் குரல் வெளிப்பட்டுள்ளது. அழுத்தமான உணர்வைக் காட்டுகிறது.

மேத்தாவின் ‘வாழை மரத்தின் சபதம்’ என்னும் கவிதை, குறியீடாக அமைந்து வாழை மரத்தைப் பாடுவதுபோல் புரட்சி மனப்பான்மையுடைய மனங்களைப் பாடுகிறது. இதனை,

நான்
நிலத்தில் விழுந்துவிட்டால் என்
கன்றெதிர்க்கும் கன்றுடைய
கன்றெதிர்க்கும்
………………………..
நான் தனி வாழையல்ல
வாழை வாழை (கண்ணீர்ப் பூக்கள்)

என்னும் கவிதை வரிகள் உணர்த்தும்.

## 5.12 கவிஞர் வாலியின் கவிதைகளில் குறியீடு

கவிஞர் வாலி ஒரு கவிதையில் ஆண்டாளைக் கல்யாணம் ஆகாத ஒரு பெண்ணுக்குக் குறியீடாகக் காட்டியுள்ளார்.

வாரணங்களும் தோரணங்களும் சூழ
ஒரு காளை புகுந்து
கைத்தலம் பற்றுவதை
கனாவில் மட்டும்
கண்டு கொண்டிருக்கம்
ஆண்டாள்கள் நாங்கள்

இக்கவிதையில் கவிஞர் வாலி ஆண்டாள் என ஓர் உயர்திணையைக் குறியீடாகக் காட்டியுள்ளார். இக்கவிதையிலும் முதிர்கன்னியையே குறியீடாகக் குறிப்பிட்டுள்ளார். அவர்களின் சோகத்தைச் சொல்லியுள்ளார்.

## 5.13 ஜகந்நாதராஜாவின் கவிதைகளில் குறியீடு

அஞ்சு விரலும் ஒன்று போலிராது
என்பது உண்மைதான்
அதற்காக
நடுவிரல் மட்டும்
நாலடி வளர்ந்தால்
நறுக்காமலிருக்க முடியுமா? (சலனம்)

என்ற கவிதையில் நடுவிரல் களையப்பட வேண்டிய தீமைக்குக் குறியீடாக அமைந்துள்ளது.

## 5.14 குறியீடுகளின் பொதுவான வகைப்பாடுகள்

குறியீடுகளின் தன்மையைப் பொறுத்து கவிஞர் அப்துல் காதர்,

1. நேர்
2. புனைவியல்
3. உலகளாவியது
4. தொன்மம்
5. வழக்கு
6. இடம் காலம் பற்றியது
7. சொந்தம்
8. அதீதம்

என எட்டு வகைக் குறியீடுகளை இனம் காண்கின்றார். கவிஞர் மீராவின் கனவுகள் என்னும் கவிதைத் தொகுப்பில் இவ்வின வகைப்பாடுகள் உள்ளதாக அப்துல் காதல் விளக்ககிறார்.

மேலும் அப்துல் ரகுமான்,

1. பொதுநிலை
2. தனிநிலை
3. சொந்தம்
4. அகிலத்துவம்
5. வழக்கு
6. தறுவாய்
7. மறிதரு
8. தற்குறி
9. தூய
10. திட்டமிடல்
11. மானுடன்
12. அறிவு
13. உணர்வுநிலை

குறியீடுகள் பலவகையாயினும் அவை பயன்படுத்தும் படைப்பாளிகளின் மனத்திறனை வெளிப்படுத்துபவையாகும். இருண்மை

எனினும் கவிதைக்கு ஒரு தகுதியை ஏற்படுத்தும் வாசகனை ஒரு புதிய உலகத்திற்கு அழைத்துச் செல்லும்.

குறிப்புகள்

## 5.15 படிமம்

இதனை ஆங்கிலத்தில் Image என்பர். படிமம் என்பது உணர்வும் அறிவும் இணைந்து உருவாக்கம் மனக்காட்சியாகும். சி.சு.செல்லப்பா, "புலன் உணர்வுகளோடும் மன உணர்வுகளோடும் தொடர்பு கொண்ட காட்சிப்பொருள் கருத்துப்பொருள் ஆகியவற்றின் மன உருக்காட்சி நிலையே படிமம்" என்பர். படிமத்திற்குக் காட்சித் தன்மை அடிப்படைப் பண்பாகும்.

புடிமம் என்பது வார்ப்பு, பிரதிமை, உருவத்தோற்றம் என்று பொருள்படும். படிமம் என்பது ஒரு பரந்த காட்சியமைப்பு.

சொற்களால் நெஞ்சத் திரையில் வரையும் ஓவியம் தான் படிமம் என்பது. வெறும் வருணனை கூடப் படிமம் தான். ஆனாலும் உவமை, உருவகம், தொன்மம் அடங்கிய சொற்களால் உருவாக்கப்படும் சொல் ஓவியம் சிறந்த படிமமாகும்.

மொழி நேரடியாகச் சுட்டுவதன் மூலம் பொருள் அளிக்கிறது. பலசமயம் அந்தமுறை போதாமலாகும்போது இன்னும் குறியீட்டுத்தன்மை தேவையாகிறது. இதற்காக மக்கள் பல வழிகளைக் கண்டடைகிறார்கள். அவை இலக்கிய வடிவம் கொள்கின்றன. உவமை, உருவகம், வர்ணனைகள் என இவை பலவகைப்படும். மொழியின் நேரடிச் சுட்டுத்தன்மை கூடக்கூட இவை குறையும். புழங்குடி மொழிகளில் இவை மிக அதிகம். தமிழில் இவற்றை நாம் ஒட்டுமொத்தமாக அணிகள் என்கிறோம்.

அணிகள் பலவகை. அனைத்தையும் ஒன்றாகச் சுட்டும் ஒரு கருத்துருதான் படிமம் என்பது. உவமை உருவகம் எல்லாமே ஒட்டுமொத்தமாக கவித்துவப் படிமங்களே. ஒன்றைச் சொல்லி அது உணர்த்தும் பொருளைக் கேட்பவன் கற்பனைக்கே விட்டுவிடுவதே படிமம் என்பது. வயித்திலே பால் வார்த்தான் என்பது ஒரு படிமம்.

## 5.16 சங்க இலக்கியத்தில் படிமம்

ஈருயிர்ப் பிணவின் வயவுபசி களைஇய

இருங்களிறு அட்ட பெருஞ்சின உழுவை
நூாம நல்லரா கதிர்பட உமிழ்ந்த
மேய்மணி விளக்கின் புலர் ஈர்க்கும் (அகநா.373:12-15)

எருமைவெளியனார் மகன் கடலனார் எழுதிய இப்பாடலில் இரண்டு படிமக்காட்சிகள் அமைந்துள்ளன.

இப்பகுதியில் புலியின் அன்பு வாழ்க்கை விவரிக்கப்படுகிறது. தனது பெண்புலியின் பசியைக் களைவதற்காக யானையைக் கொன்று வந்த ஆண்புலி, அதனைப் பாம்பு உமிழ்ந்த மணியின் வெளிச்சத்தில் இழுத்துச் செல்கிறது.

தலைவியைப் பிரிந்து தலைவன் பொருள் தேடுவதற்காகச் சென்றிருக்கிறான். அவன் சென்ற வழியின் கொடுமையை நினைத்தும், அவன் திரும்பி வந்த தன்னை மணமுடிக்காத நிலை குறித்தும் தலைவி வருந்துகின்றாள். அவள் தனது தோழிக்குக் கூறுவதாக இப்பாடல் அமைகிறது.

இப்பாட்டின் இரு படிமக் காட்சிகளும் ஒன்றிற்கொன்று முரணானவை. முதல் காட்சியில் தனது பசியைத் தீர்த்துக் கொள்வதற்காக மின்னி இடிக்கும் வானத்தையும் பொருட்படுத்தாமல் புற்றுக்குள் கைவிட்டு ஈயற் சோற்றை உண்ண விரும்பும் கரடியின் சித்திரத்தைக் காண்கிறோம். அதற்கு எதிரான மற்றொரு காட்சியில் தனது மனைவியாகிய புலியின் துயர் தீர்க்கச் சிறுவெளிச்சத்திலும் தான் கொன்ற யானையை இழுத்துச் செல்லும் ஆண்புலியின் செயலைக் காண்கிறோம்.

இங்கு தலைவி அமைக்க விரும்பும் இல்லறக்காட்சியின் குறியீடாக இரண்டாவது செயற்படிமம் இடம்பெறுகிறது. எப்படி அந்த ஆண்புலி தனது பெண்புலிக்காக யானையைக் கொன்று நள்ளிரவிலும் இழுத்துவர முற்படுகிறதோ அப்படித் தனக்காகத் தன் கணவன் வாழும் இல்லற வாழ்வைத் தலைவி நாடுகிறாள் என்பது குறியீட்டுச் செய்தியாக அமைகிறது.

ஆனால் முதற்காட்சியோ தனது இன்பத்தை மட்டுமே கருதித் தன் பசியைத் தீர்த்துக்கொள்ள முனையும் கரடியைக் காட்டுகிறது. அவ்வாறே தலைவனும் இப்போது செயற்படுவதாகத் தலைவி நினைக்கிறாள். அதனால் அவள் வருந்துகிறாள். ஆனால் எவர் மீதும்

தவறில்லை என்றும் தோழியிடம் துன்பத்தோடு உரைக்கிறாள். ஆகவே இப்பாடலில் படிமங்கள் குறியீடுகளாகச் செயல்பட்டு இப்போது காணும் வாழ்க்கை நிலைக்கும், கற்பனை செய்துள்ள வாழ்க்கை நிலைக்குமான முரணை மிகச் சிறப்பாக எடுத்துரைக்கின்றன என்பதைக் காணமுடிகிறது.

## 5.17 பாரதியின் கவிதையில் படிமம்

படிம உத்திக்குப் பாரதியின் 'அக்கினிக் குஞ்சு' சான்றாக அமைகின்றது. ஒரு மரப்பொந்தில் வைக்கப்படும் சிறுதீப்பொறி (அக்கினிக் குஞ்சு) காட்டையே எரித்துச் சாம்பலாக்கும் வல்லமையுடையது என்ற பொருள் தரும் இக்கவிதை சிறு நெருப்புக்களாக நாடெங்கும் ஆங்காங்கே எரிக்கும் ஒரு வரலாற்றுக் காட்சியாக விரிகிறது.

## 5.18 தருமு சிவராமின் கவிதைகளில் படிமம்

தருமு சிவராமின் 'பூமித்தோலில் அழகுத் தேமல்' எனத் தொடங்கும் கவிதை சிறந்த படிமக் கவிதையாகப் பாராட்டப்படுகிறது. இக்கவிதையில் பூமிப்பரப்பில் படரும் சூரிய ஒளியை, பூமியாகிய தோலில் படரும் அழகிய தேமல் என்று இவர் வருணிக்கும் பொழுது மெல்லிதான வெளிச்சம் படர்ந்த நிலத்தில் அழுத்தமான ஒளிபரவும் காட்சி கண்முன்னே விரிகிறது.

## 5.19 சுகுமாரின் கவிதையில் படிமம்

அள்ளி
கைப்பள்ளத்தில் தேக்கிய நீர்
நதிக்கு அந்நியமாச்சு,
இது நிச்சலனம்
ஆகாயம் அலைபுரளும் அதில்
கைநீரைக் கவிழ்த்தேன்
போகும் நதியில் எதுஎன்நீர்?

என்னும் சுகுமாரனின் கவிதையில் ஆற்றின் நீரோட்டம், கைப்பள்ளத்தில் அள்ளிய நீர் ஆகிய படிமங்கள் சமூக நீரோட்டம், தனிவாழ்வு அல்லது தனிமனம் என்பனவற்றைக் குறிக்கிறது.

## 5.20 கல்யாண்ஜியின் கவிதைகளில் படிமம்

எது எதனின் சுவடென்று'
தெரியாமல் மணல்மீது
ஒன்றின் மேல் ஒன்றாக
வாத்துக்கால் பலசாரின்
சுவடுகளை மேய்க்கின்ற
சுவடாக ஒரு மனிதக்
தடம் கிடக்கும்
நதி நடக்கும்
துணையாக

என்னும் கவிதை மனித வாழ்வை விரித்துக் காட்டுகிறது.

## 5.21 ஞானக்கூத்தனின் கவிதைகளில் படிமம்

சூளைச் செங்கல் குவியலே
தனிக்கல் ஒன்று சரிகிறது

(அன்று வேறு கிழமை)

என்னும் இரண்டு வரிக் கவிதையின் படிமக் காட்சி மரணம், குறும்பு, தண்டனை போன்ற எத்தனையோ நிகழ்வுகளுடன் பொருந்தி அமைகிறது. அபி காமத்தை ராப்பிச்சைக்காரணாகக் கூறும் கவிதை சிறந்ததொரு படிமக் கவிதையாகும்.

## 5.22 பசுவய்யாவின் கவிதைகளில் படிமம்

கதவைத் திற காற்று வரட்டும்
சிலையை உடை
என்
சிலையை உடை
கடலோரம்
காலடிச் சுவடு
கதவைத் திற காற்று வரட்டும்

(நடுநிசி நாய்கள்)

என்ற பசுவய்யாவின் கவிதையில் உள்ளக் கதவை அகல விரித்து உலக அனுபவங்களை நுழையவிடு 'தான்' என்னும் சிலையை உடை. வாழ்வின் பக்கங்களில் நம்மைப் போன்ற ஏனையோர் பலர் உள்ளத்தைக் காணலாம் என்ற கருத்து விளங்கும்

## 5.23 தொகுத்துக் காண்போம்:

- குறியீடு படிமம் ஆகியவை சங்க இலக்கியத்திலும் நாம் காணலாம் என்பது பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- தற்காலக் கவிஞர்களான ந.பிச்சமூர்த்தி, நகுலன், கலாப்பிரியன், அப்துல் ரகுமான், பாலகுமாரன், மு.மேத்தா, வாலி, ஜகந்நாத ராஜா ஆகியோர்களின் கவிதைகளில் காணப்படும் குறியீடுகள் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- சங்க இலக்கியத்திலும் மற்றும் பாரதி, தருமு சிவராம், சுகுமார், கல்யாண்ஜி, ஞானக்கூத்தன், பசுவையா ஆகியோர்களின் கவிதையில் படிமமும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.

## 5.24 சோதித்தறியும் வினா விடைகள்

1. குறியீடு என்றால் என்ன? விளக்குக

இதனை ஆங்கிலத்தில் symbol என்பர். தமிழில் குறியீடு என்பதற்கு சின்னம், அடையாளம் என்று பொருள்படும். குறியீடு என்பது ஒரு பொருளுக்குப் பதிலாக மற்றொரு பொருளைப் பதிலியாகக் காட்டுவதாகும். காட்டப்படும் பொருள் ஒன்றாகவும் உணர்த்தப்படும் பொருள் வேறொன்றாகவும் அமைத்து ஒரு வெளிப்பாட்டுச் சிறப்பைத் தோற்றுவிப்பது குறியீடு.

˙. 2. படிமம் என்றால் என்ன? விளக்குக

இதனை ஆங்கிலத்தில் Image என்பர். படிமம் என்பது உணர்வும் அறிவும் இணைந்து உருவாக்கம் மனக்காட்சியாகும். சி.சு.செல்லப்பா, "புலன் உணர்வுகளோடும் மன உணர்வுகளோடும் தொடர்பு கொண்ட காட்சிப்பொருள் கருத்துப்பொருள் ஆகியவற்றின் மன உருக்காட்சி நிலையே படிமம்" என்பர். படிமத்திற்குக் காட்சித் தன்மை அடிப்படைப் பண்பாகும்.

3. குறியீட்டுக் கவிதை ஏதேனும் ஒன்றைச் சுட்டுக

**நகுலன் கவிதையில் குறியீடு**

சித்தர்களுக்கு குதம்பை, பாரதிக்கு கண்ணம்மா போல் நகுலனுக்க சுசீலா. கவிஞர் சுசீலாவைக் குறியீடாக்கி ஏராளமான கவிதைகள் எழுதியுள்ளார்.

நேற்று ஒரு கனவு
முதல் பேற்றில்
சுசீலாவின்
குர்ப்பம் அலசி விட்டதாக
இந்த மனதை
வைத்துக் கொண்டு
ஒன்றும் செய்ய முடியாது

இக்கவிதையின் தலைப்பு 'அலைகள்' மனத்தில் கா அலைகள் எழ செய்கின்றது. இதுவொரு வகையான குறியீடு.

## 5.25 பயிற்சி வினா

1. குறியீட்டுக் கவிதைக்கும், படிமக் கவிதைக்கும் உள்ள ஒற்றுமைகளை விளக்குக

## 5.26 மேலும் படித்தறிக

**1. கவிக்கோ அப்துல் ரகுமான், புதுக்கவிதையில் குறியீடு, அன்னம்-அகரம் பதிப்பகம், தஞ்சாவூர் - 613007**

# பிரிவு 2: அகப்பொருள் - புறப்பொருள்

## கூறு 6: அகப்பொருள் - புறப்பொருள் - ஐந்திணை விளக்கம்

### 6.பாடஅமைப்பு

6.1 அறிமுகம்
6.2 குறிக்கோள்கள்
6.3 அகம் விளக்கம்
6.4 அகப்பொருள்
6.5 அகத்தைப் பாடும் முறையும் பாவும்
6.6 அகப்பொருள் பாகுபாடு
6.6.1 முதற்பொருள்
6.6.1.1 மழைக்காலம்
6.6.1.2 பனிக்காலம்
6.6.1.3 கோடைக்காலம்
6.6.2 கருப்பொருள்
6.6.3 உரிப்பொருள்
6.7 புறப்பொருள்
6.7.1 வெட்சி
6.7.2 கரந்தை
6.7.3 வஞ்சி
6.7.4 காஞ்சி
6.7.5 உழிஞை
6.7.6 நொச்சி
6.7.7 தும்பை
6.7.8 வாகை
6.7.9 பாடாண்
6.7.10 பொதுவியல்
6.9.11 கைக்கிளை
6.7.12 பெருந்திணை
6.8 ஐந்திணை விளக்கம்
6.8.1 களவு
6.8.1.1 களவொழுக்கத்தின் வகைகள்
6.8.1.1.1 இயற்கைப் புணர்ச்சி
6.8.1.1.1.1 தலைவியால் கிடைக்கும் புணர்ச்சி
6.8.1.1.1.2 தெய்வத்தால் கிடைக்கும் புணர்ச்சி
6.8.1.1.2 இடந்தலைப்பாடு
6.8.1.1.3 பாங்கற்கூட்டம்
6.8.1.1.4 பாங்கியிற் கூட்டம்
6.8.2 களவுக்காலத்துப் புணர்ச்சியின் திறம்
6.8.3 களவில் கூற்று நிகழ்த்துவதற்கு உரியவர்கள்

## 6.1 அறிமுகம்

மக்களின் அகவாழ்க்கையை விளக்குவது அகப்பொருள் என்றும், மக்களின் புற வாழ்க்கையை விளக்குவது புறப்பொருள் என்றும் வழங்கப்படுவதைப் பண்டைக்கால இலக்கியங்களும், இலக்கணங்களும் உரைக்கின்றன். ஐந்திணை என்ற நில அமைப்புப் பாகுபாடும், ஒழுக்க நிலைகளையும் அறியலாம். தொல்காப்பியம் முதல் பிற்கால இலக்கணங்களும், சங்க இலக்கியம் முதல் பிற்கால இலக்கியங்கள் வரை அகம் புறம் என்ற வாழ்க்கை அமைப்பைப் போற்றுவதும், எந்நிலமானாலும் அது குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்திணை அமைப்பிற்குள்ளாகவே அடங்கும் என்ற இலக்கண, இலக்கியக் கருத்துகள் பற்றியும் இப்பகுதியில் காண்போம்.

## 6.2 குறிக்கோள்கள்

- அகம் என்பது ஒத்த அன்புடைய தலைவனும் தலைவியும் கூடுவதாகும். அகப்பொருள் என்பது குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற அகம் ஐந்திணையும் முதல், கரு, உரி என்ற மூன்று நிலைகளை உள்ளடக்கியது பற்றி அறிந்து கொள்வீர்கள்.
- புறப்பொருளானது வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, உழிஞை, நொச்சி, தும்பை, வாகை, பாடாண், பொதுவியல், கைக்கிளை, பெருந்திணை என்ற பன்னிரண்டு நிலைகளை உள்ளடக்கியதும், பற்றியும் அறிந்து கொள்வீர்கள்.
- ஐந்திணையான குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகியவை களவு, கற்பு ஆகிய இருநிலைகளில் அடங்குவதையும் இப்பாடப்பகுதியில் அறிந்து கொள்வீர்கள்

## 6.3 அகம் விளக்கம்

அகம் என்றால் உள்ளே என்று பொருள். இங்கு அகம் என்பதற்கு, அகப்பொருளானது போக நுகர்ச்சி ஆகலான், என்று இளம்பூரணர் விளக்கம் தந்துள்ளார். ஒத்த அன்பால் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம்.. அகத்தே நிகழ்கின்ற இன்பத்திற்கு அகம் என்றது ஆகுபெயராம் என்று நச்சினார்க்கினியர் விளக்கம் கூறுகின்றார்.

ஆண் பெண் சேர்வதால் கிடைக்கும் பேரின்பமானது அவர்களின் மனதிற்கு இன்பம் தருவதாய், அதே நேரத்தில் அந்த இன்பம் இத்தகையதாக இருக்கின்றது என்று பிறர்க்குக் கூறமுடியாததாய், கூறப்படாததாய் இருப்பதால் அந்தப் பேரின்பத்தை அகம் என்றனர் நம் முன்னோர்.

## 6.4 அகப்பொருள்

அகம் என்பது உள்ளத்தைக் குறிக்கும். ஒத்த அன்புடைய தலைவன் தலைவி ஆகியோர் உள்ளத்தே நிகழும் நிகழ்ச்சி அகம் எனப்படும். இவ்வொழுக்கம் அகத்திணை எனப்படும். திணை என்பதற்கு ஒழுக்கம் என்று பொருள்.

## 6.5 அகத்தைப் பாடும் முறையும் பாவும்

நாடக வழக்கிலும் உலகியல் வழக்கிலும்
பாடல் சான்ற புலனறி வழக்கம்
கலியே பரிபாட்டு ஆயிரு பாவினும்
உரிய தாகும் என்மனார் புலவர்

என்பதால் நாடக வழக்கு, உலகியல் வழக்கு, இலக்கிய வழக்கு என்ற மூன்று வழிகளில் அகம் பாடப்படும்.

அகப்பொருள் தொடக்கத்தில் கலிப்பா, பரிபாட்டு என்ற இருபாவில் பாடப்பட்டன. ‘பாவினும்’ என்ற உம்மையால் ஆசிரியப்பாவிலும், வெண்பாவிலும் பாடப்பட்டன. சங்ககாலத்தில் ஆசிரிப்பா, கலிப்பா, பரிபாடல் என்று மூவகைப் பாவிலும் பாடப்பட்டுள்ளன.

## 6.6 அகப்பொருள் பாகுபாடு

அகப்பொருளானது முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற மூன்று பாகுபாடுகளைக் கொண்டது.

### 6.6.1 முதற்பொருள்

முதல் - அடிப்படை காரணம் அனைத்திற்கும் அடிப்படையாகவும் காரணமாகவும் இருப்பது என்று பொருள்.

நிலமும் பொழுதும் முதற்பொருள் எனப்படும். நிலம் நான்கு வகைப்படும்.

1. மலையும் மலை சார்ந்த இடமும் - குறிஞ்சி

2. காடும் காடு சார்ந்த இடமும் - முல்லை
3. வயலும் வயல் சார்ந்த இடமும் - மருதம்
4. கடலும் கடல் சார்ந்த இடமும் - நெய்தல்

பாலை ஒழுக்கத்திற்குத் தனிநிலம் இல்லை. குறிஞ்சியும் முல்லையும் தன் இயல்பிலிருந்து திரிந்து வரும் நிலம் பாலையாகும்.

பெரும்பொழுது சிறுபொழுது என பொழுது இருவகைப்படும். ஓராண்டை ஆறு கூறுகளாக்கிப் பெரும்பொழுது என்றும் ஒரு நாளை அறு கூறுகளாக்கிச் சிறுபொழுது என்றும் வரையறுப்பர்.

| பெரும்பொழுது | | அதற்குரிய திங்கள் |
|---|---|---|
| 1. கார்காலம் | - | ஆவணி புரட்டாசி |
| 2. கூதிர்காலம் | - | ஐப்பசி கார்த்திகை |
| 3. முன்பனிக்காலம் | - | மார்கழி தை |
| 4. பின்பனிக்காலம் | - | மாசி பங்குனி |
| 5. இளவேனிற்காலம் | - | சித்திரை வைகாசி |
| 6. முதுவேனிற் காலம் | - | ஆனி ஆடி |

### 6.6.1.1 மழைக்காலம்

மழைக்காலம் என்பது கார்காலம் கூதிர்காலம் இரண்டும் ஆகும். கார்காலம் என்பது மழையின் தொடக்கம். கூதிர்காலம் என்பது அடைமழைக்காலம்.

### 6.6.1.2 பனிக்காலம்

பனிக்காலம் என்பது முன்பனிக்காலம், பின்பனிக்காலம் என்ற இரண்டும் ஆகும். முன்பனி என்பதில் 'முன்' என்பது நாளின் தொடக்கம். அதாவது விடியற்காலையில் குளிர்வது. பின்பனி என்பதில் 'பின' என்பது நாளின் பின்பகுதி. அதாவது படுக்கச் செல்லும் காலத்தில் குளிர்வது.

### 6.6.1.3 கோடைக்காலம்

கோடைக்காலம் என்பது இளவேனில், முதுவேனில் என்ற இரண்டும் ஆகும். வேனில் - கோடை. இளவேனில் கோடையின் தொடக்கம், முதுவேனில் கோடையின் உச்சம்.

| **சிறுபொழுது** | **அதற்குரிய நேரம்** |
|---|---|
| 1. வைகறை | -பின்னிரவு 2-6 மணி வரை |
| 2. காலை | -முற்பகல் 6-10 மணி வரை |
| 3. நண்பகல் | -முற்பகல் 10-2 மணி வரை |
| 4. எற்பாடு | -பிற்பகல் 2-6 மணி வரை |
| 5. மாலை | -முன்னிரவு 6-10 மணி வரை |
| 6. யாமம் | -முன்னிரவு 10-2 மணி வரை |

இவற்றில் விடியலையும் காலையையும் சேர்த்து 'விடியற்காலை' என்று ஒன்றாக்கி சிறுபொழுது ஐந்து என்று கூறுவாரும் உண்டு.

எல் + பாடு = எற்பாடு. எல் - சூரியன், படு – பாடு சூரியன் படுகின்ற (மறைகின்ற) காலம் என்று பொருள்.

குறிப்புகள்

இவ்வாறு வகுக்கப்பட்டுள்ள பெரும்பொழுதுகளையும், சிறுபொழுதுகளையும் ஒவ்வொரு திணைக்கும் தனித்தனியாக வரையறுத்துள்ளனர். அவையாவன,

| | திணை | பெரும்பொழுது | சிறுபொழுது |
|---|---|---|---|
| 1. | குறிஞ்சி | கூதிர் முன்பனி | யாமம் |
| 2. | முல்லை | கார் | மாலை |
| 3. | மருதம் | ஆறுபெரும்பொழுதுகளும் | வைகறை |
| 4. | நெய்தல் | ஆறு பெரும்பொழுதுகளும் | எற்பாடு |
| 5. | பாலை - | இளவேனில்,முதுவேனில் பின்பனி | நண்பகல் |

### 6.6.2 கருப்பொருள்

ஒவ்வொரு நிலத்திற்கும் இயற்கையாய் அமைந்த தெய்வம், மக்கள், உணவு, விலங்கு, பறவை, பூ, மரம், ஊர், நீர், பறை, யாழ், பண், தொழில் என்பன கருப்பொருள்கள் ஆகும்.

| **கருப்பொருள்** | **குறிஞ்சி** | **முல்லை** | **மருதம்** | **நெய்தல்** | **பாலை** |
|---|---|---|---|---|---|
| 1. தெய்வம் | முருகன் | திருமால் | இந்திரன் | வருணன் | காளி |
| 2. மக்கள் | குறவன் குறத்தி | ஆயர் ஆய்ச்சியர் | உழவன் உழத்தி | பரதர் பரத்தியர் | எயினர் எயிற்றியர் |
| 3. உணவு | மலைநெல் தினை | வரகு, சாமை | செந்நெல் | மீன், உப்பு | வழிப்பறிப் பொருள் |
| 4. விலங்கு | புலி, யானை, கரடி | முயல், மான் | எருமை, நீர்நாய் | முதலை, மீன் | செந்நாய் |
| 5. பறவை | மயில், கிளி | காட்டுக்கோழி | நாரை | கடல்காகம் | பருந்து, கழுகு |
| 6. பூ | குறிஞ்சி | முல்லை, மல்லிகை | தாமரை, குவளை | நெய்தல், தாழை | குரவம், பாதிரி |
| 7. மரம் | அகில், வேங்கை, சந்தனம் | கொன்றை, காயா | காஞ்சி, மருதம் | புன்னை, ஞாழல் | இருப்பை ஓமை |
| 8. ஊர் | சிறுகுடி, குறிச்சி | பாடி, சேரி | பேரூர் | பட்டினம், பாக்கம் | குறும்பு |
| 9. நீர் | அருவி, சுனை | காட்டாறு | ஆறு, கிணறு | கேணி | வறண்ட ஆறு |
| 10. பறை | தொண்டகம் | ஏறுகோட்பறை | மணமுழா | மீன்கோட பறை | துடி |
| 11. யாழ் | குறிஞ்சி | முல்லை | மருதம் | விளரி | பாலை |
| 12. பண் | குறிஞ்சி | சதாரி | மருதம் | செவ்வழி | பஞ்சுரம் |
| 13. தொழில் | தேன் எடுத்தல், கிழங்கு அகழ்தல் | ஆனிரை மேய்த்தல், ஏறு தழுவுதல் | நெல் பயிரிடல், அறுத்தல் | மீன் பிடித்தல், உப்பு எடுத்தல் | வழிப்பறி, நிலை கவர்தல் |

### 6.6.3 உரிப்பொருள்

ஒவ்வொரு திணைக்குமுரிய ஒழுகலாறு உரிப்பொருள் எனப்படும்.
புணர்தலும் புணர்தல் நிமித்தமும் குறிஞ்சிக்குரிய உரிப்பொருள்
இருத்தலும் இருத்தல் நிமித்தமும் முல்லைக்குரிய உரிப்பொருள்
ஊடலும் ஊடல் நிமித்தமும் மருதத்திற்குரிய உரிப்பொருள்
இரங்கலும் இரங்கல் நிமித்தமும் நெய்தலுக்குரிய உரிப்பொருள்
பிரிதலும் பிரிதல் நிமித்தமும் பாலைக்குரிய உரிப்பொருள்

## 6.7 புறப்பொருள்

அகம் அல்லாதன புறமாகும். பிறர்க்கு எடுத்துக்கூறக்கூடிய வீரம், புகழ், கொடை, கல்வி ஆகிய அனைத்தும் இதில் அடங்கும். புற ஒழுக்கம் புறத்திணை எனப்பட்டது. புறப்பொருள் திணைகள் பன்னிரண்டு வகைப்படும். அவையாவன,

1. வெட்சி
2. கரந்தை
3. வஞ்சி
4. காஞ்சி
5. உழிஞை
6. நொச்சி
7. தும்பை
8. வாகை
9. பாடாண்
10. பொதுவியல்
11. கைக்கிளை
12. பெருந்திணை

### 6.7.1. வெட்சித்திணை

அரசனால் ஏவப்பெற்றும், ஏவப்பெறாதும் மறவர் பகைவர் நாட்டு ஆநிரைகளைக் கவரச் செல்லுதல் வெட்சித்திணையாகும். அப்பொழுது அவர்கள் வெட்சிப்பூ அணிந்து செல்வர். மறவன் அரசனது ஏவலால் செல்லுதலை மன்னுறு தொழில் என்றும், ஏவலின்றித் தானே செல்லுதலைத் தன்னுறு தொழில் என்றும் கூறுவர்.

### 6.7.2. கரந்தைத்திணை

வெட்சியார் கவர்ந்து சென்ற ஆநிரையை மீட்கும் பொருட்டு அவர்களை இடைமறித்து மீட்க முயலுதல் கரந்தைத் திணையாகும். இவ்வாறு மீட்கச் செல்பவர் கரந்தைப் பூச்சூடிச்செல்வர்

### 6.7.3. வஞ்சித்திணை

தம்மை மதியாத அரசனது நாட்டைக் கைப்பற்றக் கருதி அவன்மேல் போர் தொடுப்பது வஞ்சித்திணையாகும். அப்பொழுது வீரர்கள் வஞ்சிப்பூச்சூடிச் செல்வர்.

**6.7.4. காஞ்சித்திணை**

தன் நாட்டின் மீது படையெடுத்து வரும் பகை மன்னனை எதிர்த்து, அவனது படையைத் தன் நாட்டின் எல்லை கடவாமல் தடுத்து நிறுத்துதல் காஞ்சித்திணையாகும். அப்பொழுது வீரர்கள் காஞ்சிபூச்சூடிச் செல்வர்.

**6.7.5. உழிஞைத்திணை**

பகைவர் நாட்டின் மதிலை வளைத்து முற்றுகை இடுதல் உழிஞைத்திணையாகும். அப்பொழுது வீரர்கள் உழிஞைப் பூச்சூடிச் செல்வர்.

**6.7.6. நொச்சித்திணை**

முதிலை வளைத்துக் கொண்ட பகைவர்கள் மதிலுக்குள் புகாதவாறு தடுத்து நிறுத்துதல் நொச்சித்திணையாகும். அப்பொழுது வீரர்கள் நொச்சிபூச்சூடிச் செல்வர்.

**6.7.7. தும்பைத்திணை**

பகை கொண்ட இருதிறத்துப் படைவீரர்களும் தும்பைப்பூவைச் சூடி எதிரெதிரே நின்று பெரிய போரக்களத்தில் போர் புரிவது தும்பைத் திணையாகும்.

**6.7.8. வாகைத்திணை**

வெற்றி பெற்றோர் வாகைப்பூ அணிந்து கொண்டாடி மகிழ்தல் வாகைத்திணை எனப்படும்.

**6.7.9. பாடாண் திணை**

வெற்றி பெற்ற ஆண்மகனின் வீரம், புகழ், கொடை, கல்வி ஆகிய பண்புகளைப் பாடுவது பாடாண் திணையாகும்.

**6.7.10. பொதுவியல் திணை**

பிற திணைகளில் சொல்லப்படாத கருத்துக்களையும் பொதுவாக உள்ள கருத்துக்களையும் தொகுத்து உரைப்பது பொதுவியல் திணையாகும்.

**6.7.11. கைக்கிளைத்திணை**

தலைமக்களுள் (தலைவன், தலைவி) ஒருவரிடம் மட்டும் தோன்றும் அன்பு கைக்கிளை எனப்படும். இதனை ஒருதலைக் காமம் என்பர்.

**6.7.12. பெருந்திணை**

இது பொருந்தாக்காமம் எனப்படும். ஒத்த அன்பின்றி தோன்றுவதால் இது பொருந்தாக்காமம் எனப்பட்டது. தலைமக்கள் ஒத்த அன்பினராக இல்லாமல் ஒருவரையொருவர் உறவாட அழைப்பதும், மணம் செய்து கொள்வதும் பெருந்திணையாகும்.



## 6.8 ஐந்திணை விளக்கம்

தொல்காப்பியர் அகத்திணையைக் கைக்கிளை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை என ஏழாகப் பாகுபடுத்துவர். இவற்றுள் கைக்கிளை ஒருதலைக்காமம் எனப்படும். பெருந்திணை பொருந்தாக்காமம் எனப்படும். இடையில் உள்ள குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்தும் அன்பின் ஐந்திணை என வழங்கப்படும். இந்த அன்பின் ஐந்திணையை ஒத்த காமம் என்பர்.

ஐந்திணையொழுக்கம் களவு, கற்பு என இருவகையில் அமையும். தலைவனும் தலைவியும் பால்வரை தெய்வம் என்ற ஊழின் துணையால் முன்பின் அறியாதவர்களாக இருந்தாலும் ஓரிடத்தில் சந்தித்து, காதல் கொண்டு, கலந்து இன்பம் துய்த்தல் களவு எனப்படும். இவ்வாறு களவில் ஒழுகும் கலைவனும் தலைவியும் பல்லோரறியத் திருமணம் செய்து கொண்டு வாழ்தல் கற்பு எனப்படும். இதனை கைகோள் என்பர். கை - இடம், கொள் - கோள் - கொள்கை. ஒழுக்கம். அதாவது ஐந்திணை இடத்திலும் மக்கள் கடைபிடிக்கும் ஒழுக்கம் ஆகும்.

### 6.8.1 களவு

களவு – திருட்டு. ஒருகாலத்தில் ஒருவனின் குழந்தைகளும் அவனது சொத்தே ஆகும். மக்கட்பேறு, மக்கட்செல்வம் ‘தம்பொருள் என்ப தம் மக்கள்’ என்ற தொடர்கள் இதனை உணர்த்தும். ஒருவனுக்கு உரிய பொருளை அவனுக்குத் தெரியாமல் எடுத்து வேறு ஒருவன் அனுபவிப்பது திருட்டு ஆகும். அதைப் போலவே ஒருவனின் பொருளாகிய (செல்வமாகிய) அவனின் மகளை அவனுக்குத் தெரியாமல் வேறு ஒருவன் (தலைவன்) அனுபவிப்பதும் - தனக்கு உரிமையாகக் கருதுவதும் திருட்டே ஆகும். எனவே தான் இதற்கும் களவு என்ற பெயர் வைக்கப்பட்டது.

புணர்தல், பிரிதல், இருத்தல், ஊடல், இரங்கல் என்ற ஐந்தில் பெரும்பான்மையைக் கருதிப் புணர்தலைக் களவிலும், பிரிதல் முதலானவற்றைக் கற்பிலும் சேர்ப்பதும் உண்டு.

உருவம், செல்வம், வயது, குலம், குணம், அன்பு போன்றவற்றால் ஒத்த தலைவனும் தலைவியும் மற்றவர் கொடுக்கவோ, தடுக்கவோ செய்தல் இன்றி விதிவசத்தால் தாமே எதிர்ப்பட்டுப் புணர்ந்து வருவது களவு எனப்படும்.

**6.8.1.1 களவொழுக்கத்தின் வகைகள்**

களவொழுக்கம் இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், பாங்கியற் கூட்டம் என நான்கு வகைப்படும்

**6.8.1.1.1 இயற்கைப் புணர்ச்சி**

இது முதல் சந்திப்பு. தலைவனும் தலைவியும் பாலதானையால் தாமே எதிர்ப்பட்டு வேட்கை மிகுதியால் புணர்தல் இயற்கைப் புணர்ச்சி எனப்படும். இது காமப்புணர்ச்சி, தெய்வப் புணர்ச்சி, முன்னுறு புணர்ச்சி என்று வேறுபெயர்களால் வழங்கப்படும்.

**6.8.1.1.1.1 இயற்கைப் புணர்ச்சியின் வகை**

தலைவியால் கிடைக்கும் புணர்ச்சி, தெய்வத்தால் கிடைக்கும் புணர்ச்சி என இரண்டு வகைப்படும்.

**6.8.1.1.1.1.1 தலைவியால் கிடைக்கும் புணர்ச்சி**

தலைவன் தன் காதலைச் சொல்லி, அதனைத் தலைவி ஏற்றுக் கொண்டால் எய்தும் புணர்ச்சி தலைவியால் கிடைக்கும் புணர்ச்சி எனப்படும். இதற்குத் தலைவன் முயற்சி எடுக்க வேண்டும்.

தலைவியிடம் சென்று இரந்து பின் நிற்றல், அவளின் மெய்தொட்டுப் பயிறல், பொய் பாராட்டல், இடையூறு சொல்லுதல் போன்ற முயற்சிகளை எடுக்க வேண்டும்.

**6.8.1.1.1.1.2 தெய்வத்தால் கிடைக்கும் புணர்ச்சி**

தெய்வத்தால் கிடைக்கும் புணர்ச்சி களிறு தரு புணர்ச்சி, புனல் தரு புணர்ச்சி, பூத்தரு புணர்ச்சி என மூன்று களங்களில் அமையும்.

களிறுதரு புணர்ச்சி:

யானை ஒன்று தலைவியை விரட்டிவர அவள் அஞ்சி ஓடி வந்து எதிரே வரும் தலைவனைக் கட்டிக் கொண்டு நிற்க, அவன் தன்

கைவேலினை யானையின் மீது எறிந்து அதனை விரட்டுவான். இதனால் இருவருக்கும் காதல் தோன்றும். இது களிறுதரு புணர்ச்சி எனப்படும்.

புனல்தரு புணர்ச்சி:

ஆற்றில் தலைவி குளிக்கும் போது திடீரென்று வெள்ளம் அதிகமாகியோ அல்லது கால்தவறி ஆற்றில் அவள் விழுவதாலோ அவள் ஆற்றோடு அடித்துச் செல்லப்படுவாள். அப்போது அவ்வழியே வந்த தலைவன், ஆற்றில் குதித்து அவளைக் காப்பாற்றிக் கரைசேர்ப்பான். இதனால் இருவருக்கும் காதல் தோன்றும். இது புனல் தரு புணர்ச்சி எனப்படும்.

பூத்தரு புணர்ச்சி:

தலைமகன் அழகிய பூங்கொத்தினைத் தலைவிக்குப் பரிசாகக் கொடுப்பான். இதனாலும் காதல் தோன்றும். இது பூத்தரு புணர்ச்சி எனப்படும்.இவ்வாறு இயற்கைப் புணர்ச்சியில் சில உந்துதல் காரணமாகக் காதல் தோன்றும்.

**6.8.1.1.2 இடந்தலைப்பாடு**

தலைப்படுதல் - சந்தித்தல். ஊழின் வலியால் சந்தித்துக் காதல் செய்யும் காதலர்கள் இயற்கைப் புணர்ச்சி முடிந்து மறுநாள், முதல்நாள் கூடின இடத்திற்கே சென்று ஒருவரையொருவர் சந்தித்தல் இடந்தலைப்பாடு எனப்படும்.

**6.8.1.1.3 பாங்கற் கூட்டம்**

தலைவன் பாங்கன் (தோழன்) துணையோடு தலைவியைச் சந்தித்தல் பாங்கற்கூட்டம் என்று வழங்கப்பெறும்.

**6.8.1.1.4 பாங்கியிற் கூட்டம்**

தலைவி பாங்கி (தோழி) துணையோடு தலைவனைச் சந்தித்தல் பாங்கியற் கூட்டம் எனப்படும்.

**6.8.2 களவுக்காலத்துப் புணர்ச்சியின் திறம்**

தலைவனும் தலைவியும் உள்ளத்தால் புணரும் புணர்ச்சியும் (உள்ளப் புணர்ச்சி) உடலால் புணரும் புணர்ச்சியும் (மெய்யுறு புணர்ச்சி) என்ற இருவகையான புணர்ச்சியும் களவு காலத்தில் நடக்கும்.

பெருமையும் உரனும் (அறிவு) தலைவனின் குணங்கள். அச்சம் மடம் நாணம் மூன்றும் தலைவியின் குணம். ஆதலால் மெய்யுறு புணர்ச்சிக்கு முன் உள்ளப்புணர்ச்சி நடக்கும்.

களவுக் காலத்தில் மெய்யுறு புணர்ச்சி நிகழ்வதும் உண்டு. நிகழாமல் போவதும் உண்டு. உள்ளப்புணர்ச்சி கட்டாயம் நடைபெறும்.

### 6.8.3 களவில் கூற்று நிகழ்த்துவதற்கு உரியவர்கள்

களவொழுக்கத்தில் பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி, தலைவன், தலைவி என்ற அறுவரும் கூற்று நிகழ்த்துவதற்குரியவர்கள் ஆவர். இக்களவொழுக்கம் இரண்டு மாத காலம் மட்டுமே நடைபெற வேண்டும் என இலக்கணங்கள் வரையறை செய்துள்ளன.

## 6.9 கற்பு

களவின்கண் கூடி இன்புற்ற காதலர்கள் பல்லோர் அறியத் திருமணம் புரிந்து வாழ்க்கை நடத்துதல் கற்பொழுக்கம் ஆகும். மறைந்து ஒழுகும் ஒழுக்கம் வெளிப்படுதல், தமர் கொடுப்பத் தான் பெறுதல் ஆகிய இரண்டு முதலாகிய இயற்கை நெறியில் தப்பாது மகிழ்தல், புலத்தல், ஊடல், ஊடல் உணர்தல், பிரிதல் ஆகிய நிகழ்வுகள் கற்பிற்குரியனவாகும். இங்கு மகிழ்தல் என்பது இல்லொழுக்கத்தாலும் புணர்ச்சியாலும் மகிழ்தல் ஆகும். புலவி, ஊடல் என்பன தலைமக்களிடையே ஏற்படும் சிறுபிணக்கு ஆகும். தலைவி ஊடலை நீக்குதல் ஊடல் உணர்தல் எனப்படும்.

### 6.9.1 கற்பின் இருவகை

களவின் வழி வந்த கற்பு, களவின் வழிவாராக் கற்பு எனக் கற்பு இரண்டு வகைப்படும்.

#### 6.9.1.1 களவின் வழி வந்த கற்பு

தலைவனும் தலைவியும் காதலில் (களவு) ஈடுபட்டுப் பின் திருமணம் செய்து கொள்ளுதல் களவின் வழி வந்த கற்பு ஆகும்.

#### 6.9.1.2 களவின் வழிவாராக் கற்பு

ஆணும் பெண்ணும் காதலிக்காத நிலையில் ஆண்வீட்டார் பெண் கேட்டுவர, பெண் வீட்டார் அதனை ஏற்றுப் பெண்ணைச் சடங்கின் மூலம் கொடுத்தல், முறைப்படி பெற்றோர் செய்து வைக்கும் திருமணமே

களவின் வழிவாராக் கற்பு ஆகும். இதுதான் பெருவழக்காகக் காணப்படுகிறது.



### 6.9.2 கற்புக்காலப் பிரிவுகள்

இல்லற வாழ்வில் ஈடுபட்ட தலைவன் சில காரணங்களுக்காக தலைவியைப் பிரிந்து செல்வான். அது பிரிவு எனப்படும். பிரிவு என்பது ஓதற்பிரிவு, காவற்பிரிவு, தூதிற் பிரிவு, துணைவயிற்பிரிவு, பொருள்வயிற்பிரிவு, பரத்தையிற்பிரிவு என ஆறு வகைப்படும்

#### 6.9.2.1 ஓதற்பிரிவு

படிப்பதற்காகப் பிரிந்து செல்வது ஓதற்பிரிவு ஆகும். தலைவன் தலைவியைப் பிரிந்து செல்வது ஓதற்பிரிவு. ஓதற்பிரிவுக்குச் சென்றவன் இடையில் திரும்புவதோ, படிக்கும் இடத்தில் தலைவியை நினைத்துப் புலம்புவதோ கூடாது.

ஓதற்பிரிவின் எல்லை மூன்றாண்டுகள்.

#### 6.9.2.2 காவற்பிரிவு

நாட்டைப் பகைவரிடமிருந்து காப்பாற்றுவதற்காகப் பிரிந்து செல்லல். அதாவது போருக்குச் செல்வது. இதற்கு ஓராண்டுகள் கால எல்லை.

காவல் பிரிவு இரண்டு வகைப்படும். நாடு காவல், அறக்காவல்

##### 6.9.2.2.1 நாடுகாவல்

நாடு காவல் என்பது பகைவரிடமிருந்து காத்தல். அதாவது போருக்குச் செல்லல்

##### 6.9.2.2.2 அறக்காவல்

அறக்காவல் என்பது உள்நாட்டில் அறத்தை நிலைநாட்டப் பிரிந்து செல்லல்

#### 6.9.2.3 தூதிற்பிரிவு

இது அரசர்களுக்கு இடையே தூது செல்வதற்காகப் பிரிதல். ஓலை எடுத்துச் செல்வோன், கூறியது கூறுவோன், தான் சிந்தித்துக் கூறுவோன் என மூன்று வகைப்படும். இப்பிரிவின் கால எல்லை ஓராண்டிற்கு உட்பட்டது

#### 6.9.2.4 துணைவயிற் பிரிவு

வேந்தனுக்கு உற்றுதவி செய்யவும், உறவினர்களுக்குத் துணைபுரியவும் பிரிந்து செல்வது. இதுவும் ஓராண்டுக்கு உட்பட்டது.

**6.9.2.5 பொருள்வயிற்பிரிவு**

இல்லோர்க்கு அளிக்கவும், பகையை ஒடுக்கவும், இல்லற இன்பம் துய்க்கவும் என இவற்றுக்கெல்லாம் பொருள் தேவைப்படுவதால் அதனை ஈட்ட தலைவன் பிரிந்து செல்லுதல். இதுவும் ஓராண்டுக்கு உட்பட்டது.

களவுக் காலத்தில் திருமணச் செலவுக்கத் தேவையான பொருளுக்காகப் பிரிந்து செல்வான். அது வரைவிடை வைத்துப் பொருள்வயிற்பிரிதல். இது இல்லறம் நடத்தத் தேவையான பொருளுக்காகப் பிரிந்து செல்லுதல்.

**6.9.2.6 பரத்தையிற் பிரிவு**

பரத்தையிடம் இன்பம் நுகர்வதற்காகப் பிரிந்து செல்லுதல்.

இது அயல்மனைப் பிரிவு, புறக்காவல் பிரிவ என இருவகைப்படும். காமக்கிழத்தியிடம் செல்லல் அயல்மனைப் பிரிவு, பரத்தையிடம் செல்லல் புறநகர்ப்பிரிவு.

## 6.10 தொகுத்துக் காண்போம்

- அகம் என்பது ஒத்த அன்புடைய தலைவனும் தலைவியும் கூடுவதாகும். அகப்பொருள் என்பது குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற அகம் ஐந்திணையும் முதல், கரு, உரி என்ற மூன்று நிலைகளை உள்ளடக்கியது பற்றி அறிந்து கொண்டீர்கள்.
- புறப்பொருளானது வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, உழிஞை, நொச்சி, தும்பை, வாகை, பாடாண், பொதுவியல், கைக்கிளை, பெருந்திணை என்ற பன்னிரண்டு நிலைகளை உள்ளடக்கியதும், பற்றி அறிந்து கொண்டீர்கள்.
- ஐந்திணையான குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகியவை களவு, கற்பு ஆகிய இருநிலைகளில் அடங்குவதையும் இப்பாடப்பகுதியில் அறிந்து கொண்டீர்கள்.

## 6.11 சோதித்தறியும் வினா விடைகள்

1. அகப்பொருள் என்பதை வரையறு

அகம் என்றால் உள்ளே என்று பொருள். இங்கு அகம் என்பதற்கு, அகப்பொருளானது போக நுகர்ச்சி ஆகலான், என்று இளம்பூரணர் விளக்கம் தந்துள்ளார். ஒத்த அன்பால் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம்.. அகத்தே நிகழ்கின்ற இன்பத்திற்கு அகம் என்றது ஆகுபெயராம் என்று நச்சினார்க்கினியர் விளக்கம் கூறுகின்றார்.

ஆண் பெண் சேர்வதால் கிடைக்கும் பேரின்பமானது அவர்களின் மனதிற்கு இன்பம் தருவதாய், அதே நேரத்தில் அந்த இன்பம் இத்தகையதாக இருக்கின்றது என்று பிறர்க்குக் கூறமுடியாததாய், கூறப்படாததாய் இருப்பதால் அந்தப் பேரின்பத்தை அகம் என்றனர் நம் முன்னோர்.

2. புறப்பொருள் என்பதை வரையறு

அகம் அல்லாதன புறமாகும். பிறர்க்கு எடுத்துக்கூறக்கூடிய வீரம், புகழ், கொடை, கல்வி ஆகிய அனைத்தும் இதில் அடங்கும். புற ஒழுக்கம் புறத்திணை எனப்பட்டது. புறப்பொருள் திணைகள் பன்னிரண்டு வகைப்படும். அவையாவன, வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, உழிஞை, நொச்சி, தும்பை, வாகை, பாடாண், பொதுவியல், கைக்கிளை, பெருந்திணை என்பனவாகும்.

3. ஐந்திணை என்பது யாது?

ஐந்திணை என்பது நிலம், ஒழுக்கம் என இரண்டு வகைப்படும். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகியவை அகம் ஐந்திணை எனப்படும். இது களவு, கற்பு என்ற இரு நிலைகளில் அமையும்.

## 6.12 பயிற்சி வினா

1 களவு, கற்பு பற்றிய கருத்துக்களை விவரி

## 6.13 மேலும் படித்தறிக

1. தேவிராவின் தமிழ் இலக்கணம், முனைவர் தேவிரா (இரா.இராசேந்திரன்), ஸ்ரீநந்தினி பதிப்பகம், சென்னை - 101

# கூறு 7: அகப்பொருள் துறைகள் - வரைவு கடாதல், அறத்தொடு நிற்றல்,

**உடன்போக்கு**

**7. பாட அமைப்பு:**

7.1 அறிமுகம்

7.2 குறிக்கோள்கள்

7.3 அகப்பொருள் துறைகள்

7.4 வரைவு கடாதல்

7.5 வரைவு கடாதலின் வகை

7.5.1 பொய்த்தல்

7.5.1.1 பொய்த்தலுக்கு உரியவை

7.5.2 மறுத்தல்

7.5.1.2 மறுத்தலுக்கு உரியவை

7.5.3 கழறல்

7.5.1.3 கழறலுக்கு உரியவை

7.5.4 மெய்த்தல்

7.5.1.4 மெய்த்தலுக்கு உரியவை

7.6 இரவுக்குறி வந்து நீங்கும் தலைவனிடம் தோழி வரைவு கடாவுதல்

7.7 இற்செறிப்பை அறிவுறுத்தித் தோழி வரைவு கடாவுதல்

7.8 அறத்தொடு நிற்றல்

7.9 அறத்தொடு நிற்றலின் நோக்கம்

7.10 தொல்காப்பிய விளக்கம்

7.11 அறத்தொடு நிற்கக் காரணங்கள்

7.12 அறத்தொடு நிற்போரும் முறைகளும்

7.13 தமர் மறுத்த நிலையில் தோழி அறத்தொடு நிற்றல்

7.14 தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றல்

7.15 உடன்போக்கு

7.16 உடன்போக்கு நிகழ்தல்

## 7.1 அறிமுகம்

இப்பகுதி அகப்பொருள் துறைகளான வரைவு கடாதல், அறத்தொடு நிற்றல், உடன்போக்கு பற்றி விளக்குகிறது. சங்க இலக்கியங்களில் இத்துறை பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. சங்ககால அக வரலாற்றையும், ஒழுக்கங்களையும், அறநெறிக்கோட்பாடுகளையும் அறிமுகப்படுத்தும் நோக்கில் இவை இடம்பெற்றுள்ளன.

## 7.2 குறிக்கோள்கள்

- அகப்பொருள் துறைகள் பற்றி அறிந்து கொள்வீர்கள்
- வரைவு கடாதல் மற்றும் அதன் வகைகள் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்
- அறத்தொடு நிற்றல், நோக்கம், அறத்தொடு நிற்றற்குரியவர்கள் மற்றும் அதன் காரணங்கள் பற்றி அறிந்து கொள்வீர்கள்
- உடன்போக்கு, உடன்போக்கிற்கான காரணங்கள் மற்றும் அதன் வகைகள் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்

## 7.3 அகப்பொருள் துறைகள்

அகப்பொருளில் இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், பாங்கியற்கூட்டம், தோழியிற் கூட்டம், பாங்கி மதியுடன்பாடு, பகற்குறி, இரவுக்குறி, அல், சேட்படை, மடற்றிறம், வெறியாட்டு, நொதுமல் வரைவு, வரைவு கடாதல், அறத்தொடு நிற்றல், ஒருவழித்தணத்தல், உடன்போக்கு, பரத்தையிற்பிரிவு, ஊடல், வாயில் வேண்டல், வாயில் மறுத்தல், வாயில் நேர்தல், பொருள்வயிற்பிரிவு

ஆகிய நிகழ்வுகள் குறிப்பிடத்தக்கனவாகும். இவை துறைகள் எனப்படும். இத்துறைகள் அகமாந்தர் கூற்றுகளாக அமையும்.

## 7.4 வரைவு கடாதல்

களவு வாழ்க்கையைத் தொடர வழியின்றி – காதல் உறவு நிலைக்க வழிதேடும் தலைவியும் தோழியும் வரைவு (திருமணத்தின்) மீது விருப்பம் கொள்வர். அவ்விருப்பத்தைத் தலைவனிடமும் புலப்படுத்தி வலியுறுத்துவர். அவனை நேரடியாகவோ, குறிப்பாகவோ மணம் செய்து கொள்ளுமாறு கேட்பர். இதுவே வரைவுகடாதல் எனப்படும்.

## 7.5 வரைவு கடாதலின் வகை

தலைவனை மணம் செய்து கொள்ளுமாறு வேண்டும் வரைவு கடாதல் நான்கு வகைப்பாடுகளை உடையது. அவையாவன

1. பொய்த்தல்
2. மறுத்தல்
3. கழறல்
4. மெய்த்தல்

### 7.5.1 பொய்த்தல்

தலைவன் தலைவியை மணந்து கொள்ளும்படி செய்ய நினைத்த தோழி தலைவனிடம் பொய்யான சில செய்திகளைத் தானே புனைந்து கூறுவாள். இது பொய்த்தல் எனப்படும்.

#### 7.5.1.1 பொய்த்தலுக்கு உரியவை

1. தலைவியின் களவு ஒழுக்கம் பற்றிச் செவிலி வினவியதாகவும், ஆனால் தான் அதை மறைத்துப் பேசியதாகவும் தோழி கூறுதல்.

2. ஊரார் தலைவியைத் தூற்றும் பழிச்சொல் (அலர்) மிகுந்து விட்டது எனல்.

3. தாய், களவு ஒழுக்கத்தை அறிந்து கொண்டான் எனல்.

4. தாய் வெறியாட்டு நிகழ்த்தும் வேலனைக் கொண்டு உண்மையறிய முயன்றாள் எனல்.

5. அயலார் தலைவியைப் பெண் கேட்டு வந்தனர் எனல்.

### 7.5.2 மறுத்தல்

தலைவன் பகற்குறி அல்லது இரவுக்குறியில் தலைவியைச் சந்திக்க வருவதைத் தோழி வெளிப்படையாகவோ குறிப்பாகவோ மறுத்துப் பேசுதல் மறுத்தல் எனப்படும்.

#### 7.5.2.1 மறுத்தலுக்கு உரியவை

1. ஒரு குறிப்பிட்ட நேரத்தில் வந்த தலைவனை வேறு ஒரு நேரத்தில் வருக என்று திருப்பி அனுப்புதல்
2. பகலில் வரும் தலைவனை இரவில் வா எனல்.
3. இரவில் வரும் தலைவனைப் பகலில் வா எனல்.
4. தலைவனைப் பகலிலும் இரவிலும் வா எனல்.
5. தலைவனைப் பகலிலும் இரவிலும் வாராதே எனல்.

### 7.5.3 கழறல்

கழறல் - சொல்லுதல், நேரடியாகச் சொல்லுதல், நீ தலைவியை மணந்து கொள்ளாமல் தொடர்ந்து களவு முறையிலேயே இருத்தல் உன் நாட்டுக்கு ஏற்றதன்று. உயர்பண்பும் அன்று என்று தோழி தலைவனிடம் நேரடியாகக் கூறுதல் கழறல் எனப்படும்.

#### 7.5.3.1 கழறலுக்கு உரியவை

கழறல் - இடித்துக் கூறுதல். தலைவனின் நாடு, ஊர், குலம், மரபு, புகழ், வாய்மை, நல்வினை முதலானவற்றின் பெருமைகளைக் கூறி, நீ தலைவியை மணந்து கொள்ளாமல் இருப்பது முறையன்று என நேரடியாகக் கூறுதல்.

### 7.5.4 மெய்த்தல்

மெய் - உண்மை, மெய்த்தல் - உண்மையானவற்றைக் கூறுதல். தோழி தலைவனுக்கு உண்மைத் தன்மையை (உண்மையிலேயே தலைவிக்கு உள்ள சூழலைக்) கூறுதல் மெய்த்தல் எனப்படும்.

#### 7.5.4.1 மெய்த்தலுக்கு உரியவை

குறிப்புகள்

1. தலைவனிடம் நீ வரைவு கூறி எம் நகர்க்கு வா, அவ்வாறு வந்தால் எம் உறவினர் எதிர்கொண்டு வருவர் எனல்.

2. தலைவன் தலைவியை மணந்து கொள்வதற்கு உரிய காலம் (பருவம்) வந்துவிட்டது எனல்.

3. தலைவன் வரும் வழியில் விலங்குகளால் ஏற்படக் கூடிய அச்சத்தைச் சுட்டிக்காட்டி வற்புறுத்துதல்.

4. பிரிவைப் பொறுத்துக் கொள்ள முடியாத தலைவியின் துன்பத்தைப் போக்கும் விதத்தில் திருமணம் செய்துகொள் என வற்புறுத்துதல்.

5. குறியிடத்தில் சந்திப்பதற்கு இடையூறாகக் காவல் மிகுந்துள்ளது என்று கூறுதல்.

6. தலைவிக்குக் காமவேட்கை அதிகமானது என்று கூறுதல்

7. தலைவிக்குக் கனவினால் வந்த துன்பத்தைக் கூறுதல்.

8. தலைவியின் அழகு, தலைவனின் பிரிவினால் கெட்டது எனக் கூறுதல்.தோழி கூற்று

## 7.6 இரவுக்குறி வந்து நீங்கும் தலைவனிடம் தோழி வரைவுகடாவுதல்

இரவுக்குறி வந்து நீங்கும் தலைமகனை எதிர்ப்படும் தோழி,

வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சாரல் நாட செவ்வியை ஆகுமதி
யார்அ∴து அறிந்திசி னோரே சாரல்
சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கி யாங்குஇவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே (குறுந்.18)

என்று கூறி வரைவு கடாவுகின்றாள். இயல்பாக வளர்ந்த சிறுமூங்கிலாகிய வாழ்வேரினையுடைய வேரிலே குலைகளையுடைய பலாமரங்கள் நிறைந்த மலைச்சாரலைப் பெற்றுள்ள நாட்டையுடையவனே! பலாமரத்தினது சிறிய கொம்பில் பெரிய பழம் தொங்கியதுபோல இவளுடைய உயிரானது மிகவும் சிறிதாம். காமநோயோ மிகப்பெரிதாகும். அத்தகு நிலையை அறிந்தவர் யார்? ஒருவரும் இல்லை என்பது இப்பாடலின் பொருள். இதில் தோழி, “பழம் மிகக் கனிந்து கீழே விழுவதன் முன் உரியார் உரிய காலத்தில் கொள்வதைப்போல இவள் உயிர்விடுவதற்குமுன்

இவளுக்கு உரியவனாகி நீ வரைந்து கொள்க” எனக் கூறி வரைவு கடாவுகின்றாள்.

## 7.7 இற்செறிப்பை அறிவுறுத்தித் தோழி வரைவு கடாதல்

கழிதேர்ந்து அசைஇய கருங்கால் வெண்குருகு
அடைகரைத் தாழைக் குழீஇப் பெருங்கடல்
உடைதிரை ஒலியின் துஞ்சும் துறைவ
தொல்நிலை நெகிழ்ந்த வளையள் ஈங்குப்
பசந்தனள் மன்என் தோழி என்னொடும்
இன்இணர்ப் புன்னைஅம் புகர்நிழல்
போன்வரி அலவன் ஆட்டிய ஞான்றே (குறுந்.303)

என்னும் பாடல் இற்செறிப்பை அறிவுறுத்தித் தோழி வரைவுகடாயதாகும். ஊணுணவின் பொருட்டாகக் கழிநீரை ஆராய்ந்து அங்கு தங்கிய கரிய காலையுடைய வெண்ணிறக் குருகுகள் தம் பசி நீங்கியதும் கடற்கரையிடத்துள்ள தாழையில் கூடும். பெரிய கடலிலிருந்து எழுந்து கரையை மோதி உடைகின்ற அலைகளின் ஓசையில் துயில்கொள்ளும். அத்தகைய துறையையுடைய தலைவ! இனிய பூங்கொத்துகளையுடைய புன்னை மரத்தின் புள்ளி பட்டு விழுகின்ற நிழலிலே அப்பொழுதே என் தோழியாகிய தலைவியும் பழைய செறிபு நிலையிலிருந்து பெயரும் வளைகளையுடையவளாய் மிகவும் பசலை படரப்பெற்றாள் என்பது இப்பாடலின் பொருள். தலைவிக்குப் பசலை படர்ந்த காரணத்தால் தாய் அவளை இற்செறித்துள்ளாள் என்பது உணர்த்தப்பட்டது. அதனால் இனி நீ அவளை மணந்து கொள்ளுதலே செய்யத்தக்கது எனத் தோழி எடுத்துரைத்துள்ளமை விளங்கும்.

## 7.8 அறத்தொடு நிற்றல்

அகப்பொருள் இலக்கணத்தில் அறத்தொடு நிற்றல் என்பது முதன்மையானதொரு மரபு ஆகும். தலைமக்களின் வாழ்வை அறவழியில் நிலைப்படுத்த விரும்பும் தோழி முதலானோர் தலைவனும் தலைவியும் பிறர் அறியாமல் காதல் கொண்ட உண்மையை உரியவர்க்கு உரியவாறு எடுத்துரைப்பது அறத்தொடு நிற்றல் ஆகும். இதனால் தலைவன்

தலைவியின் காதல் வெற்றி பெறும். திருமண நிகழ்ச்சி நடைபெற முயற்சிகள் மேற்கொள்ளப் பெறும்.

தலைவன் தலைவியின் அன்பு கலந்த காதல் வாழ்க்கையை நிலைபெறச் செய்து கற்பு வாழ்வை மலரச் செய்வதே அறத்தொடு நிற்றலின் பயன் ஆகிறது. சுருங்கச் சொன்னால் களவைக் கற்பாக்கும் அருஞ்செயலே – அறச்செயலே - இது.

## 7.9 அறத்தொடு நிற்றலின் நோக்கம்

களவு கற்பில் முடியவேண்டும் என்பது இன்றியமையாதது. தலைவன் தலைவியரது களவு வாழ்வு கற்பில் முடிவது இன்றியமையாமை என்ற காரணத்தால் அறத்தொடுநிற்றல் துறை அகஇலக்கணத்தில் உருவாக்கப்பட்டிருக்கிறது.

அறமென்பது உள்நோக்கமின்றி பிறருக்கு உதவுவது. அவ்வாறு தலைமக்களது களவினைப் பெற்றோர் உளங்கொள்ளும் வகையில் தோழியும், செவிலியும் எடுத்துரைப்பதாகும். அதாவது தலைவன் தலைவி இருவரின் களவிற்கும், கற்பிற்கும் இடையில் தோழி தலைவன் வரும் வழியின் அச்சம் காரணமாகவும், தாய் தலைவியின் உடல்வேறுபாடு கண்டு வெறியாட்டு நிகழ்த்தியவிடத்தும் தலைவன் வரவினைத் தமர் மறுத்தபோதும், வேற்றுவரைவு நேரும்போதும் தலைவியின்களவினைப் பெற்றோரிடம் கூறி அக்களவினைக் கற்பாக்குவதற்குரிய செயல்களில் ஈடுபடுதல் அறத்தொடு நிற்றல் ஆகும்.

## 7.10 தொல்காப்பிய விளக்கம்

தொல்காப்பியர் “குற்றம் தீர்ந்த அறச்செய்கையாகும்” எனக் குறிப்பிடுகிறார். அறத்தொடு நிற்றல் எனும் இச்செயல் நற்றாய்க்கும், நற்றாயால் தந்தை, தமர் போன்றோருக்கும் அறிவிக்கப்படும். இவ்வறத்தொடுநிற்றல் வெறியாட்டு, இற்செறிப்பு, நொதுமலர் வரைவு, அலரச்சம் போன்றவற்றால் தலைவிக்கு ஏற்படும் இன்னல்களைத் தடுக்கம் பொருட்டு நிகழ்கிறது.

## 7.11 அறத்தொடு நிற்கக் காரணங்கள்

ஒருவர் பிறருக்கு உண்மை உணர்த்தி நிற்கும் அறத்தொடு நிலை நிகழ்வதற்கான காரணங்களாவன:

1. ஆற்று ஊறு அஞ்சுதல் (ஆறு - வழி, ஊறு – துன்பம்)

தலைவன், தலைவியைச் சந்திக்க வரும் வழியில் உள்ள இடர்ப்பாடுகளுக்குப் பிறர் அஞ்சுதல்.

2. அவன் வரைவு மறுத்தல்

தலைவியை விரும்பும் தலைவன் அவளை மணந்து கொள்ள உறவினர் மறுத்து விடுதல்.

3. வேற்று வரைவு நேர்தல்

தலைவியோடு களவில் சந்தித்த தலைவனை விடுத்து, வேறு ஒருவரைத் தலைவிக்கு மணம் முடிக்கும் சூழல் ஏற்படல்.

4. காப்புக் கைம்மிகுதல் (காப்பு – காவல்)

பகற்குறியிலோ அல்லது இரவுக் குறியிலோ தலைவி தலைவனைக் காணமுடியாதபடி – களவுப் புணர்ச்சி தொடர வாய்ப்பு இன்றி – வீட்டுக் காவல் மிகுதல்.

## 7.12 அறத்தொடு நிற்போரும் முறைகளும்

தலைவி, தோழி, செவிலி, நற்றாய் என்னும் நால்வரும் அறத்தொடு நிற்பார்கள். தலைவி தோழிக்கும், தோழி செவிலிக்கும், செவிலி நற்றாய்க்கும், நற்றாய் தந்தை, தன் ஐயர்க்கும் அறத்தொடு நிற்பர் (தன் ஐயர் - தமையன்)

அறத்தொடு நிற்போர் பற்றி,

தலைவி பாங்கிக் கறத்தொடு நிற்கும்
பாங்கி செவிலிக் கறத்தொடு நிற்கும்
செவிலி நற்றாய்க் கறத்தொடு நிற்கும்
என்ப நெறியுணர்ந் தோரே

என்று நம்பிஅகப்பொருள் கூறுகிறது.

**அறத்தொடு நிற்கும் முறைகள்**

களவுப் புணர்ச்சியைச் செவிலி கண்டவிடத்தும், காவல் மிகுந்த போதும் தலைவி அறத்தொடு நிற்பாள்

முன்னிலை மொழி, முன்னிலைப் புறமொழி – எனும் இருமுறைகளில் தோழி அறத்தொடு நிற்பாள்.

முன்னிலை மொழி – முன்னிற்பார்க்கு நேரே கூறுதல்

முன்னிலைப் புறமொழி – முன்னிற்பார்க்குக் கூற வேண்டிய செய்தியைப் பிறருக்குக் கூறுவது போலக் குறிப்பிடுவது.

## 7.13 தமர் மறுத்த நிலையில் தோழி அறத்தொடு நிற்றல்

இற்செறிப்பினால் தலைவியின் ஆற்றாமை மிகுந்தபொழுதும், வெறியாட்டு நடைபெறும் சூழலிலும் அயலார் வரைவு வேண்டி வரும் நிலையிலும் தலைவன் வரைவோடு வர அதனைத் தமர் மறுத்த நிலையிலும் தோழி அறத்தொடு நிற்பாள்.

அகவன் மகளே அகவன் மகளே
மனவுக்கோப்பு அன்ன நல்நெடுங் கூந்தல்
அகவன் மகளே பாடுக பாட்டே
இன்னும் பாடுக பாட்டே அவர்
நல்நெடுங் குன்றம் பாடிய பாட்டே (குறுந்.23)

என்னும் பாடல் தலைவியின் வேறுபாடு கண்ட செவிலி கட்டுவிச்சியை அழைத்துக் குறிகேட்டபொழுது தோழி அறத்தொடு நின்றதாகும். தெய்வங்களை அழைத்துப் பாடும் கட்டுவிச்சியே! கட்டுவிச்சியே! சங்குமணிக்கோவை போன்ற வெண்மையான நல்ல நீண்ட கூந்தலையுடைய கட்டுவிச்சியே! நீ இப்பொழுது பாடிய பாட்டை மீண்டும் பாடுக. மேன்மேலும் அப்பாட்டைப் பாடுக. அவருடைய நல்ல நெடிய குன்றத்தைக் குறித்துப்பாடிய பாட்டை மீண்டும் பாடுவாயாக என்பது இப்பாடலின் பொருள். இதில் தோழி, "அவர் நல்நெடுங்குன்றம்" என்று கூறுவதால் அவர் யார் என்னும் ஆராய்ச்சி தாயாரிடையே தோன்றும். அதனால் அவர்கள் உண்மை அறிவர். இவ்வாறு இப்பாடல் தோழி அறத்தொடு நிற்றலாக அமைகிறது.

## 7.14 தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றல்

மரங்கொல் கானவன் புனம்துளர்ந்து வித்திய
பிறங்குகுரல் இறடி காக்கும் புறம்தாழ்
அம்சில் ஓதி அசைஇயல் கொடிச்சி
திருந்துஇழை அல்குற்குப் பெருந்தழை உதவிச்

செயலை முழுமுதல் ஒழிய அயலது
அரலை மாலை சூட்டி
ஏமற் றன்றுஇவ் அழுங்கல் ஊரே (குறுந்.214)

என்னும் பாடல் செவிலித்தாய் தலைவிக்கு வெறியாட்டு எடுக்கும் நிலையில் தோழி அறத்தொடு நிற்றலாக அமைந்ததாகும். மரங்களை வெட்டி அழிந்த காட்டில் வாழும் குறவன் அக்கொல்லையை உழுது விதைத்த விளங்குகின்ற கதிரையுடைய தினையைத் தலைவி காவல் காக்கின்றாள். அத்தலைவி பின்புறம் தாழ்ந்த அழகிய கூந்தலையும் மெலிந்த சாயலையும் உடையவள். நன்கு செய்யப்பெற்ற மேகலை ஆபரணத்தை அல்குலுக்கு அணிந்தவள். மேலும் அசோகினது பருத்த அடிமரம் தழையின்றி நிற்குமாறு பறித்துச் செய்த தழையுடையை உடுத்தவள். அத்தழைக்க மாறுபட்டதாய் அரலை மாலையை முருகனுக்கு அணிவித்து இந்த ஆரவாரத்தையுடைய ஊர் இப்பொழுது மயக்கமுற்றது என்பது இப்பாடலின் பொருள். இதில் தோழி, தலைவிக்குத் தழையுடை தந்த காதலன் இருக்க அன்னை முதலியோர் தெய்வ அணங்கு என்று வெறியாட்டு எடுக்க முற்பட்டனரே என உண்மை நிலையைச் சுட்டி தலைவிபால் அன்புடையான் ஒருவன் உள்ளான் என்பதை வெளிப்படுத்தியுள்ளாள்.

## 7.15 உடன்போக்கு

உடன்போக்கு என்பது பண்டைய தமிழகத்தில் காதல் கொண்ட தலைவனும் தலைவியும் பிறர்க்குச் சொல்லாமல் ஊரை விட்டுச் சென்றுவிடுவது என்று பொருள்படும். தலைவி தலைவனுடன் செல்வதால் உடன்போக்கு என்று கூறப்படுகிறது.

## 7.16 உடன்போக்கு நிகழ்தல்

தலைவன் தலைவியின் காதல் மலர்ந்து வளர்ந்த களவு வாழ்க்கை ஊரார்க்குத் தெரியவரும் முன்னரே தோழி அறத்தொடு நிற்பாள். திருமணம் முடிக்க வற்புறுத்துவாள். அதற்கு மாறாக, களவு வெளிப்பட்டுவிடும் சூழலில் பலரும் அறிந்து அலர் பேசும் நிலையில் உடன்போக்கு நிகழும்.

அகத்திணை நெறியில் களவு வாழ்க்கை கற்பாக மாறுவதற்கு இரண்டு வழிகள் குறிப்பிடப் பெற்றுள்ளன. ஒன்று அறத்தொடு நிற்றல், மற்றொன்று உடன்போக்கு. இவற்றுள் ஒன்று நிகழ்ந்தால் மற்றொன்று நிகழாது. அறத்தொடு நின்ற பின் உடன்போக்கு நிகழாது. அவ்வாறே உடன்போக்கின் பின்னர் அறத்தொடு நிற்பதால் பயன் ஒன்றும் இல்லை. இவ்விரண்டில் ஒன்றுதான் களவு நாடகத்தின் நிறைவு காட்சியாக அமையும்.

## 7.17 உடன்போக்கின் வகைகள்

தலைவனும் தலைவியும் ஒன்று சேர்ந்து செல்லும் உடன்போக்கு என்பது எட்டு வகைகளை உடையது. அவையாவன,

1. போக்கு அறிவுறுத்தல்: தலைவியை உடன் அழைத்துச் செல்லுமாறு தோழி தலைவனுக்குச் சொல்லுதல்

2. போக்கு உடன்படாமை:

தோழி கூறியவாறு உடன்போக்காகச் செல்வதற்குத் தலைவனும், தலைவியும் மறுத்தல்

3. போக்கு உடன்படுத்தல்: உடன்போக்காக அழைத்துச் செல்வதைத் தவிர,தலைவிக்கு வேறு பாதுகாப்பும் ஆதரவும் இல்லை என்று தலைவனிடம் செல்லுவது அன்றிக் கற்பு மேம்பாட்டை நிலைநிறுத்த வேறு வழியில்லை என்று தலைவியிடம் கூறுதல். அவ்வாறு இருவரிடமும் கூறி அவ்விருவரையும் உடன்போக்கிற்கு உடன்படச் செய்தல்.

4. போக்கு உடன்படுதல்: தோழியின் விளக்க உரைகளைக் கேட்ட தலைவனும் தலைவியும் உடன்போக்காகச் செல்வதற்கு ஒப்புக் கொள்ளுதல்.

5. போக்கல்: உடன்போக்காகச் செல்வதற்கு இருவரும் உடன்பட்ட பிறகு, தலைவி தலைவனுடன் செல்வதற்குத் தோழி வழியேற்படுத்திக் கொடுத்தல்.

6. விலக்கல்: உடன்போக்காகச் சென்ற தலைவியின் இயலாமை (தளர்ச்சி)கண்டோர் அன்பு காட்டுதல், உடன்போக்கை விலக்கிக் கொண்டு தங்கள் இருப்பிடத்தில் தங்கிச் செல்லுமாறு கூறுதல்.

7. புகழ்தல்: தலைவன் உடன்போக்கில் இடைவழியில் தலைவியைப் புகழ்ந்து கூறுதல்.

8. தேற்றல்:இடைவழியில் இயலாமை காரணமாகத் தளர்ச்சி அடைந்து தங்கிய தலைவியிடம் தன் ஊர் அருகில்தான் உள்ளது என்று கூறித் தலைவன் அவளைத் தேற்றல்.

மேற்கண்ட எட்டும், உடன்போக்கின் வகைகளாக அமைகின்றன. உடன்போக்காகச் செல்லுமாறு தோழி வழங்கும் அறிவுரையில் தொடங்கி, தலைவன் அவனது ஊரை நெருங்கும் நேரம் வரையிலான செயல்பாடுகளின் வகைப்பாடுகளாக மேற்கண்ட எட்டும் அமைகின்றன.

## 7.18 அகப்பொருள் ஓம்படைத் துறை

தலைவி உடன்போக்கிற்கு உடன்பட்டதும் தோழி அதற்கு வேண்டுவன புரிந்து முன்பு இரவுக்குறிபோல ஒருவரும் அறியாதவாறு அவளைக் குறியிடத்திற்குக் கொண்டு செல்வாள். தலைவனை நோக்கி, "இவள் நம் அடைக்கலப் பொருள். அருள் கொண்டு 'இன்றுபோல் என்றும் பாதுகாப்பாயாக' என்று வேண்டி நீங்குவாள். இதனை 'அகப்பொருள் ஓம்படை' என்ற துறையாகக் குறிப்பிடும்.

அண்ணாந் தேத்திய வனமுலை தளரினும்
பொன்னேர் மேனி மணியின் தாழ்ந்த
நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்
நீத்தல் ஓம்புமதி பூக்கேழ் ஊர (நற்.10)

என்ற பாடலில் தோழி தலைவியைப் பாதுகாக்குமாறு கூறுவது விளங்கும்.

இவ்வாறு ஒருவரும் அறியாவண்ணம் தலைவி தலைவனுடன் சென்ற செய்தி வெளிப்பட்டதும் தலைவியின் உறவினர் தலைவன் செயலுக்கு மிகவும் சினந்து அவ்விருவர் செயலையும் தடுத்தற்பொருட்டு விரைந்து எழுவர். இங்ஙனம் இவர்கள் சினந்து எழுவதற்கு முன்பே, தலைவி சென்ற செய்தியைக் கேட்டதும் செவிலித்தாய் தலைவன் தலைவி சென்ற இடைச்சுரத்தை நோக்கித் தேடிப் போவாள். வழியில் எதிர்ப்படும் கண்டோரிடம் கேட்டு அவரால் அவ்விருவரும் மகிழ்ச்சியோடு சென்று கொண்டிருத்தலையும் அவர்கள் அறநெறியில் நிற்றலையும் அறிவாள். அவ்வாறு இடைச்சுரத்தில் பின்செல்லும் செவிலி ஆற்றாமையால் மேற்செல்ல இயலாமல் மீண்டு வருவாள். தலைவியைப்

பெற்ற நற்றாய் செவிலியைப் போல நெடுந்தூரம் செல்லாளாயினும் தன்னூர்த் தெருவரையிலும் சென்று தேடுவாள்.

## 7.19 கொண்டுதலைக் கழிதல்

தலைவன் தலைவியை உடன்கொண்டு செல்லும்பொழுது இடைவழியில் தலைவியின் சுற்றத்தார் திரண்டுவந்து தலைவனை மேற்செல்லா வண்ணம் தடுத்து நிற்பர். அப்பொழுது தலைவி அவர்களுடைய செயலுக்கு மனம் ஒவ்வாது தன் காதலனைச் சார்ந்து நிற்பள். அதனைக் கண்ட சுற்றத்தார் தலைவியின் செயல் அறநெறிப்பட்டது ஆதலின் தாம் அதற்கு எந்தவித இடையூறும் விளைவித்தல் கூடாது என்று அவர்கள் உடன்போக்கிற்கு உடன்பட்டுத் தன் ஊர்நோக்கி மீள்வர். அங்ஙனம் அவர்கள் சென்றதும் தலைவன் தலைவியைத் தம் ஊருக்கு அழைத்துச் செல்வான். திருமணம் செய்து கொள்வான். இவ்வாறு தலைவன் தலைவியை உடன்கொண்டு செல்லுதல் உயர்ந்த அறநெறியாகக் கருதப்பெற்றமை,

சுரநனி இனிய வாகுக தில்ல
அறநெறி இதுவெனத் தெளிந்தஎன்
பிறைநுதற் குறுமகள் போகிய சுரனே (ஐங்.371)

என்ற பாடலால் விளங்கும். இதில் தன் மகள் அறநெறி இதுவென உணர்ந்து உடன்போயினமைக்கு மகிழ்ந்து அவள் சென்ற பாலைநிலம் தண்ணியதாகுக என்று நற்றாய் வேண்டுவது புலப்படும். இவ்வுடன்போக்கினைத் தொல்காப்பியர் கொண்டுதலைக் கழிதல் என்பார். இவ்வுடன்போக்குடன் களவொழுக்கம் முடிவடையும்.

## 7.20 தொகுத்துக் காண்போம்

- அகப்பொருள் துறைகள் பற்றி அறிந்து கொண்டீர்கள்
- வரைவு கடாதல் மற்றும் அதன் வகைகள் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்
- அறத்தொடு நிற்றல், நோக்கம், அறத்தொடு நிற்றற்குரியவர்கள் மற்றும் அதன் காரணங்கள் பற்றி அறிந்து கொண்டீர்கள்
- உடன்போக்கு, உடன்போக்கிற்கான காரணங்கள் மற்றும் அதன் வகைகள் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்

## 7.21 சோதித்தறியும் வினா விடைகள்

1. வரைவு கடாதல் என்றால் என்ன? விளக்குக

களவு வாழ்க்கையைத் தொடர வழியின்றி – காதல் உறவு நிலைக்க வழிதேடும் தலைவியும் தோழியும் வரைவு (திருமணத்தின்) மீது விருப்பம் கொள்வர். அவ்விருப்பத்தைத் தலைவனிடமும் புலப்படுத்தி வலியுறுத்துவர். அவனை நேரடியாகவோ, குறிப்பாகவோ மணம் செய்து கொள்ளுமாறு கேட்பர். இதுவே வரைவுகடாதல் எனப்படும். 1. பொய்த்தல், மறுத்தல், கழறல், மெய்த்தல் என்ற நான்கு வகையினை உடையது

2. அறத்தொடு நிற்றல் என்றால் என்ன? விளக்குக

அகப்பொருள் இலக்கணத்தில் அறத்தொடு நிற்றல் என்பது முதன்மையானதொரு மரபு ஆகும். தலைமக்களின் வாழ்வை அறவழியில் நிலைப்படுத்த விரும்பும் தோழி முதலானோர் தலைவனும் தலைவியும் பிறர் அறியாமல் காதல் கொண்ட உண்மையை உரியவர்க்கு உரியவாறு எடுத்துரைப்பது அறத்தொடு நிற்றல் ஆகும். இதனால் தலைவன் தலைவியின் காதல் வெற்றி பெறும். திருமண நிகழ்ச்சி நடைபெற முயற்சிகள் மேற்கொள்ளப் பெறும்.

தலைவன் தலைவியின் அன்பு கலந்த காதல் வாழ்க்கையை நிலைபெறச் செய்து கற்பு வாழ்வை மலரச் செய்வதே அறத்தொடு நிற்றலின் பயன் ஆகிறது. சுருங்கச் சொன்னால் களவைக் கற்பாக்கும் அருஞ்செயலே – அறச்செயலே - இது.

3. உடன்போக்கின் வகைகள் யாவை?

1. போக்கு அறிவுறுத்தல், 2. போக்கு உடன்படாமை, 3.போக்கு உடன்படுத்தல், 4. போக்கு உடன்படுதல், 5. போக்கல், 6. விலக்கல், 7. புகழ்தல், 8. தேற்றல் ஆகியவையாகும். மேற்கண்ட எட்டும், உடன்போக்கின் வகைகளாக அமைகின்றன. உடன்போக்காகச் செல்லுமாறு தோழி வழங்கும் அறிவுரையில் தொடங்கி, தலைவன் அவனது ஊரை நெருங்கும் நேரம் வரையிலான செயல்பாடுகளின் வகைப்பாடுகளாக மேற்கண்ட எட்டும் அமைகின்றன.

## 7.22 பயிற்சி வினா

1. அறத்தொடு நிற்றல் துறையில் தோழியின் பங்கினை விவரி



### 7.23 மேலும் படித்தறிக

குறிப்புகள்

**1. வையாபுரிப்பிள்ளை.எஸ், இலக்கியச் சிந்தனைகள், இன்ஸ்டிடியூட் ஆப் சவுத் இண்டியன் ஸ்டடீஸ், சென்னை, 1989**

## கூறு 8: புறப்பொருள் துறைகள் - வஞ்சினக்காஞ்சி, கையறுநிலை, செவியறிவுறூஉ

8. பாட அமைப்பு

8.1 அறிமுகம்

8.2 குறிக்கோள்கள்

8.3 புறப்பொருள் துறைகள்

8.4 வஞ்சினக் காஞ்சி

8.5 புறப்பொருள் வெண்பாமாலையில் வஞ்சினக் காஞ்சி

8.6 புறநானூற்றில் வஞ்சினக் காஞ்சி

8.7 பூதப்பாண்டியனின் வஞ்சினம்

8.8 பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் வஞ்சினம்

8.9 சோழன் நலங்கிள்ளியின் வஞ்சினம்

8.10 கையறுநிலை

8.11 கையறுநிலையின் வகைகள்

8.11.1 வடக்கிருந்தோரைக் கண்டு பாடியவை

8.11.2 இறந்த அரசனை எண்ணிப் பாடியவை

8.11.3 மாண்ட வல்லாளனை எண்ணிப் பாடியவை

8.12 புறநானூற்றில் கையறுநிலை

8.13 செவியறிவுறூஉ

8.14 புறநானூற்றில் செவியறிவுறூஉப் பாடல்கள்

8.15 தொகுத்துக் காண்போம்

8.16 சோதித்தறியும் வினாக்கள்

8.18 பயிற்சி வினா

8.19 மேலும் படித்தறிக



## 8.1 அறிமுகம்

புறப்பொருள் துறைகள் தொல்காப்பியத்திலும், புறப்பொருள் வெண்பாமாலையிலும் காணப்படுகின்றன. சங்க இலக்கியங்கள் அகம் சார்ந்த மக்களின் வாழ்வைப் பற்றியும், புறம் சார்ந்த மக்களின் வாழ்வைப் பற்றியும் எடுத்துரைக்கின்றன. இதனால் சங்ககால மக்களின் வாழ்வியல், பண்பாடு, மன்னர்களின் நிலை, ஆட்சிமுறை, போர் பற்றிய செய்திகள், கொடை போன்றவற்றை நன்கு உணரமுடிகிறது. இப்பாட அமைப்பு புறம் பற்றிய செய்திகளை அறிமுகப்படுத்தும் பகுதியாக அமைகிறது.

## 8.2 குறிக்கோள்கள்

- புறப்பொருள் துறைகள் பற்றி அறிவீர்கள்
- வஞ்சினக்காஞ்சி பற்றி தெரிந்து கொள்வீர்கள்
- கையறுநிலை பற்றி அறிந்து கொள்வீர்கள்
- செவியறிவுறூஉ பற்றி அறிவீர்கள்

## 8.3 புறப்பொருள் துறைகள்

அகம் அல்லாதன புறமாகும். இளம்பூரணர், “புறப்பொருளாவது மறஞ்செய்தலும் அறஞ்செய்தலும் ஆகலான் அவற்றான் ஆய பயன் பிறர்க்குப் புலனாதலின் புறம் என்றார்” என்பர். இப்புறப்பொருளைத் தொல்காப்பியர் வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என ஏழு திணைகளாகப் பகுத்துரைப்பர். புறப்பொருள் வெண்பாமாலை வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண், கைக்கிளை, பெருந்திணை, பொதுவியல் எனப் பன்னிரண்டாக விளங்கும். இப்புறத்திணைகள் ஒவ்வொன்றும் பல துறைகளைக் கொண்டுள்ளன. அவற்றுள் காஞ்சித்திணையின் துறைகளான வஞ்சினக்காஞ்சியும் கையறுநிலையும் பாடாண் திணையின் துறையான செவியறிவுறூஉம் குறிப்பிடத்தக்கனவாகும்.

## 8.4 வஞ்சினக் காஞ்சி

இன்னவாறு செய்வது தவிர்வேனாயின் இன்ன நிலையினை எய்தக் கடவேன் என்று கூறப்பெறும் சூளுரை வஞ்சினக்காஞ்சி எனப்படும்.

## 8.5 புறப்பொருள் வெண்பா மாலையில் வஞ்சினக்காஞ்சி

காஞ்சிப் படலம் (காஞ்சி என்பது காஞ்சி மரத்தினது பூ இதனைச் சூடியவராக இவர் போர் மலைதலால் இது காஞ்சிப் படலம் எனவாயிற்று. வஞ்சியும் காஞ்சியும் தம்முள் மாறே என்பது பன்னிரு படலம். இதனால் இது வஞ்சித்திணைக்கு எதிரான போர்ச்செயல் இதுவென்பது விளங்கும். வஞ்சி ஒரு மன்னன் தன்னுடைய பகை நாட்டின் மேற் படை கொண்டு சென்று அதனைக் கைக்கொள்ள நேர்வது. அதற்கு மாறான இது, அங்ஙனம் பகைவேந்தன் படைகொண்டு வருதலை அறிந்த நாட்டிற்கு உடையான். அவனுக்கு எதிராகப் பொருது தன் நாட்டினைக் காத்துக் கொள்ளற்கு முற்படுவது ஆகும்.

காஞ்சி காஞ்சியதிர்வே தழிஞ்சி
பெரும்படை வழக்கொடு பெருங்காஞ் சியய்யே
வாள்செல வென்றா குடையது செலவே
வஞ்சினக் காஞ்சி பூக்கோள் நிலையே
புகழ்த்தலைக் காஞ்சி தலைமா ராயம்
தலையொடு முடிதல் மறப்பெயர்க் காஞ்சி
மாற்றரும் பேய்நிலை பேய்க்காஞ் சிய்யே
தொட்ட காஞ்சி தொடாக் காஞ்சிய்யே
மன்னைக் காஞ்சி கட்காஞ் சிய்யே
ஆஞ்சிக் காஞ்சி மகட்பாற் காஞ்சி
முனைகடி முன்மிருப் புளப்படத் தொகைஇ
எண்ணிய வகையான் இருபத் திரண்டும்
கண்ணிய காஞ்சி துறையென மொழிப (4).

காஞ்சி என்பது திணை, அதனோடு அதன் துறைகளான காஞ்சியதிர்வு முனைகடி முன்னிருப்பு ஈறாக வரும் இருபத்தொன்றும் சேரக் காஞ்சி இருபத்திரண்டு என்று ஆன்றோர் உரைப்பார்கள். காஞ்சியதிர்வு, தழிஞ்சி, படைவழக்கு, பெருங்காஞ்சி, வாள் செலவு, குடைச்செலவு, வஞ்சினக் காஞ்சி, பூக்கோள் நிலை, தலைக்காஞ்சி, தலைமாராயம், தலையொடு முடிதல், மறக் காஞ்சி, பெய்நிலை, பேய்க்காஞ்சி, தொட்ட காஞ்சி, மன்னைக் காஞ்சி, கட்காஞ்சி, ஆஞ்சிக்காஞ்சி, மகட்பாற்காஞ்சி, முனைகடி, முன்னிருப்பு எனவரும் இருபத்தொன்றும் இத்திணையின் துறைகள் ஆகும்.

## 8.6 புறநானூற்றில் வஞ்சினக்காஞ்சி

புறநானூற்றில் 71, 72, 73 ஆகிய மூன்று பாடல்கள் வஞ்சினக்காஞ்சிக்கு உரியனவாக உள்ளன. இவ்வஞ்சினக் கூற்றுக்களுள் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன், தலையாலங்காணத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், சோழன் நலங்கிள்ளி ஆகியோரது வஞ்சினங்கள் சிறப்பானவையாகும்.

வேந்தர்தம் வஞ்சினப் பாடல்களில் பகை அரசர் செய்த சூழ்ச்சியும் இகழ்ந்து கூறிய சிறுசொல்லும் குறித்து அவர்கள் சினம் கொண்டமை அறியப்படுகின்றது அவ்வாறு சிறுசொல் சொல்லிய அரசரைப் புறங்காணல் வேண்டும். போர்க்களத்தே பொருதல் வேண்டும் என்று உள்ளக் கொதிப்புடன் மொழிந்துள்ளனர். இப்பகுதிகள் அவர்தம் ஊக்க மிகுதியைப் புலப்படுத்துகின்றன. ஆனால் இவற்றைத் தொடர்ந்து “இவ்வாறு செய்யாவிடில் இன்ன இன்ன நிலைமை எய்துவேனாக” எனக் கூறும் பகுதிகள் அவர்தம் உணர்வின் சிறப்பைப் புலப்படுத்துகின்றன.

## 8.7 பூதப்பாண்டியனின் வஞ்சினம்

என்னொடு பொருதும் என்ப அவரை
ஆரமர் அலறத் தாக்கித் தேரொடு
அவர்ப்புறங் காணேன் ஆயின் சிறந்த
பேரமர் உண்கண் இவளினும் பிரிக
அறநிலை திரிய அன்பின் அவையத்துத்

திறனில் ஒருனை நாட்டி முறை திரிந்து
மெலிகொல் செய்தேன் ஆகுக (புறநா.71)

என்னும் அடிகள் பூதப்பாண்டியன் வஞ்சினங்களுள் சிறப்பானவையாகும். இதில் தன் வாழ்க்கைத் துணையாக விளங்கிய அரசியைப் பிரியாது வாழும் வாழ்வைப் பூதப்பாண்டியன் விழுமியதாகப் போற்றியுள்ளமை தெளிவாகும். தன் நாட்டின்கண் அவைக்களந்தோறும் அறமும் திறமும் மிக்கோரை நிலைநாட்டிச் செங்கோல் செலுத்துதலை உயர்ந்ததாகக் கருதியுள்ளான்.

## 8.8 பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் வஞ்சினம்

சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை
அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொடு
ஒருங்கஅகப் படேஎன் ஆயின் பொருந்திய
என்நிழல் வாழ்நர் செல்நிழல் காணாது
கொடியன்னம் இறைஎனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக
ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடிமருதன் தலைவன் ஆக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்
புலவர் பாடாது வரைகஎன் நிலவரை
புரப்போர் புன்கண் கூற
இரப்போர்க்கு ஈயா இன்மையான் உறவே
(புறநா.72)

என்னும் அடிககள் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனது உள்ளத்தில் மிக்கிருந்த உணர்வுகள் இன்ன இன்ன எனக் காட்டும் பகுதியாகும். ஏன்னை எண்ணிச் சிறுசொல் சொல்லிய வேந்தரைத் தாக்கி வெல்லேனாயின் என் குடிகள் கண்ணீர் பரப்புங் கொடுங்கோலன் ஆவேனாக மாங்குடி மருதனாரைத் தலைவராகக் கொண்ட புலவர்கள் பாடாது ஒழிவாராக. என்னால் புரக்கப்படுவோர் துன்பப்படுமாறும் இரப்போர்க்கு இல்லை எண்ணுமாறும் என் கடமையினின்றும் தவறுவேனாக என்பன வஞ்சினமாக அமைகிறது.

## 8.9 சோழன் நலங்கிள்ளியின் வஞ்சினம்

…………பொருந்திய
தீதில் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்
பல்லிருங் கூந்தல் மகளிர்
ஒல்லா முயக்கிடைக் குழைகஎன் தாரே
(புறநா.73)

என்னும் அடிகள் சோழன் நலங்கிள்ளி தன் உயிரினும் சிறந்ததாய் உள்ளத்தே வைத்துப் போற்றிய கொள்கையை விளக்கும் வஞ்சினப் பகுதியாகும். இதில் சோழன் நலங்கிள்ளி, "என் உள்ளம் எள்ளிய மடவோன் வருந்துமாறு பொருது வெல்லேனாயின் என் வாழ்வு பரத்தையர்பால் உறுவதாக உள்ளத்துக் காதல் கொள்ளாத அப்போது மகளிரின் பொருந்தாக் கூட்டத்தினால் கெடுவேனாக" என வஞ்சினம் கூறுகின்றான்.

இங்ஙனம் வேந்தர்களது வஞ்சின மொழிகளால் அவ்வேந்தர் காதல் மிக்க கற்பு வாழ்க்கையினையும், குடிகளின் கண்ணீர் காணாக் காவல் நெறியினையும், புலவர் விரும்ப வாழும் பெருநிலையினையும் வறுமையைத் துரத்தி வெல்லும் வண்மையினையும் உயர்ந்தனவாகக் கொண்டு போற்றிய சிறப்பு புலனாகும்.

## 8.10 கையறுநிலை

கை என்பது ஆகுபெயராய் அதன் செயலைக் குறிக்கும். தலைவனை இழந்து செயலற்று நிற்பது கையறுநிலை. தொல்காப்பியர்,

கழிந்தோர் தேஎத்து அழிபடர் உறீஇ
ஒழித்தோர் புலம்பிய கையறு நிலை (தொல்.1025)

எனக் காஞ்சித் திணையின் துறைகளுள் ஒன்றாகக் குறிப்பர். செத்தோர் மாட்டுச் சாவாதார் வருத்தமுற்றுப் புலம்புதல் கையறுநிலையாகும். புறப்பொருள் வெண்பாமாலை கரந்தைத் திணையிலும் பொதுவியல் திணையிலும் கையறுநிலை என்னும் இத்துறையைச் சுட்டுகின்றது. கரந்தைத் திணையின் துறையாக வரும் கையறுநிலைக்கு, "வாட்போரில் பட்ட கரந்தை மறவன் நிலைகண்டு அவனால் புரக்கப்பட்ட பாணர், தம் செயலற்ற நிலை கூறியது" என விளக்கம் தருவர் ஐயனாரிதனார்.

பொதுவியல் திணையில் வரும் கையறுநிலைத் துறையை அவர் இரண்டு கொளுவில் விளக்கியுள்ளார். மன்னன் இறந்தானாக அவனைச் சேர்ந்தோர் கையற்றுக் கூறியது கையறுநிலை என்பது முதல் விளக்கம். இறந்தவனுடைய புகழை எடுத்துக்கூறி இரங்கினும் கையறுநிலையாகும் என்பது இரண்டாவது விளக்கம். இவ்வாறு புறத்திணை இலக்கணங்கள் ஒரவரது இறப்பைக் கண்டு செயலற்றுக் கூறும் கூற்றைக் கையறுநிலையாகக் கூறியுள்ளன.

## 8.11 கையறுநிலையின் வகை

1. வடக்கிருந்தோரைக் கண்டு பாடியவை
2. இறந்த அரசனை எண்ணிப் பாடியவை
3. மாண்ட வல்லாளனை எண்ணிப் பாடியவை

### 8.11.1 வடக்கிருந்தோரைக் கண்டு பாடியவை

- சேரமான் பெருஞ்சேரலாதன் வடக்கிருந்தானைக் கழாஅத்தலையார் பாடியது (புறநா.65)
- பாரிமகளிரைப் பார்ப்பார்ப்படுத்த கபிலர் வடக்கிருந்து பாடியது. (புறநா.236)
- பிசிராந்தையார் வடக்கிருந்ததைப் பொத்தியார் கண்ணகனார் பாடியவை (புறநா.217, 218)
- கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்ததைக் கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூதனார் பொத்தியார் பாடியவை. (புறநா.219)
-

### 8.11.2 இறந்த அரசனை எண்ணிப் பாடியவை

- பாரியை இழந்த கபிலர். (புறநா.112, 113, 114, 115, 116, 117, 118, 119, 120)
- சோழன் கரிகாற் பெருவளத்தானை இழந்த கருங்குழல் ஆதனார். (புறநா.224)
- சோழன் நலங்கிள்ளியை இழந்த ஆலந்தூர் கிழார். (புறநா.225)

- சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை இழந்த மாறோக்கத்து நப்பசலையார், ஆவடுதுறை மாசாத்தனார் ஆகியோர். (புறநா.226, 227)
- அதியமான் தகடூர் பொருது வீழ்ந்த எழினியை அரிசில்கிழார் (புறநா.230)
- அதியமான் நெடுமான் அஞ்சியை இழந்த ஔவையார். (புறநா.231, 232, 235)
- வேள் எவ்வியை இழந்த வெள்ளெருக்கிலையார். (புறநா.233, 234)
- வேளிமானை இழந்த பெருஞ்சித்திரனார். (புறநா.237, 238)
- நம்பி நெடுஞ்செழியனை இழந்த பேரெயின் முறுவலார். (புறநா. 239)
- ஆய் அண்டிரனை இழந்த குட்டுவன் கீரனார், உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் ஆகியோர் (புறநா.240, 241)
- ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன் மகன் பெருஞ்சாத்தனை இழந்த குடவாயிற் கீரத்தனார், தொடித்தலை விழுத்தண்டினார் ஆகியோர்.(புறநா.242, 243)
-

**8.11.3 மாண்ட வல்லாளனை எண்ணிப் பாடியவை**

- மீளியாளன் ஆநிரை தந்து அரிது செல் உலகுக்குச் சென்றனன். பாண! செல்லும் வழியில் கள்ளி நிழல் தரும் பந்தலின் கீழ் நடுகல் ஆயினன். ஆற்றங்கரைக் கம்பத்தில் ஏற்றப்பட்ட விளக்கு காற்றில் அவிந்து நிற்பது போல் அவன் நடுகல் உள்ளது. அதற்கு மயிற்பீலி சூட்டிச் செல்லுங்கள். (வடமோதங்கிழார்.புறநா.260)
- ஆநிரை தந்தவன் கல்லாயினான். அவனது வீட்டு முற்றத்தில் அவன் மனைவி மயிர் கொய்த தலையோடு நீரில்லாத ஆற்று மணலில் கிடக்கும் அம்பி போலக் காணப்படுகின்றாள். (ஆவூர் மூலங்கிழார். புறநா.261)
- பாண! ஒருகண் மாக்கிணை முழக்கிக் கொண்டு செல்லும்போது, வழியில் மீட்பதில் வெள்ளத்தைத் தடுக்கும்

கற்சிறை போல விளங்கியவனின் நடுகல் இருக்கும். அதனைத் தொழுது செல்லுங்கள். (மதுரைப் பேராலவாயாயர், புறநா.263)

- ஆநிரை தந்து, ஆநிரை மீட்டுப் பாணர்களைப் பேணிய அவனுக்குப் பெயர் பொறித்துக் கல் நட்டு மயிற்பீலி சூட்டி வழிபடுகின்றனர். (உறையூர் இளம்பொன் வாணிகனார், புறநா.264)
- கோவலர் வேங்கைப் பூமாலை சூட்ட நடுகல் ஆயினன். (சோனாட்டு முகையலூர்ந்த சிறுகருந் தும்பியார், புறநா.265)
- நவி, (கோடாரி) பாய்ந்து கிடக்கும் மரம் போல வாள் பாய்ந்து கிடப்பவனைப் பாடியது. (கழாத் தலையார், புறநா.270)

## 8.12 புறநானூற்றில் கையறுநிலை

புறநானூற்றில் 53 கையறுநிலைப் பாடல்கள் உள்ளன. பாரி இறந்த நிலையில் அவரது மகளிர் பாடிய பாடல் கையறுநிலைக்குச் சிறந்த சான்றாகும்.

அற்றைத் திங்கள் அவ்வெண் ணிலவின்
எந்தையும் உடையேம்எம் குன்றும் பிறர்கொளார்
இற்றைத் திங்கள் இவ்வெண் ணிலவின்
வென்றெறி முரசின் வேந்தர்எம்
குன்றும் கொண்டார்யாம்எந்தையும் இலமே (புறநா.112)

என்னும் பாடல் பாரிமகளிர் பாடிய கையறுநிலையாகும். மூவேந்தரும் முற்றியிருந்த அற்றைத் திங்களின் அவ்வெள்ளிய நிலவின்கண் எம்முடைய தந்தையையும் உடையேம். எம்முடைய மலையையும் பிறர் கொள்ளவில்லை. இற்றைத் திங்கள் இவ்வெள்ளிய நிலவின்கண் வேந்தர் எம்முடைய மலையையும் பிறர்கொள்ளவில்லை. இற்றைத் திங்கள் இவ்வெள்ளிய நிலவின்கண் வேந்தர் எம்முடைய மலையையும் கொண்டார். யாம் எம்முடைய தந்தையையும் இழந்தோம் என்பது இப்பாடலின் பொரள். ஒரு மாதத்திற்கிடையில் தங்கள் வாழ்கையில் ஏற்பட்ட பெரிய மாற்றத்தை எண்ணிக் கலங்கியமை இப்பாடலின் புலனாகும். அதியமான் நெடுமான் அஞ்சி இறந்த நிலையில் ஔவையார்,

சிறியகட் பெறினே எமக்கீயும் மன்னே
பெரியகட் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந்து உண்ணும் மன்னே
சிறுசோற் றானும் நனிபலகலத்தன் மன்னே
பெருஞ்சோற் றானும் நனிபல கலத்தன் மன்னே
என்பொடு தடிபடு வழிஎல்லாம் எமக்குஈயும் மன்னே
அம்பொடு வேல்நுழை வழிஎல்லாம் தான்நிற்கும் மன்னே
நரந்தம் நாறும் தன்கையால்
பலவு நாறும் என்தலை தைவரும் மன்னே
…………………………………………………..
ஆசுஆகு எந்தை யாண்டுளன் கொல்லோ
இனிப் பாடுநரும் இல்லை பாடுநர்க்கு ஒன்று ஈகுநரும் இல்லை
பனித்துறைப் பகன்றை நறைக்கொள் மாமலர்
சூடாது வைகியாங்கு பிறர்க்கு ஒன்று
ஈயாது வீயும் உயிர் தவப் பலவே (புறநா.235)

எனப் பாடுவது கையறுநிலைக்கு மற்றொரு சான்றாகும். இதில் ஔவையார் அதியமான் உயிருடன் இருந்தபொழுது தன்னுடன் எங்ஙனம் பழகினான் என்பதையும் அவன் எங்ஙனம் சிறந்த வள்ளலாகத் திகழ்ந்தான் என்பதையும் உருக்கமாகப் பாடியுள்ளார். அதியமான் இப்பொழுது எங்கு உள்ளானோ? என மொழிவது அவரது கையற்ற நிலையை உணர்த்துகின்றது. அதியமான் அஞ்சி சிறய அளவு மதுவைப் பெறின் எங்களுக்கே தருவான். அது கழிந்தது. பெரிய அளவினையுடைய மதுவைப் பெற்றானாயின் அதனை யாம் உண்டுபாட எஞ்சிய மதுவைத்தான் விரும்பி நுகர்வான். அது கழிந்தது. சிறிய அளவினையுடைய சோற்றின் கண்ணும் மிகப்பல கலத்தோடும் கூட உண்பான். அது கழிந்தது. மிக்க அளவினையுடைய சோற்றின் கண்ணும் மிகப்பல கலத்தோடும் கூட உண்பான். அது கழிந்தது. அம்போட கூடிய ஊன் தடியை முழுதும் எங்களுக்கு அளிப்பான். அது கழிந்தது. அம்போடு வேல் தைத்து உருவுமிடமாகிய போர்க்களம் முழுதும் தானே சென்று நிற்பான். அது கழிந்தது. நரந்தம்பூ நாறும் தன்னுடைய கையால் புலால் நாறும் எம்முடைய தலையைத் தடவுவான். அது கழிந்தது.

எமக்குப் பற்றாகிய எம் இறைவன் எவ்விடத்து உள்ளானோ? அவனைப் போலப் பாடப்படக்கூடிய தகுதியுடைய ஒருவரும் இனி இல்லை. அவனைப் போலக் கொடுப்பாரும் இனி இல்லை. பகன்றை மலர் ஒருவரும் சூடாது வீணாக ஆவது போல ஒருவருக்கும் ஒரு பொருளைக் கொடுக்காது மாய்ந்துபோகும் உயிர்களே பலவாகும். இவ்வாறு ஔவையார் அதியமான் அஞ்சி இறந்த நிலையில் தன் செயலற்ற நிலையைப் புலப்படுத்தியுள்ளார்.

ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன் இறந்த நிலையில் குடவாயிற்கீரத்தனார், "முல்லையே பெருஞ்சாத்தன் இறந்தபின் இத்துன்பக்காலத்தில் நின்னை இளையரும் சூடார். வளையணியும் பருவமகளிரும் கொய்து குழலிற் சூடார். பாணனும் சூடான். பாடினியும் அணியாள். இந்த ஒல்லையூர் நாட்டில் ஏனோ நீ பூத்துள்ளாய்" என வினவுவது போல தன் கையறுநிலையைப் புலப்படுத்தியுள்ளார். இதனை,

வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை
முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாடே (புறநா.242)

என்னும் அடிகள் உணர்த்தும். இவ்வாறு கையறுநிலைப் பாடல்கள் ஒரு தலைவன் இறந்த நிலையில் அவன் இறப்புக்கு வருந்திப் பாடுவனவாக அமைந்துள்ளன.

## 8.13 செவியறிவுறூஉ

மன்னனுக்கு நிலைபெற்ற கருத்தினைச் சான்றோர் கூறியது செவியறிவுறூஉ என்னும் துறையாகும். செவயிற் படுமாறு உறுத்துக்கூறும் அறிவுரைகள் செவியறிவுறூஉ எனப்படும். உயர்ந்தோர் மாட்டு அவிந்து ஒழுகுதல் வேண்டும் என்ற வாய்பாட்டினால் இவ்வுரை அமையும். தொல்காப்பியர் இதனை,

செவியுறை தானே
பொங்குதல் இன்றிப் புரையோர் நாப்பண்

அவிதல் கடன்எனச் செவியுறுத் தற்றே (தொல்.1371)

என விளக்குவர்.

## 8.14 புறநானூற்றில் செவியறிவுறூஉப் பாடல்கள்



புறநானூற்றில் எட்டுப் பாடல்கள் செவியறிவுறூஉத் துறையில் அமைந்துள்ளன. சேரமான் கருவூரேறிய ஒள்வாட் கோப்பெருஞ்சேரல் இரும்பொறையைப் பாடும் நரிவெரூஉத் தலையார்,

அருளும் அன்பும் நீக்கி நீங்கா
நிரயங் கொள்பவரோடு ஒன்றாது காவல்
குழலி கொள்பவரின் ஓம்புமதி
அளிதோ தானேஅது பெறலருங் குரைத்தே (புறநா.5)

என அறிவுறுத்துகின்றார். இதில் அருளையும் அன்பையும் நீக்கி பாவம் செய்தாரை நீங்காத நரகத்தைத் தமக்கு இடமாகக் கொள்பவரோடு பொருந்தாது நீ காக்கும் நாட்டைக் குழந்தையை வளர்ப்பது போலப் பாதுகாப்பாயாக. அது அளிக்கத்தக்கது, பெறுதற்கரியது என்று கூறுகின்றார். ஒரு நாட்டை எவ்வாறு பாதுகாக்க வேண்டும் எனப் புலவர் அறிவுறுத்துவது இதனால் விளங்கும்.

பாண்டியன் இலவந்திகைப் பள்ளி துஞ்சிய நன்மாறனிடம் மதுரை மருதனிளநாகனார்,

அறநெறி முதற்றே அரசின் கொற்றம்
அதனால் நமரெனக் கோல் கோடாது
பிறரெனக் குணம் கொல்லாது
ஞாயிற் றன்ன வெந்திறல் ஆண்மையும்
திங்கள் அன்ன தண்பெருஞ் சாயலும்
வானத்து அன்ன வண்மையு மூன்றும்
உடையை ஆகி இல்லோர் கையற
நீநீட வாழிய நெடுந்தகை

என அறிவுறுத்துகின்றார். அறநெறியை முதலாகக் கொண்டது வேந்தரது வெற்றி. அதனால் இவர் நம்மவர் என அவர் செய்த கொடுந்தொழிலைப் பொறுத்துக் கோல் வளையாது, இவர் நமக்கு அயலோர் என்று அவர் நற்குணங்களைக் கெடாது, ஞாயிற்றைப் போன்ற வெய்ய திறலையுடைய வீரமம், திங்களைப் போன்ற குளிர்ந்த பெரிய மென்மையும், மழையைப் போன்ற வண்மையும் என்ற மூன்றையும் உடையவனாகி இல்லாததோர்

இல்லையாக நீ நெடுங்காலம் வாழ்வாயாக என்பது மதுரை மருதனிளநாகனாரின் அறிவுரையாகும்.

பாண்டியன் அறிவுடை நம்பியிடம் பிசிராந்தையார் இறைபெறும் முறையை ஓர் எடுத்துக்காட்டு மூலம் அறிவுறுத்துகின்றார். யானை ஒன்று தனியே நெல்வயலில் புகுந்து உண்ணத் தொடங்குமாயின் நாலு காணி ஆயினும் அது அழியும். யானையின் வாயில் புகும் உணவை விடக் காலால் பல மடங்கு உணவுப் பொருள் அழியும். ஆனால் வயலில் உள்ள நெற்கதிர்களை முற்றவிட்டுக் காய்ந்த நெல்லை அறுத்து அரிசியாக்கிக் கவளஞ்செய்து உண்பதானால் ஒரு சிறு பகுதியே பல நாளுக்குப் போதுமானதாகும். அதுபோல் அறிவிலா மன்னவன் தன் உரிமையும் வலிமையுமே கருதிக் குடிகளை வருத்திப் பொருள் பெறத் தொடங்கின் அவனும் வாழான், அவனால் உலகமும் கெடும். அறிவுடை வேந்தன் நெறி அறிந்து வளம் பெற்ற குடிகளிடமிருந்து ஆறில் ஒன்று பெறுவானாயின் அரசும் சிறக்கும். நாடும் நலம்பெற்று ஓங்கும் என்பது அவரது அறிவுரையாகும். இதனை,

காய்நெல் அறுத்துக் கவளம் கொளினே
மாநிறைவு இல்லதும் பன்னாட்கு ஆகும்
நூறுசெறு ஆயினும் தமித்துப்புக்கு உணினே
வாய்புகு வதனினும் கால்பெரிது கெடுக்கும்
அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே
கோடி யாத்து நாடுபெரிது நந்தும்
மெல்லியன் கிழவன் ஆகி வைகலும்
பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின்
யானை புக்க புலம்போலத்
தானும் உண்ணான் உலகமும் கெடுமே (புறநா.184)

என்னும் பாடல் விளக்கும். இவ்வாறு செவியறிவுறூஉப் பாடல்கள் அரசர்களுக்கு அறிவுரை கூறுவதாக அமைந்துள்ளன.

## 8.15 தொகுத்துக் காண்போம் :

- புறப்பொருள் துறைகள் பற்றி அறிந்து கொண்டீர்கள்
- வஞ்சினக்காஞ்சி பற்றி தெரிந்து கொண்டீர்கள்
- கையறுநிலை பற்றி அறிந்து கொண்டீர்கள்
- செவியறிவுறூஉ பற்றி கொண்டீர்கள்

## 8.16 சோதித்தறியும் வினாக்கள்

1. புறப்பொருள் துறைகள் எத்தனை வகைப்படும்? அவை யாவை?

…………………………………………………….

……………………………………………………..

2. வஞ்சினக் காஞ்சி என்றால் என்ன?

…………………………………………………….

………………………………………………………..

3. புறநானூற்றில் இடம்பெறும் கையறுநிலைப் பாடல்கள் எத்தனை?

……………………………………………………..

……………………………………………………

4. செவியறிவுறூஉ என்பதை வரையறு

…………………………………………..

……………………………………………..

## 8.17 பயிற்சி வினா

1. புறப்பொருள் துறைகள் பற்றிய செய்திகளை விவரி
2. வஞ்சினக் காஞ்சியில் இடம்பெறும் மன்னர்களின் சூளுரைகளை விவரி
3. கையறுநிலைப் பாடல்களின் வழி அறியலாகும் சங்ககாலப் பண்பாட்டை விவரி

4. புலவர்களின் மேன்மையை செவியறிவுறூஉப் பகுதி எங்ஙனம் விளக்குகிறது

## 8.18 மேலும் படித்தறிக

கதிர்முருகு (உ.ஆ), புறப்பொருள் வெண்பாமாலை, கௌரா பதிப்பகம், சென்னை – 05,

# கூறு 9

# அணி இலக்கணம் - உவமை, உருவகம், வேற்றுமை, பிறிது மொழிதல்,

**9.பாட அமைப்பு**

9.1 அறிமுகம்

9.2 குறிக்கோள்கள்

9.3 அணி இலக்கணம்

9.4 அணி இலக்கணங்களின் வகை

9.4.1 பொருள் அணிகள்

9.4.2 சொல் அணிகள்

9.4.3 வகைப்படுத்த வேண்டிய அணிகள்

9.5 உவமை அணி

9.5.1 பண்பு

9.5.2 தொழில்

9.5.3 பயன்

9.6 உருவக அணி

9.7 வேற்றுமை அணி

9.7.1 கூற்று வேற்றுமை அணி

9.7.2 குறிப்பு வேற்றுமை அணி

9.8 பிறிதுமொழிதல் அணி

9.9 தொகுத்துக் கூறுதல்

9.10 சோதித்தறியும் வினாக்கள்

9.11 பயிற்சி வினா

9.12 மேலும் படித்தறிக

## 9.1 அறிமுகம்

செய்யுளுக்கு அழகு சேர்ப்பது அணியாகும். தண்டியலங்கார ஆசிரியர் முப்பத்தைந்து அணி வகைகளைச் சுட்டியிருக்கிறார். அணி இலக்கணங்கள் பற்றியும், அணி வகைகள் பற்றியும் விளக்கும் அறிமுகப் பகுதியாக இது விளங்குகிறது.

## 9.2 குறிக்கோள்கள்

- அணி இலக்கணங்கள் பற்றி அறிந்து கொள்வீர்கள்
- உவமை அணி பற்றி தெரிந்து கொள்வீர்கள்
- உருவக அணி பற்றித் தெரிந்து கொள்வீர்கள்
- வேற்றுமை அணி பற்றி அறிந்து கொள்வீர்கள்
- பிறிதுமொழிதல் அணி பற்றித் தெரிந்து கொள்வீர்கள்

## 9.3 அணிஇலக்கணம்

அணி என்றால் அழகு, வனப்பு என்பது பொருள். வடமொழியில் அணி என்பதற்கு அலங்காரம் என்று பொருள்படும்.

அதாவது அகப்பொருள், புறப்பொருள் என்ற இரண்டிற்கும் இடம் செய்யுள் ஆகும். ஆகவே, செய்யுளை அழகுபடுத்தி அதன் பொருளைத் தெளிவாக எடுத்துரைக்கவே அணிகள் தோன்றின. எனவே செய்யுளின் கருத்தை அழகுற விளக்குவது அணி ஆகும்.

அணி இலக்கண நூல்கள் பல தமிழில் இருந்தாலும் 'தண்டி' என்ற ஆசிரியர் இயற்றிய 'தண்டி அலங்காரம்' என்ற அணி இலக்கண நூலே பலராலும் விரும்பிப் படிக்கும் நூலாகத் திகழ்கிறது. இவ்வாசிரியரின் காலம் கி.பி 12ஆம் நூற்றாண்டு என்பர்.

## 9.4 அணி இலக்கணங்களின் வகை

அணிகள் பொருள் அணிகள், சொல் அணிகள், வகைப்படுத்த வேண்டிய அணிகள் என்று மூவகைப்படும்.

### 9.4.1 பொருள் அணிகள்

தண்டியலங்காரம் அதிசய அணி (உயர்வு நவிற்சி அணி), அவநுதியணி, ஆர்வமொழியணி (மகிழ்ச்சி அணி), இலேச அணி, உதாத்தவணி, ஏதுவணி, ஒட்டணி, ஒப்புமைக் கூட்டவணி, ஒழித்துக் காட்டணி, சங்கீரணவணி, சமாகிதவணி, சிலேடை அணி, சுவையணி,

தற்குறிப்பபேற்ற அணி, தன் மேம்பாட்டுரை அணி, தன்மையணி (தன்மை நவிற்சி அணி, இயல்பு நவிற்சி அணி), தீவக அணி, நிதரிசன அணி (காட்சிப் பொருள் வைப்பு அணி), நிரல் நிறை அணி, நுட்ப அணி, பரியாய அணி, பரிவருத்தனை அணி, பாவிக அணி, பின்வருநிலையணி (பொருள் பின் வரு நிலையணி, சொற்பொருள் பின்வரு நிலையணி), புகழாப்புகழ்ச்சி அணி, புணர்நிலை அணி, மயக்க அணி, மாறுபடு புகழ் நிலையணி, முன்னவிலக்கணி, வாழ்த்தணி, விவேட அணி (சிறப்பு அணி), விபாவனை அணி, விரோதவணி, வேற்றுப்பொருள் வைப்பணி, வேற்றுமையணி என முப்பத்தைந்து வகைப்படும்.

### 9.4.2 சொல் அணிகள்

சொல், மோனை, சிலேடை, மடக்கு, பின்வரு நிலையணி(சொல் பின்வரு நிலையணி சொற்பொருள் பின்வரு நிலையணி), அந்தாதி என சொல் அணிகள் ஆறு வகைப்படும்.

### 9.4.3 வகைப்படுத்த வேண்டிய அணிகள்

இரட்டுற மொழிதல் அணி, இல்பொருள் உவமை அணி, உயர்வு நவிற்சி அணி, உருவக அணி, உவமை அணி, எடுத்துக்காட்டு உவமையணி, தன்மை நவிற்சி அணி, பிறிது மொழிதல் அணி, வஞ்சப் புகழ்ச்சி அணி என ஒன்பது வகைப்படும்.

## 9.5 உவமை அணி

'இது அதுபோல் உள்ளது' என்று கூறுவது உவமை ஆகும். இதில் உவமை, உவம உருபு, பொதுத்தன்மை, பொருள் என்ற நான்கு உறுப்புகள் அமைந்திருக்கும்.

உவமையை 'உவமானம்' என்றும், பொருளை 'உவமேயம்' என்றும் கூறுவர்.

| **உவமை** | **உவம உருபு** | **பொதுத்தன்மை** | **பொருள்** |
|---|---|---|---|
| தாமரை | போல் | மலர்ந்த | முகம் |
| பவளம் | போன்ற | சிவந்த | இதழ் |
| முத்து | போல் | வெண்(மை) | பல் |
| தேன் | போன்ற | இனிய | மொழி |

இவற்றுள் உவம உருபும், பொதுத் தன்மையும் மறைந்து வருவதும் உண்டு.

தாமரை போல் முகம் - இதில் பொதுத்தன்மை குறைந்தது.

தாமரை முகம் - இதில் உவம உருபும், பொதுத்தன்யும் குறைந்தன.

பொதுத்தன்மை குறைந்து வருவதை ‘உவமைத் தொகை’ அல்லது தொகை உவமை என்பர்.

சொல் இலக்கண உவமைத் தொகை வேறு, அணி இலக்கண உவமைத் தொகை வேறு.

தாமரை முகம் - உவமைத் தொகை

தாமரை போன்ற முகம் - உவமவிரி

எனக் கொள்வது சொல்லிலக்கண நெறி.

தாமரை முகம்

தாமரை போன்ற முகம்

இரண்டுமே உவமைத் தொகை அல்லது தொகை உவமை.

தாமரை போன்ற மலர்ந்த முகம்

இதுதான் உவமை விரி ஆகும். இவ்வாறு கொள்வது அணி இலக்கண நெறி ஆகும்.

பொதுத்தன்மை என்பது உவமைக்கும் பொருளுக்கும் பொதுவானது ஆகும்.

பவளம் போல் சிவந்த இதழ்

இதில் ‘சிவப்பு’ பொதுத்தன்மை. இது பவளம், இதழ் என்ற இரண்டிற்கும் பொதுவானது ஆகும்.

இப்பொதுமைத் தன்மை பண்பு தொழில், பயன் என்ற மூவகையாக அமையும்.

### 9.5.1 பண்பு

பண்பு என்பது ஒரு பொருளின் குணம் ஆகும். நிறம், குணம், வடிவம், அளவு ஆகியன ஒரு பொருளின் குணம் ஆகும்.

பவளம் போல் சிவந்த இதழ் - சிவப்பு – நிறம்

நீர்போல் குளிர்ந்த மேனி – குளிர்ச்சி – குணம்

நிலாப்போன்ற வட்ட முகம் - வட்டம் - வடிவம்

கடல் போன்ற பரந்த அளவு – பரந்திருத்தல் - அளவு

### 9.5.2 தொழில்

தொழில் என்பது ஒரு பொருளின் அசைவு ஆகும். அசைவு இன்றி இருப்பதும் தொழில் என்றே சொல்லப்படும். இது காலத்தோடு தொடர்புடையதாக வரும்.

புலிபோலப் பாய்ந்தான் - பாய்தல்

தீப்போலச் சுடும் - சுடுதல்

நிலவுபோல் ஒளிரும் முகம் - ஒளிர்தல்

### 9.5.3 பயன்

பயன் என்பது ஒரு பொருளால் தோன்றும் விளைவு.

மேகம் போல் கொடுக்கும் வள்ளல்

மேகம், அனைவரும் மகிழப் பெய்வது போல் வள்ளல், அனைவரும் மகிழக் கொடுத்தல், அதாவது மேகத்தால் விளையும் பயனும் (மகிழ்ச்சி) வள்ளலின் கொடையால் விளையும் பயனும் (மகிழ்ச்சி) ஒத்தலின் இது பயன் உவமை ஆயிற்று.

தம்மில் இருந்து தமதுபாத்து உண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு (குறள்.1107)

இதில் பகுத்து உண்ணும் போது தோன்றும் மகிழ்ச்சியும், தலைவியைத் தழுவும் போது உண்டாகும் மகிழ்ச்சியும் ஒத்தலின் இது பயன் உவமை ஆயிற்று.

பண்பு, தொழில், பயன் என்ற இவற்றால் தனித்தனியாக உவமை வருவதுடன் பலவும் சேர்ந்து ஒரு பொருளுக்கு உவமையாக வருவதும் உண்டு.

பவளம் போன்ற இதழ் - இதில் பவளம் போன்ற சிவந்திருக்கம் இதழ் என்று பண்பு உவமை மட்டும் வந்தது.

தாமரை போன்ற கண் - இதில் தாமரை போன்ற மலர்ச்சியை உடைய கண் என்று உவமையும், தாமரை போன்று சிவந்த கண் என்று பண்பு உவமையும் வந்தன.

மீன் போன்ற கண் - இதில் மீனின் நீண்ட வடிவம் போன்ற நீண்ட கண் என்று (வடிவம்) பண்பு உவமையாகம். மீன்

பிறழ்வது போன்று அலை மோதும் கண் எனத் தொழில் உவமையும் வந்தன.

பண்பும் தொழிலும் பயனும் என்று இவற்றில்
ஒன்றும் பலவும் பொருளொடு பொருள் புணர்ந்து
ஒப்புமை நோக்கிச் செப்புவது உவமை (தண்டி.3)

என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம் (குறள்.78)

உவமை – வெயில்

உவமஉருபு – போல

பொதுத்தன்மை – காய்தல்

பொருள் - அறம்

என இதில் நான்கு உறுப்பும் பெற்று உவமை அணி வந்துள்ளது. இதில் பொதுத்தன்மை வெளிப்பட்டு உள்ளதால் விரி உவமை என்பர்.

உடம்பாடு இலாதவர் வாழ்க்கை குடங்கருள்
பாம்போடு உடன்உறைந் தற்று (குறள்.890)

உவமை – பாம்போடு உடன் உறைதல்

உவமஉருபு – அற்று

பொருள் - உடம்பாடு இலாதவர் வாழ்க்கை

பொதுத்தன்மை - இல்லை

இதில் 'சாவுத்துன்பம்' என்ற பொதுத்தன்மை வெளிப்படாமல் மறைந்து வந்துள்ளதால் இது தொகை உவமை ஆயிற்று.

## 9.6 உருவக அணி

உவமைக்கும் பொருளுக்கும் இடையே உள்ள வேறுபாட்டை நீக்கி இரண்டையும் ஒன்றாகவே கூறுவது உருவக அணி ஆகும்.

'கயல் விழி' என்ற உவமையை முன்பின்னாக மாற்றினால் விழ்க்கயல் என்றாகும். இது விழிகயலே ஆகும் என்ற பொருளைத் தருகின்றது. அதாவது அவளுக்குக் கயல்போன்ற வழி அன்று, அவளுக்கு விழி கயலாகவே உள்ளது என்பது கருத்து.

எனவே, இதில் விழி வேறு, கயல் வேறு என்ற வேறுபாடு இன்றி இரண்டும் ஒன்றே என்ற பொருள் தருவதால் இது உருவகமாயிற்று.

| உவமை | உருவகம் |
|---|---|
| தாமரைமுகம் | முகத்தாமரை |
| பவளஇதழ் | இதழ்பவளம் |
| மதிமுகம் | முகமதி |

'ஆகிய', 'என்ற' என வரும் இரண்டும் உருவக உருபுகளாகும். ஆகிய என்பது ஆகும், ஆம், ஆக, ஆ என மாற்றம் பெற்று உருபாக வருவதும் உண்டு. 'என்ற' உருபு, 'எனும்' என்று மாறியும் வரும்.

உருவக உருபு பொருளுக்கும் உருவகத்திற்கும் இடையிலும் உருவகத்தின் ஈற்றிலும் வரும்.

முகமாகிய தாமரை – 'ஆகிய' என்ற உருபு இடையில் வந்தது.

இடை கொம்பாக – 'ஆக' என்ற உருபு ஈற்றில் வந்தது.

அடி தளிரா – 'ஆ' என்ற உருபு ஈற்றில் வந்தது.

வாய் என்ற பவளம் - 'என்ற' உருபு இடையில் வந்தது.

முகத்தாமரை என உருபு மறைந்து வந்தால் 'தொகை' உருவகம்' என்றும், வெளிப்பட்டு வந்தால் 'விரி உருவகம்' என்றும் பெயர் பெறும்.

உவமையும் பொருளும் வேற்றுமை ஒழித்து
ஒன்று என மாட்டின் அ∴து உருவகம் ஆகும் (தண்டி.36)

அன்புநீர் பாய்ச்சி, அறிவு என்னும் ஏர் உழுது
சாத்திரக் களைபோக்கி, வேதப்பயிர் செய்து
இன்பப் பயன்அறிந்து தின்பதற்கே சக்தியின்
துணை வேண்டுகின்றோம்

இதில் அன்பாகிய நீர், அறிவாகிய ஏர், சாத்திரமாகிய களை, வேதமாகிய பயிர், இன்பமாகிய பயன் என உருவங்கள் வந்துள்ளதால் உருவக அணி ஆயிற்று.

## 9.7 வேற்றுமை அணி

வெளிப்படையாகவோ, குறிப்பாகவோ ஒற்றுமை உடைய இருபொருளுக்கு இடையே வேற்றுமை இருப்பதாகக் கூறுவது வேற்றுமை அணி ஆகும்.

1. கூற்று வேற்றுமை அணி
2. குறிப்பு வேற்றுமை அணி

என்று இது இரண்டு வகைப்படும்.

### 9.7.1 கூற்று வேற்றுமை அணி

இருபொருளுக்கும் இடையே உள்ள ஒற்றுமையைப் புலவன் வெளிப்படையாகக் கூறிய பின் வேற்றுமையைக் கூறுவது கூற்று வேற்றுமை எனப்படும்.

அங்கண் விசும்பின் அகல்நிலாப் பாரிக்கும்
திங்களும் சான்றோரும் ஒப்பர்மன் - திங்கள்
மறுஆற்றும் சான்றோர்அ.்.து ஆற்றார், தெருமத்து
தேய்வர் ஒருமாசு உறின் (நாலடியார்.151)

இதில் முதலில் நிலா, சான்றோர் இருவரும் ஒப்பர் என்று கூறிப் பின் நிலை மறுவைத் (கறை) தாங்கிக் கொள்ளும், சான்றோர் களங்கத்தைத் தாங்க மாட்டார்கள் என வேறுபாடு கூறியுள்ளதால் இது வேற்றுமை அணி ஆயிற்று.

மாதர் முகத்தை நினக்கு இணை கூறுவர்
வெண்ணிலாவே – அ.்.து
வயதில் கவலையில் நோயில் கெடுவது
வெண்ணிலாவே (பாரதியார்)

வில்அம்பு சொல்அம்பு மேதினியில் இரண்டு உண்டு
வில் அம்பின் சொல்லம்பே மேல்அதிகம் - வில்அம்பு
பட்டதடா என்மார்பில் பார்வேந்தா! நின்குலத்தைச்
சுட்டதடா என்வாயிற் சொல் (கம்பர் தனிப்பாடல் திரட்டு)

மலிதேரான் கச்சியும் மாகடலும் தம்முள்
ஒலியும் பெருமையும் ஒக்கும் - மலிதேரான்
கச்சிபடுவ கடல்படா, கச்சி
கடல்படுவ எல்லாம் படும். (தண்டி)

கச்சி – காஞ்சிபுரம். இவ்வாறு வருவன எல்லாம் கூற்று வேற்றுமை அணி ஆகும்.

### 9.7.2 குறிப்பு வேற்றுமை அணி

இரு பொருளுக்கும் இடையே உள்ள ஒற்றுமையைப் புலவன் வெளிப்படையாகக் கூறாமல், உணரவைத்துப் பின் வேற்றுமையைக் கூறுவது 'குறிப்பு வேற்றுமை' எனப்படும்.

தீயினால் சுட்டபுண் உள்ஆறும் ஆறாதே
நாவினால் சுட்ட வடு (குறள்.129)

இதில் தீயும் சுடும், நாவும் சுடும் என்ற ஒற்றுமை குறிப்பாகச் சொல்லப்பட்டுப் பின் தீப்புண் ஆறும், நாவடு ஆறாது என வேற்றுமைப்படுத்திக் கூறப்பட்டுள்ளதால் இது (குறிப்பு) வேற்றுமை அணி ஆயிற்று.

மோப்பக் குழையும் அனிச்சம், முகம்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து (குறள்.90)
உண்டார்கண் அல்லது அருநறாக் காமம்போல்
கண்டார் மகிழ்செய்தல் இன்று (குறள்.1090)

(நறா – கள்). இவ்வாறு வருவன எல்லாம் (குறிப்பு) வேற்றுமை அணியாகும்.

கூற்றினும் குறிப்பினும் ஒப்புடை இருபொரள்
வேற்றுமைப் படவரின் வேற்றுமை அதுவே (தண்டி.49)

## 9.8 பிறிதுமொழிதல் அணி

கவிஞன் தன்னால் கருதப்பட்ட பொருளை மறைத்து அதனை வெளிப்படுதற்குத் தக்க பிறிதொன்றினைக் கூறுவது பிறிதுமொழிதல் அணியாகும். இதனை ஒட்டணி என்றும் நுவலா நுவற்சி என்றும் உவமைப்போலி என்றும் கூறுவர்.

"கருதிய பொருடொகுத் ததுபுலப் படுத்தற்
கோத்ததொன் றுரைப்பின் அ∴தொட்டென மொழிப" (தண்டி)

எடுத்துக்காட்டு

வெறிகொ ளினச்சுரும்பு மேய்ந்ததோர் காவிக்
குறைபடுதேன் வேட்டுங் குறுகும் - நிறைமதுச்சேர்ந்

துண்டாடுந் தண்முகத்தே செவ்வி யுடையதோர்

வண்டா மரைபிரிந்த வண்டு



"தன்னிடத்துச் செவ்வியையும் வளப்பத்தையுமுடைய தாமரைக்கண் குறைவற்ற நிறை மதுவைச் சேர்ந்து உண்டு களித்து விளையாடுகின்ற வண்டு, பல வண்டுகள் சேர்ந்து உண்டு வெறுத்துவிட்ட குறைபடு காவியின் மதுவை ஆசைப்பட்டுச் சேர்ந்தது" என்பது இப்பாடலின் பொருள். இது பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகனுக்கு வாயில் நேர்ந்த தோழி சொல்லியது. இதில் தாமரை தலைமகளுக்கும் காவி பரத்தைக்கும், தாமரையைப் பிரிந்து வண்டு தலைமகனுக்கும் ஒப்புமையாகும். இதில் தலைவியைப் பிரிந்த தலைவன் பரத்தையைச் சேர்ந்தான் என்னும் பொருளை வெளிப்படக் கூறாமல் தாமரையைப் பிரிந்த வண்டு காவியைச் சேர்ந்தது எனப் பிறிதொன்றினைக் கூறியள்ளமையால் இது பிறிதுமொழிதல் அணியாகும்.

எடுத்துக்காட்டு

"பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை

வேரூஉம் புலிதாக் குறின்"

யுானை பருத்த உடலும் கூரிய கோடுகளும் உடைதாயினும் புலி தாக்கினால் அஞ்சி நடுங்கும் என்பது இக்குறட்பாவின் கருத்தாகும்.

இதன்மூலம் படைவலிமை கொண்ட அரசனாக இருந்தாலும் ஊக்கமில்லாதவனாக இருப்பின் பகைவரைக் கண்டு அஞ்ச நேரிடும் என்னும் கருத்தை விளக்குகிறார். இச்செய்யுளில் உவமையை மட்டும் கூறிப் பொருளைப் பெற வைக்கிறார்.

## 9.9 தொகுத்துக் காண்போம்

- அணி இலக்கணங்கள் பற்றி அறிந்து கொண்டீர்கள்
- உவமை அணி பற்றி தெரிந்து கொண்டீர்கள்
- உருவக அணி பற்றித் தெரிந்து கொண்டீர்கள்
- வேற்றுமை அணி பற்றி அறிந்து கொண்டீர்கள்
- பிறிதுமொழிதல் அணி பற்றித் தெரிந்து கொண்டீர்கள்

## 9.10 சோதித்தறியும் வினாக்கள்

1. தண்டியலங்காரம் கூறும் அணிகள் எத்தனை?

………………………………………..

…………………………………………..

2. உவமை அணி என்றால் என்ன?

………………………………………..

……………………………………………

3. உருவக அணி என்பதை வரையறு

…………………………………………

……………………………………………

4. வேற்றுமை அணி பற்றி விளக்குக

…………………………………………..

……………………………………………..

5. பிறிதுமொழிதல் அணி பற்றிக் கூறுக

……………………………………….

………………………………………..

## 9.11 பயிற்சி வினா

1. அணி என்றால் என்ன? அணி வகைகள் பற்றி எழுதுக
2. உவமை அணியைச் சான்றுகளுடன் விளக்குக
3. உருவக அணியைத் தகுந்த எடுத்துக்காட்டுகளுடன் விளக்குக
4. வேற்றுமை அணியை விரிவாக எடுத்துரைக்க
5.. பிறிதுமொழிதல் அணியை சான்றுகளுடன் நிறுவுக

## 9.12 மேலும் படித்தறிக

**பி.ரா.நடராசன், தண்டியலங்காரம், கௌரா புத்தக மையம், திருச்சி - 01**

## கூறு 10: தற்குறிப்பேற்றம், சிலேடை, பின்வருநிலை. நிறுத்தல் குறிகள்.

10. பாட அமைப்பு

10.1 அறிமுகம்

10.2 குறிக்கோள்கள்

10.3 தற்குறிப்பேற்றம்

10.4 சிலேடை அணி

10.4.1 செம்மொழிச் சிலேடை

10.4.2 பிரிமொழிச் சிலேடை

10.5 பின்வருநிலை அணி

10.5.1 சொல்பின்வருநிலை அணி

10.5.2 பொருள் பின்வருநிலை அணி

10.5.3 சொற்பொருள் பின்வருநிலை அணி

10.6 நிறுத்தற் குறிகள்

10.7 பண்டைக் குறியீடுகள்

10.8 நிறுத்தற் குறியிடுதலின் அறிமுகம்

10.9 நிறுத்தற் குறிகளைப் பயன்படுத்தும் முறைகள்

10.9.1 காற்புள்ளி

10.9.1.1 காற்புள்ளி இடுதல் தொடர்பான சில முதன்மையான செய்திகள்

10.9.2 அரைப்புள்ளி

10.9.3 முக்காற் புள்ளி

10.9.4 முற்றுப்புள்ளி

10.9.5 வினாக்குறி

10.9.6 உணர்ச்சிக் குறி

10.9.7 ஒற்றை மேற்கோள் குறி

10.9.8 இரட்டை மேற்கோள் குறி

10.9.9 விடுகுறி (அல்லது) எச்சக் குறி

10.9.10 மேற்படி குறி

10.9.11 சிறுகோடு

## 10.1 அறிமுகம்

தண்டியாசிரியர் கூறும் முப்பந்தைந்து அணிகளுள் தற்குறிப்பேற்றம், சிலேடை, பின்வருநிலை ஆகியவற்றைப் பற்றியும், நிறுத்தற் குறிகள் பற்றிக் காண்பதும் இப்பாடப் பகுதியில் இடம்பெறுகிறது.

## 10.2 குறிக்கோள்கள்

தற்குறிப்பேற்ற அணி பற்றித் தெரிந்து கொள்வீர்கள்

சிலேடை அணி பற்றி அறிந்து கொள்வீர்கள்

பின்வருநிலை அணி பற்றித் தெரிந்து கொள்வீர்கள்

நிறுத்தற் குறிகள் பற்றி அறிந்து கொள்வீர்கள்

## 10.3 தற்குறிப்பேற்றம்

பெயர்பொருள் அல்பொருள் எனஇரு பொருளிலும்
இயல்பின் விளைதிறன் அன்றி, அயல்ஒன்று
தான்குறித்து ஏற்றதல் தற்குறிப் பேற்றம் (தண்டி.55)

இடம் பெயரும் பொருள், இடம் பெயராத பொருள் என்ற இருவகைப் பொருள்களிலும், அவற்றின் இயற்கையான செயலுக்குரிய காரணத்தை நீக்கிக், கவிஞன் தன் கருத்தை அப்பொருள் மீது ஏற்றிக் கூறுவது தற்குறிப்பேற்ற அணி ஆகும்.

கவிஞன் தன் கருத்தை ஏற்றிக் கூறுவதால் இது தற்குறிப்பேற்றம் என்று பெயர் பெற்றது. குறிப்பு – மனக்கருத்து.

துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்
மற்றை யவர்கள் தவம் (குறள்263)

இல்லறத்தான் குடும்பம் நடத்துவது இயல்பு. ஆனால் துறவிகளுக்கு உதவி செய்யத்தான் இல்லறத்தான் குடும்பம் நடத்துகிறான் என்று கவிஞன் தன் கருத்தை ஏற்றிக் கூறியுள்ளான். ஆதலால் இது தற்குறிப்பேற்ற அணி ஆயிற்று.

சேலை கட்டிய கருப்புப் பல்லக்கு
சிரிக்கும் சிரிப்பு அழகு – உன்
திருத்தமான முகத்தைப் பார்த்து
இருட்டில் மறையும் நிலவு (கண்ணதாசன்)
காணின் குவளை கவிழ்ந்து நிலன்நோக்கும்
மாண்இழை கண்ஒவ்வேம் என்று (குறள்.1114)

நிமிர்ந்து நிற்றல் குவளை மலர்களின் இயல்பு ஆகும். தன் காதலியின் கண்களைப் பார்க்காததால் தான் அவை நிமிர்ந்து நிற்கின்றன என்று கவிஞன் தன் கருத்தை ஏற்றிக் கூறியுள்ளான்.

போருழந்து எடுத்த வார்எயில் நெடுங்கொடி
வாரல் என்பனபோல் மறித்துக் கைகாட்ட (சிலப்பதிகாரம்)

## 10.4 சிலேடை அணி

ஒரு சொற்றொடர் பலபொருள் தரும் தன்மையில் வருவது சிலேடை அணி ஆகும். அதாவது வடிவம் ஒன்று பொருள் பல என்று வருவது.

சிலேடை என்ற வடமொழிச் சொல்லுக்கு இரட்டுற மொழிதல் என்று பொருள். எனவே இரட்டுறமொழிதல் அணி என்ற பெயரும் இதற்கு உண்டு.

1. செம்மொழிச் சிலேடை
2. பிரிமொழிச் சிலேடை

என்று சிலேடை அணி இருவகைப்படும்.

இருவகைச் சொற்றொடர் பலபொருள் பற்றித்
தேரிதர வருவது சிலேடை ஆகும். (தண்டி.76)

அதுவே
செம்மொழி பிரிமொழி என இரு திறப்படும் (தண்டி.77)

### 10.4.1 செம்மொழிச் சிலேடை

சொற்களைப் பிரிக்காமல் அவற்றுக்கு இருபொருள் கொள்வது செம்மொழிச் சிலேடை.

பாம்பு – வாழைப்பழம்

நஞ்சிருக்கும் தோல்உரிக்கும், நாதர்முடி மேலிருக்கும்
வெஞ்சினத்தில் பட்டால் மீளாது - விஞ்சுமலர்த்
தேம்பாயும் சோலைத் திருமலைராயன் வரையில்
பாம்பாகும் வாழைப் பழம்.

பாம்பிற்குச் சொல்லும்போது

1. நஞ்சிருக்கும் - நஞ்சை (விஷம்) உடையதாக இருக்கம்
2. தோல் உரிக்கும் - உரிய காலத்தில் தன் மேல்தோலை உரிக்கும்
3. நாதர் முடி மேல் இருக்கும் - சிவபெருமானின் முடிமேல் இருக்கும்
4. வெஞ்சினத்தில் பட்டால் மீளாது – கோபத்தில் கொத்தினால் உயிர்தப்பாது

வாழைப்பழத்திற்குச் சொல்லும்போது

1. நஞ்சிருக்கும் - நைந்து நன்கு பழுத்திருக்கும்
2. தோல் உரிக்கும். – உண்பவரால் தோல் உரிக்கப்படும்
3. நாதர்முடி மேல் இருக்கும் - பஞ்சாமிர்தத்தில் கலந்து அபிஷேக நேரத்தில் இறைவனின் தலைமுடி மேல் இருக்கும்.
4. வெஞ்சினத்தில் பட்டால் மீளாது – கொடிய பசிக்கு இறையானபின் மீளாது.

இவ்வாறு வருவன செம்மொழிச் சிலேடை எனப்படும்.

### 10.4.2 பிரிமொழிச் சிலேடை

சொற்களைப் பிரித்தும், முன்பின் சொற்களுடன் கூட்டியும் இருபொருள் தருமாறு அமைப்பது பிரிமொழிச் சிலேடை அணி ஆகும்.

ஆடு – கதவு

செய்யுட் கிடைமறிக்கும் சேர்பலகை இட்டு முட்டும்
ஐயம்அற மேற்றான் அடர்க்கும் - துய்யநிலை

தேடும்புகழ்சேர் திருமலைராயன் வரையில்

ஆடும் கதவும் நிகராம் - காளமேகம்

ஆட்டிற்குச் சொல்லும்போது

1. செய்யுட் கிடைமறிக்கும் - வயலுள் மந்தையாகச் சேர்க்கப்படும். (செய் + உள் + கிடை – மறிக்கும்)

2. சேர்பலகை இட்டு முட்டும் - பல கைகள் ஒன்று சேர்ந்து குறுக்கிட்டால் தலையால் முட்டும். (பல + கை)

3. மேற்றாள் அடர்க்கும் - தன்மேல் வந்த ஆளைத் தாக்கம். (மேற்றாள் - மேற்று + ஆள்)

கதவுக்குச் சொல்லும்போது

1. செய்யுள் கிடைமறிக்கும் - வீட்டின் இடைநிலைப் பகுதியில் இடையே தடுக்கப்படும். (செய் + உட்கு + இடை – மறிக்கும்) (உட்கு – உட்பகுதியில்)

2. சேர்பலகை இட்டுமுட்டும் - பலகைகள் பல சேர்த்துச் செய்யப்படும்.

3. மேற்றாள் அடர்க்கும் - மேலே உள்ள தாழ் உறுதியாகத் தடுக்கும். மேல் + தாள்.

இவ்வாறு பிரிமொழிச் சிலேடை வரும்.

## 10.5 பின்வருநிலை

ஒரு பாடலில் முதலில் வந்த சொல்லும் பொருளும், அப்பாடலின் பல இடங்களிலும் மீண்டும் மீண்டும் வருமானால் அது பின்வருநிலை அணி ஆகும். இதனை,

முன்வரும் சொல்லும் பொருளும் பலவயின்
பின்வரும் என்னில் பின்வரு நிலையே (தண்டி.42)

பின்வருநிலை மூன்று வகைப்படும். அவை,

1. சொல்பின்வருநிலை அணி
2. பொருள் பின்வருநிலை அணி
3. சொற்பொருள் பின்வருநிலை அணி

என்பனவாகும்.

### 10.5.1 சொல்பின்வருநிலை அணி

ஒரு பாடலில் ஒரு சொல் திரும்பத் திரும்ப வந்து, வேறுவேறு பொருள் தருதல். இதில் சொல் மட்டுமே பின்வரும். அதன் பொருள் வராது. ஆதலால் இது சொல்பின்வருநிலை எனப் பெயர் பெற்றது. அதாவது ஒரு பாடலில் ஒரே சொல் வேறுவேறு பொருளில் வருதல்.

குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ
குன்றி அனைய செயின் (குறள்.965)

இதில் 'குன்று' என்ற சொல் மலை, தாழ்தல், குன்றிமணி என வேறுவேறு பொருளில் திரும்பத் திரும்ப வந்ததால் இது சொல்பின்வருநிலை அணி ஆயிற்று.

துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉம் மழை (குறள்.12)

இதில் 'துப்பு' என்ற சொல் உண்ணுதல், தூய்மை, விளையச் செய்தல், உணவு என்ற வேறுவேறு பொருளில் திரும்பத் திரும்ப வருவதால் இதுவும் சொல்பின்வருநிலை அணி ஆகும்.

### 10.5.2 பொருள் பின்வருநிலை அணி

ஒரு பாடலில் ஒரு சொல் திரும்பத் திரும்ப வராமல், அதன் பொருள் மட்டும் திரும்பத் திரும்ப வருமானால் அது பொருள் பின்வருநிலை அணி ஆகும்.

இதில் ஒரே பொருளைத் தரும் வேறுவேறு சொற்கள் வரும். சொல் திரும்ப வராமல் அதன் பொருள் மட்டுமே திரும்ப வருவதால் இது பொருள் பின்வருநிலை எனப்பெயர் பெற்றது.

ஆஅவிழ்ந்தன தோன்றி, அல்ந்தன காயா
நெகிழ்ந்தன நேர்முகை முல்லை – மகிழ்ந்து இதழ்
விண்டன கொன்றை, விரிந்தன கருவிளை,
கொண்டன காந்தள் குலை – (தண்டி)

இதில் அவிழ்ந்தன, அல்ந்தன, நெகிழ்ந்தன, விண்டன, விரிந்தன, குலைக்கொண்டன என வேறுவேறு சொல் வந்தாலும் இவை அனைத்தும் மலர்ந்தன என்ற ஒரே பொருளைத் தருவதால் இது பொருள் பின்வருநிலை ஆயிற்று.

### 10.5.3 சொற்பொருள் பின்வருநிலை அணி

ஒரு பாடலில் ஒரு சொல் முன் வந்த பொருளிலேயே திரும்பத் திரும்ப வருதல் சொற்பொருள் பின்வருநிலை அணி ஆகும்.

சொல்லும் அதன் பொருளும் மாறாமல் திரும்பத் திரும்ப வருவதால் இது சொல் பொருள் பின்வருநிலை அணி எனப் பெயர் பெற்றது.

நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல் (குறள்.948)

இதில் 'நாடி' என்ற சொல் 'ஆராய்ந்து அறிதல்' என்ற ஒரே பொருளில் திரும்பத் திரும்ப வருவதால் இது சொற்பொருள் பின்வருநிலை ஆயிற்று.

('இன்றுபோய் நாளைவா' என்று இராமன் சொன்ன பின் இராவணன் இலங்கை நோக்கி வருதல்)

மாதிரம் எவையும் நோக்கான்,
வளநகர் நோக்கான், வந்த
காதலர் தம்மை நோக்கான்
கடல்பெருஞ் சேனை நோக்கான்,
தாதுஅவிழ் கூந்தல் மாதர்
தனித்தனி நோக்க, தான்அப்
பூதலம் என்னம் நங்கை
தன்னையே நோக்கிப் புக்கான் (கம்பர்)

ஓதாமல் ஒருநாளும் இருக்க வேண்டாம்
ஒருவரையும் பொல்லாங்கு சொல்ல வேண்டாம்
மாதாவை ஒருநாளும் மறக்க வேண்டாம்
வஞ்சனைகள் செய்வாரோடு இணங்க வேண்டாம்
போகாத இடந்தனிலே போக வேண்டாம்
போகவிட்டுப் புறஞ்சொல்லித் திரிய வேண்டாம்
வாகாரும் குறவருடை வள்ளி பங்கன்
மயிலேறும் பெருமாளை வாழ்த்தாய் நெஞ்செ (உலகநீதி.1)

ஒருதாய் மக்கள் நாம் என்போம்
ஒன்றே எங்கள் குலம் என்போம்
தலைவன் ஒருவன் தான் என்போம்
சமரசம் எங்கள் வாழ்வென்போம்

இவ்வாறு வருவன எல்லாம் சொற்பொருள் பின்வருநிலை அணியாகும்.

குறிப்புகள்

## 10.6 நிறுத்தற் குறிகள்

கருத்துக்களை வெளிப்படுத்தவும் விளக்கவும் எழுதும் பொழுது பல்வேறு குறிகளைப் பயன்படுத்துகின்றோம். இவ்வாறு குறிகள் இடுவதை நிறுத்தற் குறியீடு (Punctuation) என்று கூறுகின்றோம்.

இந்த நிறுத்தற் குறிகள் சொற்றொடர்களைப் பிரித்துக் காட்டவும், பொருளைத் தெளிவாகப் புரிந்து கொள்ளவும் பெரிதும் உதவுவனவாக உள்ளன. படிப்பவருடைய கவனத்தை ஈர்ப்பதற்கும் நிறுத்தற்குறிகள் மிகவும் பயன்படுகின்றன.

இவ்வாறு இடம்பெறும் குறியீடுகள் பற்றிப் பலருக்கும் பயனுள்ளவையாக இருக்கின்றன. இக்குறிகளைப் பயன்படுத்துவதற்கெனப் பின்பற்றப்படும் வகை முறைகளை அறிந்து அதன்படி பயன்படுத்துகின்றார்களா என்பது ஐயப்பாடு.

## 10.7 பண்டைக் குறியீடுகள்

பண்டைக் காலத்தில் (பனை ஓலை) ஏடுகளில் எழுதும் பொழுதும் கல்வெட்டுகளிலும் ஒரு பாடல் அல்லது உரைநடைப் பகுதி எழுதி முடிந்ததும் அது முடிந்தமைக்கு அடையாளமாக அதன் இறுதியில் சுழியம் (0) இடுதல் அல்லது // இரண்டு கோடுகள் இடுதல் அல்லது / என்று ஒரு கோடு இடுதல் என்னும் வழக்கம் இருந்துள்ளது.

## 10.8 நிறுத்தற் குறியிடுதலின் அறிமுகம்

ஐரோப்பியர்கள் பல்வேறு நிறுத்தற் குறியீடுகளை நமக்கு அறிமுகப்படுத்தி எவ்வெவ் இடங்களில் எவ்வெவ் குறியீட்டைப் பயன்படுத்த வேண்டுமென விளக்கினர். நிறுத்தற் குறியீடுகளைப் பயன்படுத்தும்போது தமிழ்மொழி இலக்கணத்திற்குக் கேடு நிகழாதவாறு பார்த்துக் கொள்ள வேண்டுவதும் இன்றியமையாததாகும். பரவலாகப் பயன்படுத்தப்படும் பல்வேறு நிறுத்தற் குறிகள்:

1. காற்புள்ளி - **,**
2. அரைப்புள்ளி - **;**
3. முக்காற் புள்ளி - :
4. முற்றுப் புள்ளி - .

5. வினாக் குறி - ?

6. உணர்ச்சிக் குறி - **!**

7. ஒற்றை மேற்கோள் குறி **– ‘ ‘**

8. இரட்டை மேற்கோள் குறி **– “ “**

9. விடுகுறி (அல்லது) எச்சக்குறி **– ‘**

10. மேற்படிக் குறி **– “**

11. சிறுகோடு - -

12. தொடர் விடுநிலைக் குறி - **…..**

13. இடைப்பிறவரல் வைப்புக் குறி - **-…..-**

14. பிறை அடைப்பு குறி **– ( )**

15. சாய்கோடு - **/**

16. அடிக்கோடு **–** அ

## 10.9 நிறுத்தற் குறிகளைப் பயன்படுத்தும் முறைகள்

### 10.9.1 காற்புள்ளி

பொருள்களை எண்ணுமிடங்களிலும் விளியின் முன்னும் வினையெச்சங்களுக்குப் பின்னும் மேற்கோள் குறிக்கு முன்னும், ஆதலால் ஆகவே ஆயினும் முதலிய சொற்களுக்குப் பின்னும் முகவரியில் இறுதி வரிக்கு முன்னைய வரிகளின் இறுதியிலும் இடப்படுகிறது.

**10.9.1.1 காற்புள்ளி இடுதல் தொடர்பான சில முதன்மையான செய்திகள்**

1. சொற்களைத் தனித்தனியாகவோ அடுக்கடுக்காகவோ பிரிக்கும் போது காற்புள்ளி இடவேண்டும்.

எடுத்துக்காட்டு

(அ) தனித்தனியாகப் பிரித்தல்

அறம், பொருள், இன்பம், வீடு என்பன உறுதிப் பொருள்களாகும்.

(ஆ) அடுக்கு அடுக்காகப் பிரித்தல்

நட்புக்குக் குகனும் பரதனும் பிசிராந்தையாரும் கோப்பெருஞ்சோழனும் உதயணனும் யூகியும் சிறந்த எடுத்துக்காட்டுகளாகக் கூறலாம்.

(இ) சொற்றொடரில் எழுவாய், ஒன்றாக நின்று பல பயனிலைகளைப் பெற்று வரும் போது இறு எடுத்துக்காட்டு

கணவன் கொலை செய்யப்பட்டான் என்று கேட்ட கண்ணகி பொங்கி எழுந்தாள், விம்மினாள், அரற்றினாள், ஏங்கினாள், கலங்கினாள், மயங்கினாள், விழுந்தாள்.

(ஈ) பொருள் மயக்கம் நீக்கித் தெளிவுபடுத்த வேண்டிய இடத்தில் காற்புள்ளி இட வேண்டும்.

எடுத்துக்காட்டு

அண்ணன் தம்பி வீட்டுக்குச் சென்றதால் நான் பார்க்கவில்லை.

(உ) கல்வி, அறமும் பொருளும் இன்பமும் வீடும் நல்கும் - என்னும் சொற்றொடரில் எண்ணும்மைகளுக்குப் பின் காற்புள்ளி இடுதல் தவறு.

பெரிய சொற்றொடர்கள் இணைக்கப்டும்பொழுது எண்ணும்மை இருப்பினும் தெளிவுக்காகக் காற்புள்ளி இடவேண்டும்.

எடுத்துக்காட்டு

குறிஞ்சிக் காட்சிகளைக் கூறுவதில் வல்லவராகிய கபிலரும் வரலாற்றுக் குறிப்புக்களை வழங்குவதில் சிறந்தவராகிய பரண**ரும்** பத்துப்பாட்டில் இரண்டு பாடல்களை இயற்றியவராகிய நக்கீர**ரும்** கடைக் கழகப் புலவர்கள்.

‘உம்’ இடைச்சொற்கள் நெருங்கி வரும் இடங்களில் காற்புள்ளி இடவேண்டியதில்லை. அவை ஒன்றற்கொன்று தொலைவில் அமைந்திருக்குமாயின் காற்புள்ளி இடவேண்டும் என்பதை மேற்கூறிய எடுத்துக்காட்டுகள் விளக்குகின்றன.

### 10.9.2 அரைப்புள்ளி

1. ஒரே எழுவாயில் பல பயனிலைகள் தொடர்ந்து வருகின்ற இடங்களிலும் எழுவாய்க்குரிய உடன்பாட்டுக் கருத்தும் எதிர்மறைக் கருத்தும் தொடர்ந்து வருகின்ற இடங்களிலும் பயன்படுத்தப்படுகின்றது.

எடுத்துக்காட்டு

அ) பலர் வயிற்றளவை மீறி உண்பர். பசியாலும் உண்பர். கிடைத்தபோதெல்லாம் உண்பர். நாவிற்காக உண்பர். வயிறு கெட்டும் உண்பர்.

ஆ) கண்ணன் தேர்வு எழுதினான். ஆனால் அதில் தேறவில்லை.

2. காரணம் காட்டும் ஏனென்றால் என்பதற்கு முன் அரைப்புள்ளி இட வேண்டும்.

எடுத்துக்காட்டு

நான் இன்று பேச மாட்டேன். ஏனென்றால் என் தொண்டை நோயுற்றிருக்கிறது.

**10.9.3 முக்காற்புள்ளி**

உள்தலைப்பு அமைக்கும் போதும் ஒருவர் கூற்றை விளக்குமிடத்தும், சொற்றொடரில் கூறியதொன்றை விரித்துக் கூறும் போதும் முக்காற்புள்ளி இடப்படுகின்றது.

எடுத்துக்காட்டு

1. வாழ்வு இருதிறத்தது: ஒன்று உயிர் வாழ்வு, மற்றொன்று உடல் வாழ்வு

2. பொருள் கூறுக: களிறு, பிணிமுகம்

**10.9.4 முற்றுப்புள்ளி**

1. சொற்றொடரின் இறுதியில் முற்றுப்புள்ளி இடப்படுகின்றது

எடுத்துக்காட்டு

நீ உள்ளே வா

2. சுருங்கச் சொற்களுக்கும் எழுத்துக்களுக்கும் முற்றுப்புள்ளி இட வேண்டும்.

எடுத்துக்காட்டு

அ) திரு.மணி.திருநாவுக்கரசு

ஆ) திரு.திரு.வி.க

3. பட்டப் பெயர்களுக்குப் பின் முற்றுப்புள்ளி இட வேண்டும்.

எடுத்துக்காட்டு

திரு.இ.செழியன், க.மு.

**10.9.5 வினாக்குறி:**

வினாச் சொற்றொடர்களின் இறுதியில் இடப்படுகின்றது.

எடுத்துக்காட்டு

பாடுபட்டால் பயன் இல்லாமல் போகுமா?

சொற்றொடருக்கு நடுவில் கேள்விக்குறி வரக்கூடாது. நீங்கள் யார் என்று அவர் கேட்டார். என்னும் சொற்றொடரில் யார் என்ற சொல்லுக்குப் பின்னால் வினாக்குறி கண்டிப்பாக இருக்கக்கூடாது

**10.9.6 உணர்ச்சிக் குறி**

வியத்தல், வரவேற்றல், வாழ்த்தல், வைத்தலின் போது பயன்படுத்தப்படுகின்றது. நம்பமுடியாது என்பதையும் இகழ்ச்சியுடையது என்பதையும் காட்டுமிடங்களிலும் உணர்ச்சிக் குறியிடுதல் உண்டு.

எடுத்துக்காட்டு

அ) அந்தோ! பல பழந்தமிழ் நூல்கள் அழிந்தனவே.

ஆ) வாழ்! வாழி! தமிழ்நாடு வாழியவே!

கண்டவாறு உணர்ச்சிக்குறியை !, !!, !!!. இவ்வாறெல்லாம் இடுதல் விரும்பத் தக்கதன்று.

**10.9.7 ஒற்றை மேற்கோள் குறி:**

சிறப்புக் காரணம் கருதி ஏதேனும் ஒரு சொல்லை அல்லது தொடரைக் குறித்தக் காட்டுகின்ற இடங்களிலும் உரையாடலுக்குள் இடம்பெறும் மற்றோர் உரையாடலைக் குறிக்கவும் ஒற்றை மேற்கோள் இடப்படுகிறது.

எடுத்துக்காட்டு

பரதன், “நான் என் செய்வேன்! அண்ணன், ‘நீ போ. நான் பதினான்கு ஆண்டுகள் கழித்தே வருவேன்’ என்று சொன்னார். அதனால் வந்து விட்டேன்” பிரித்துக்காட்டுவதற்கும், பிறருடையது என்று அறிவித்தற்கும், பழமொழிகளைத் தெரிவித்தற்கும் ஒற்றை மேற்கோள் பயன்படுத்தப்படுகின்றது.

எடுத்துக்காட்டு

அ) ‘வு’, ‘வூ’, ‘வொ’, ‘வோ’ என்னும் எழுத்துக்கள் சொல்லுக்கு முதலில் வரா.

ஆ) ‘முயற்சி உடையார் இகழ்ச்சி அடையார்’ என்பது பழமொழி

### 10.9.8 இரட்டை மேற்கோள் குறி



தன் கூற்றை வலியுறுத்தத் தன்னினும் சிறந்தோர் கூறியவற்றை எடுத்தாளுகின்ற இடங்களிலும் பிறர் உரையாடலை அப்படியே கூறுமிடங்களிலும் இரட்டை மேற்கோள் இட வேண்டும்.

எடுத்துக்காட்டு

அ) "அறம் தலை நின்றார்க்கு இல்லை அழிவு" என்றார் கம்பர்.

ஆ) நெடுஞ்செழியன், "இப்போரில் நான்வெல்லாமற் போனால் என் குடிகள் தூற்றுங் கொடுங்கோலனாவேனாக!" என்று சூளுரைத்தான்.

### 10.9.9 விடுகுறி (அல்லது) எச்சக்குறி:

சில எழுத்தக்களை அல்லது எண்களை விட்டுவிடும் போது' இக்குறியிடுக

எடுத்துக்காட்டு:

26 -11-'54 என்பதில் 1954இல் உள்ள 19 விடப்பட்டது

### 10.9.10 மேற்படி குறி

மேற்குறித்ததே இ∴து என்ற காட்டுவது மேற்படிக் குறி. எடுத்துக்காட்டு:

ஆடுகொடி – வினைத்தொகை

கடிநாய் - " "

### 10.9.11 சிறுகோடு:

ஒன்றைச் சேர்ப்பதைக் குறித்ததற்கும் விரித்துக் கூறுபவற்றைத் தொகுத்துக் கூறுமிடத்தும் சிறுகோடு இடப்படும்.

எடுத்துக்காட்டு

நண்பர், சுற்றத்தார், ஊரார் - எல்லாரும் என்னைக் கைவிட்டார்.

### 10.9.12 தொடர் விடுநிலைக் குறி

வேண்டாததை விடும்போது .... இக்குறியிடப்படுகிறது.

எடுத்துக்காட்டு

அருமை மாணாக்கர்களே. உங்கள் படிப்பைக் கவனியுங்கள். உங்கள் வீட்டைக் கவனியுங்கள்! உங்கள் நாட்டை நோக்குங்கள்!.... குற்றங்குறை இருப்பின் மன்னிப்பீர்களாக!

**10.9.13 இடைப்பிறவரல் வைப்புக் குறி**

இக்குறி ஒரு சிறு சொற்றொடரின் முன்னும் பின்னும் உள்ள சிறுகோடுகளைக் குறிக்கும்.

கூறுகின்ற சொற்றொடரின் நடுவில் இலக்கண முறையில் தொடர்பில்லாது, இடைப்பிறவரலாக வரும் தனிச் சொற்றொடரைப் பிரிக்க இக்குறி இடப்படும்

எடுத்துக்காட்டு

இறுதியாக – சுருங்கக் கூறுமிடத்து – நாங்கள் வீட்டுக்கே திரும்பி வந்தோம்

**10.9.14 பிறை அடைப்பு**

ஒன்றனை விளக்க மற்றொரு சொல்லைப் பிறை அடைப்புக்குள் குறிப்பது உண்டு

எடுத்துக்காட்டு

நான் முதன்முதலாகச் சென்ற வெளியூர் திருப்பெருந்துறையாகும். (அது இக்காலத்தில் ஆவுடையார் கோயில் என்று வழங்கப்படுகின்றது) பிறை அடைப்புக்குள் மேலும் பிறை அடைப்பு தேவைப்பட்டால் பகர அடைப்பு இட வேண்டாம் பிறை அடைப்பையே பயன்படுத்தலாம்.

**பகர அமைப்பு**

பிறருடைய உரைகளை மேற்கோளுக்காக எடுத்தாளும்போது, எழுதுகிறவர் இடையிடையே தம் கருத்தைத் தெரிவிக்கத் தம் கருத்தைப் பகர அடைப்பிற்குள் எழுத வேண்டும்.

எடுத்துக்காட்டு

நரசிம்மவர்மனின் படைத்தலைவர் விக்கிரம கேசரி (**பிற்காலத்தில் பரஞ்சோதி**) இரண்டாம் புலிகேசியை வெற்றிக் கொண்டு திரும்பும் போது பிள்ளையார் சிலையைத் தமிழகத்திற்குக் கொண்டு வந்தார்.

### 10.9.15 சாய்கோடு

இரண்டில் ஒன்றை அல்லது பலவற்றில் ஒன்றைத் தேர்வு செய்யக் கூடிய இடங்களில் சாய்கோடு இடப்படுகிறது.

எடுத்துக்காட்டு

பால்: ஆண்/பெண்

தொகையைக் குறிக்கும் எண்ணை அடுத்து, இரு சிறு படுக்கைக் கோடுகளுடன் இணைந்து இடப்படுகிறது.

எடுத்துக்காட்டு

உருவா 5000/=

### 10.9.16 அடிக்கோடு

முதன்மையான ஒன்றைக் கவனத்தை ஈர்க்குமாறு தருவதற்கு அடிக்கோடு இடப்படுகின்றது.

எடுத்துக்காட்டு

ஒப்போலை அளிக்க வருவோர் கண்டிப்பாக அடையாள அட்டை எடுத்து வரவேண்டும்.

## 10.10 தொகுத்துக் காண்போம்

தற்குறிப்பேற்ற அணி பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.

சிலேடை அணி பற்றி அறிந்து கொண்டீர்கள்.

பின்வருநிலை அணி பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.

நிறுத்தற் குறிகள் பற்றி அறிந்து கொண்டீர்கள்.

## 10.11 சோதித்தறியும் வினாக்கள்

1. தற்குறிப்பேற்ற அணி என்றால் என்ன?

……………………………………….

2. சிலேடை அணியின் வகைகள் பற்றிக் கூறுக?

…………………………………………………..

3. பின்வருநிலை அணி பற்றி விளக்குக

………………………………………..

4. நிறுத்தற் குறிகள் என்பவை யாவை?

…………………………………………………

### 10.12 பயிற்சி வினா

1. தற்குறிப்பேற்ற அணியைச் சான்றுகளுடன் நிறுவுக
2. சிலேடை அணியைச் சான்றுகள் கூறி விளக்குக
3. நிறுத்தற் குறிகளின் வகைகளை எடுத்துக்காட்டுகளுடன் விளக்குக

### 10.13 மேலும் படித்தறிக

பி.ர1. பி.ரா .நடராசன், தண்டியலங்காரம், கௌரா புத்தக மையம், திருச்சி – 01

தம2. தமிழநம்பி, நிறுத்தற் குறிகள், இணையக் கட்டுரை

திப் பயனிலை தவிர பிறவற்றிற்குப் பின் காற்புள்ளி இடவேண்டும்.

## கூறு 11

## சங்கஇலக்கியம் - எட்டுத்தொகை, பத்துப்பாட்டு,

11.5.4.1 கலித்தொகையின் சிறப்புகள்
11.5.5 அகநானூறு
11.5.5.1 அகநானூற்றின் சிறப்புகள்
11.6 புறப்பொருள் நூல்கள்
11.6.1 பதிற்றுப்பத்து
11.6.1.1 பாடிய புலவர்கள்
11.6.2 புறநானூறு
11.6.2.1 புறநானூற்றின் சிறப்புகள்
11.7 அகமும் புறமும் கலந்த நூல்கள்
11.7.1 பரிபாடல்
11.7.1.1 பரிபாடல் சிறப்புகள்
11.8 பத்துப்பாட்டு
11.8.1 ஆற்றுப்படை நூல்கள்
11.8.1.1 திருமுருகாற்றுப்படை
11.8.1.2 பொருநராற்றுப்படை
11.8.1.3 சிறுபாணாற்றுப்படை
11.8.1.4 பெரும்பாணாற்றுப்படை
11.8.1.5 மலைபடுகடாம் (கூத்தராற்றுப்படை)
11.8.2 அகம் பற்றிய நூல்கள்
11.8.2.1 முல்லைப்பாட்டு
11.8.2.2 குறிஞ்சிப்பாட்டு
11.8.2.3 பட்டினப்பாலை
11.8.3 புறம் பற்றிய நூல்கள்
11.8.3.1 மதுரைக்காஞ்சி
11.8.4 அகப்புற நூல்கள்
11.8.4.1 நெடுநல்வாடை
11.9 சங்க இலக்கியச் சிறப்புகள்
11.9.1 திணை இலக்கியம்
11.9.2 புறத்திணைகள்
11.9.3 செவ்வியல் இலக்கியங்கள்
11.9.4 அகமரபு
11.9.5 காதல் பாடல்களின் சிறப்பு

## 11.1 அறிமுகம்

அகமும், புறமும் மனித வாழ்க்கைக்கு இன்றியமையாதவையாக உள்ளன. இவை பற்றிய செய்திகளை சங்க இலக்கியங்கள் தெரிவிக்கின்றன. இச்செய்திகளின் மூலம் சங்ககால மக்களின் வாழ்வியல், சமுதாயம், பண்பாடு, நாகரிகம், மன்னர்கள், போர்கள், வெற்றிச் சிறப்புகள், நாடுகள், நகரங்கள், ஊர்கள் போன்ற பலவற்றை இப்பகுதியின் மூலம் அறியலாம். இவற்றை மாணவர்களுக்கு அறிமுகப்படுத்தும் நோக்கில் இப்பகுதி இடம்பெறுகிறது.

## 11.2 குறிக்கோள்கள்

- சங்க இலக்கியம் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்
- எட்டுத்தொகை நூல்களையும், அவற்றின் சிறப்புகளையும் அறிந்து கொள்வீர்கள்
- பத்துப்பாட்டு நூல்களையும், அவற்றின் சிறப்புகளையும் தெரிந்து கொள்வீர்கள்

## 11.3 சங்க இலக்கியம்

தமிழகத்தை ஆண்ட சேர, சோழ, பாண்டியர்கள் தமிழ்மொழியை வளர்த்தனர். இவர்களின் கீழ், பல்வேறு குறுநில மன்னர்கள் நாட்டை ஆண்டனர். இவர்கள் புலவர்களை ஆதரித்து அவர்தம் வறுமையைப் போக்கினர். புலவர்களும் தங்கள் புலமையை மன்னரிடம் காட்டிப் பரிசுகள் பெற்றுச் சிறப்புடன் வாழ்ந்தனர். கி.மு மூன்றாம் நூற்றாண்டு முதல் கி.பி மூன்றாம் நூற்றாண்டு வரையுள்ள காலத்தை சங்ககாலம் என்று வரையறுக்கின்றனர். இக்காலத்தில்

தோன்றிய இலக்கியங்களைச் சங்க இலக்கியங்கள் என்கிறோம். இந்தியாவில் பேச்சு வழக்கில் உள்ள மொழிகளின் இலக்கியங்களுள் மிகப் பழமையானவை இச்சங்க இலக்கியங்களே ஆகும். எட்டுத்தொகையும் பத்துப்பாட்டுமாகிய பதினெட்டு நூல்களும் சங்க இலக்கியங்கள் எனப்படுகின்றன.

## 11.4 எட்டுத்தொகை நூல்கள்

சங்ககால மக்களின் வாழ்வியல் நிலைகளை ஓவியம் போன்று எடுத்துரைக்க வல்லன எட்டுத்தொகை நூல்கள் ஆகும். சங்ககால மக்கள் வீரத்தையும் காதலையும் இரு கண்களாகப் போற்றினர். காதல், பெருமிதம், நீதி முதலான உணர்ச்சிகளை எட்டுத்தொகை நூல்கள் சித்தரிக்கின்றன.

எட்டு நூல்களின் தொகுப்பே எட்டுத்தொகை எனப்படுகின்றது. இதில் உள்ள பாடல்களைத் தொகுத்து எட்டு நூல்களாக ஆக்கியமையால் இவை எட்டுத்தொகை எனப்பட்டது. (தொகுக்கப்பட்டது தொகை). இவற்றிற்கு எண்பெருந்தொகை என்ற பெயரும் உண்டு. எட்டுத்தொகை நூல்கள் பற்றி,

நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு
ஒத்த பதிற்றுப்பத்து ஓங்குபரிபாடல் - கற்றறிந்தார்
ஏத்தும் கலியோடு அகம்புறம் என்ற
இத்திறத்த எட்டுத் தொகை

என்ற பழம்பாடல் எடுத்துரைக்கின்றது. எட்டுத்தொகையில் 2352 தனிநிலைச் செய்யுள்கள் அமைந்துள்ளன. கடவுள் வாழ்த்துப் பாடல்களைச் சேர்ப்பின் 2358 பாடல்கள் எட்டுத்தொகையில் இடம்பெற்றுள்ளன.

எட்டுத்தொகை நூல்களை, அகப்பொருள் பற்றியன – நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு (ஐந்து நூல்கள்), புறப்பொருள் பற்றியன – (புறநானூறு, பதிற்றுப்பத்து), அகமும் புறமும் பற்றியன – பரிபாடல் என்று மூன்று வகையாகப் பகுக்கலாம்.

- எட்டுத்தொகையில் முழுவதும் கிடைக்கும் தொகை நூல்கள் நான்கு

    1. நற்றிணை (400 + 1)
    2. குறுந்தொகை (400 + 1)
    3. கலித்தொகை (150)
    4. அகநானூறு (400 + 1)

- எட்டுத்தொகையில் ‘நானூறு’ என்ற எண்ணிக்கையில் குறிக்கப்படும் நூல்கள் 4. ஆவை,

    1. நற்றிணை நானூறு
    2. குறுந்தொகை நானூறு
    3. அகநானூறு
    4. புறநானூறு

- நூறு என்ற எண்ணிக்கையில் குறிக்கப்படும் நூல்கள்

    1. ஐங்குறுநூறு
    2. பதிற்றுப்பத்து ஆகிய இருநூல்களாகும்.

- எட்டுத்தொகையில் ஆசிரியப்பாவால் அமைந்த நூல்கள்

1. நற்றிணை
2. குறுந்தொகை
3. ஐங்குறுநூறு
4. அகநானூறு
5. புறநானூறு
6. பதிற்றுப்பத்து

என்பனவாகும்.

- எட்டுத்தொகையில் முதற்பகுதியும் இறுதிப்பகுதியும் இல்லாமல் கிடைக்கும் நூல்கள் இரண்டு ஆகும். அவை,

1. பதிற்றுப்பத்து
2. பரிபாடல்

## 11.5 அகநூல்கள்

1. நற்றிணை
2. குறுந்தொகை

3. ஐங்குறுநூறு
4. கலித்தொகை
5. அகநானூறு

ஆகிய ஐந்து நூல்களும் அகநூல்களாகும்.

### 11.5.1 நற்றிணை

நல்லதிணை – நற்றிணை. நற்றிணை என்பதற்கு நல்ல ஒழுகலாறு என்று பொருள். எட்டுத்தொகை நூல் வரிசையில் முதல் அகப்பொருள் நூலாகும். இந்நூலைத் தொகுப்பித்தோன் பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதியாவான். தொகுத்தவரின் பெயர் தெரியவில்லை. நானூறு பாடல்களைக் கொண்ட இந்நூலில் 56 பாடல்களுக்கு ஆசிரியர் பெயர் தெரியவில்லை. 9 அடி சிற்றெல்லையும், 12 அடி பேரெல்லயும் கொண்டது. 187 புலவர்கள் மற்ற பாடல்களைப் பாடியுள்ளனர். பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் உரையே நற்றிணைக்கு முதல் உரையாகும். 1914ஆம் ஆண்டில் இந்நூலைப் பதிப்பித்தவரும் இவரே. இவருக்குப் பின்னர் ஔவை.துரைசாமிபிள்ளை அவர்கள் நற்றிணைக்கு விளக்கமாக உரை எழுதியுள்ளார்.

#### 11.5.1.1 நற்றிணையின் சிறப்புகள்

பழந்தமிழ் மக்களின் பழக்கவழக்கங்கள் நற்றிணையில் அதிகம் இடம்பெற்றுள்ளன. நட்பிற்காக நண்பர்கள் தங்களின் உயிரையே கொடுப்பர். இதனை,

முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சும் உண்பர்நனி நாகரிகர்

என நற்றினை நவில்கிறது.

காதல் என்பது அன்பையுங் கடந்த உணர்வு கலந்த நிலை. துலைவனின் அன்பு எப்படிப்பட்டது என்பதை,

நின்ற சொல்லர் நீடு தோன்று இனியர்
என்றும் என்தோள்பிரிபறி யலரே
தாமரைத் தண்தாது ஊதி மீமிசைச்
சாந்தின் தொடுத்த தீந்தேன்போலப்
புரைய மன்ற புரையோர் கேண்மை

என்ற நற்றிணைப் பாடல் ஓவியமாக்குகிறது. தாமரையின் மணமிக்க தேனை எடுத்து வரும் தேனீக்கள் சந்தன மரத்தில் கூடுகட்ட, அந்தத்

தேன் கூட்டிலுள்ள தேன் சந்தனத்தின் மணமும் தாமரையின் இனிமையும் கலந்து எத்தகைய இன்பத்தைப் பயக்குமோ அத்தகையது தலைவன் நட்பு என்கிறாள் தலைவி.

தலைவி விரும்பிய வண்ணம் அவளைத் தலைவனுடன் சேர்க்கிறாள் தோழி. இன்று இளமையும் அழகுமாக ஒளிரும் தலைவி முதுமையுறுவாள். அப்பொழுது தலைவயின் நிமிர்ந்த மார்பகங்கள் தளரும், கருநிறக் கூந்தல் நரை மிகும், பொன்நிற மேனி திரை (சுருக்கம்) விழும். அப்பொழுதும் இன்றுபோல் என்றும் உன் அன்பு நிலையாக இருக்க வேண்டும். இதனை,

அண்ணாந்து ஏந்திய வனமுலை தளரினும்
பொன்னேர் மேனி மணியின் தாழ்ந்த
நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்
நீத்தல் ஓம்புமதி பூக்கேழ் ஊர (நற்.10)

என்று தோழி கூறும் பகுதி சிறப்பானதாகும்.

**11.5.1.2 நற்றிணையில் வேந்தர்களும், குறுநில மன்னர்களும்**

1. அதியமான் அஞ்சி
2. அழிசி
3. ஆய் அணிடிரன்
4. உதியன்
5. ஓரி
6. காரி
7. குட்டுவன்
8. சேந்தன்
9. நன்னன்
10. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்

ஆகியோரைப் பற்றிய குறிப்புகள் இடம்பெற்றுள்ளன.

**11.5.1.3 தொடரால் பெயர்பெற்ற புலவர்கள்**

1. மலையனார்
2. தனிமகனார்
3. தும்பிசேர் கீரனார்
4. வண்ணப்புறக் கந்தரத்தனார்

5. மடல் பாடிய மாதங்கீரனார்
6. விழிக்கண் பேதைப் பெருங்கண்ணனார்
7. தேய்புரிப் பழங்கயிற்றனார்

ஆகிய எழுவரும் தொடரால் பெயர் பெற்ற புலவர்களாவர்.

### 11.5.2 குறுந்தொகை

அகப்பொருள் பற்றிக் கூறும் தொகை நூல்களுள் அடியளவால் பெயர் பெற்றது குறுந்தொகையாகும். இந்நூல் உரிப்பொருளால் சிறந்த நூலாகவும் கருதப்படுகிறது. இது நான்கடிச் சிற்றெல்லையும் எட்டடி பேரெல்லையும் உடையது. குறுந்தொனை அடிஅளவால் குறுகியதேயன்றிப் பொருள் அளவால் பெரியதேயாகும். 400 பாக்களைக் கொண்ட இந்நூலில் உள்ள பாடல்களை 205 புலர்கள் இயற்றியுள்ளனர். 307, 391 ஆகிய இருபாடல்களும் ஒன்பது அடிகளைக் கொண்டுள்ளன. கடவுள் வாழ்த்துப்பா ஒன்றோடு 401 பாடல்கள் இந்நூலில் இருப்பதை அறியலாம். குறுந்தொகையைத் தொகுத்தவர் பூரிக்கோ என்னும் புலவர் ஆவார். தொகுப்பித்தவர் யாரென்று அறியமுடியவில்லை. முதல் 380 பாடல்களுக்குப் பேராசிரியர் உரை விளக்கம் தந்துள்ளார். எஞ்சிய 20 பாடல்களுக்கு நச்சினார்க்கினியர் உரை எழுதியுள்ளார். இவை இன்று கிடைக்கவில்லை. தற்போது உ.வே.சாமிநாத ஐயர் எழுதிய உரையே கிடைக்கின்றது. உ.வே.சா அவர்கள் தமது உரையுடன் 1937அம் ஆண்டு குறுந்தொகையை வெளியிட்டார். முதலில் இதனைப் பதிப்பித்தவர் சி.வை.தாமோதரம் பிள்ளையாவார். குறுந்தொகையை 1915ஆம் ஆண்டில் முதன்முதலில் வெளியிட்டவர் சௌரிப்பெருமாள் அரங்கனார் ஆவார்.

#### 11.5.2.1 குறுந்தொகையின் சிறப்புகள்

தொகை நூல்களுள் முதலில் தொகுக்கப்பெற்ற நூல் குறுந்தொகையாகும். தொகை நூல்களில் உரையாசிரியர்களால் அதிகம் மேற்கோளாகக் காட்டப்பெற்ற நூலும் இதுவேயாகும். குறுந்தொகையின் 236 பாடல்கள் உரையாசிரிர்களால் மேற்கோளாகக் கையாளப்பட்டுள்ளன. பரணர் பாடல்கள் வாயிலாக பல வரலாற்றுக் குறிப்புகள் தெரியவருகின்றன.

அள்ளூர் நன்முல்லையார், அரிசில்கிழார், கூடலூர்கிழார்,

மதுஜர நல்வெள்ளியார் முதலான புலவர் பெயர்கள் ஊர்ப்பெயரோடு சேர்ந்து விளங்குகின்றன.

குறுந்தொகையில் நன்னாகையார் (8 பாடல்கள்), வெள்ளி வீதியார் (8 பாடல்கள்) ஆகிய இரு பெண்பாற் புலவர்கள் மிக அதிகமாகப் பாடல்கள் பாடியுள்ளனர். மேலும் ஆசிரியன் பெருங்கண்ணனார், கொல்லன் அழிசி, வள்ளுவன் பெருஞ்சாத்தனார் ஆகியோர் தொழிலால் பெயர் பெற்றுள்ளனர். பிற தொகை நூல்களைவிட வருணனை குறைவாக உள்ளதால் குறுந்தொகையில் உணர்வுகள் செறிவாகக் காணப்படுகின்றன.

குறுந்தொகையில் உவமையால் பெயர் பெற்ற புலவர் அணிலாடு முன்றிலார், குப்பைக் கோழியார், காக்கைப் பாடினியார், விட்ட குதிரையார், மீனெறி தூண்டிலார் உள்ளிட்ட 18 புலவர்கள் ஆவர்.

உருத்திரன், உலோச்சன், பவுத்திரன், உரோடகத்துக்காரன், சண்டிரியன், மாதிரத்தன், பிரமந்தன் ஆகிய 7 பேர் வடமொழிப் பெயர் கொண்ட புலவர்கள் ஆவர். குறுந்தொகையில் ஆதிமந்தி, ஊண்பித்தை, ஔவையார், நன்னாகையார், வெண்பூதியார், வெள்ளிவீதியார் உள்ளிட்ட 13 பெண்பாற்புலவர்கள் பாடல்களைப் பாடியுள்ளனர் என்பது நோக்கத்தக்கது.

பழந்தமிழரின் அக வாழ்க்கையையும் பல வரலாற்றுச் செய்திகளையும் அறிந்து கொள்ளக் குறுந்தொகைப் பாடல்கள் பெருந்துணை புரிகின்றன.

யாயும் ஞாயும் யாரா கியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறை கேளிர்
யானும் நீயும் எவ்வழி அறிதும்
செம்புலப் பெயனீர் போல
அன்புடை நெஞ்சம் தாங்கலந் தனவே (குறுந்.40)

என்ற குறுந்தொகைப் பாடல் பழந்தமிழரின் அக வாழ்க்கையை அழகுற உணர்த்துகின்றது. குறுந்தொகைப் பாடல்கள் குறுகிய அடி வரையறை பெற்று இருப்பதால் கற்பதற்கும் பொருளை எளிதில் புரிந்து கொள்வதற்கும் சிறந்த நூலாகத் திகழ்கின்றது.

### 11.5.3 ஐங்குறுநூறு

ஐந்திணை ஒவ்வொன்றிற்கும் நூறு பாடல் வீதம் பெற்ற ஐந்நூறு பாடல்களைக் கொண்டது. இதன் பாடல்கள் மூன்றடி சிற்றெல்லையும் ஆறு அடி பேரெல்லையும் கொண்டமையை குறுகிய நூறுநூறு பாடல்களைக் கொண்டமையால் இந்நூல் ஐங்குறுநூறு எனப் பெயர் பெற்றது. இந்நூலில் உள்ள பாடல்களை ஐந்து புலவர்கள் பாடியுள்ளனர். மருதம் - ஓரம்போகியார், நெய்தல் - அம்மூவனார், குறிஞ்சி – கபிலன், பாலை – ஓதலாந்தையார், முல்லை - பேயனார் ஆகிய புலவர்களால் பாடப்பெற்றது. இதனை,

மருதம் ஓரம்போகி நெய்தல் அம்மூவன்
கருதும் குறிஞ்சி கபிலன் - கருதிய
பாலை ஓதலாந்தை பனிமுல்லை பேயனே
நூலைஓது ஐங்குறு நூறு

என்ற பழம்பாடல் புலப்படுத்துகிறது. இந்நூலைத் தொகுத்தவர் புலத்துறை முற்றிய கூடலூர் கிழார். தொகுப்பித்தவன் யானைக்கட்சேய் மாதரஞ்சேரல் இரும்பொறை.

#### 11.5.3.1 ஐங்குறுநூற்றின் சிறப்புகள்

அம்மூவனார் பாடிய தொண்டிப்பத்து அந்தாதித் தொடையில் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. மேலும் எட்டுத்தொகை அகத்திணை நூல்களில் இவ்வாறு திணைக்கு ஒரு புலவர் வீதம் பாடும் நூல்கள் ஐங்குறுநூறு, கலித்தொகை ஆகிய இரண்டு மட்டுமே என்பது குறிப்பிடத்தக்கது. ஐங்குறுநூற்றில் உள்ள ஒவ்வொரு நூறும் பத்துப் பத்துப் பாடல்கள் எனப் பத்துப் பிரிவுகளாகப் பகுக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு பத்துப் பாடல்களில் தலைப்பும், குரக்குப்பத்து, எருமைப்பத்து, கிள்ளைப் பத்து என 'பத்து' என்று முடிவது குறிப்பிடத்தக்கது.

இவ்வாறு பத்துப் பாடல்களை ஒரு தொகுப்பாகச் சேர்த்து எழுதும் முறையை பதிற்றுப்பத்து, திருக்குறள், சைவசமய இலக்கியங்கள் (பதிகம்) ஆகியவற்றில் காணலாம். ஓரம்போகியார் பாடிய மருதத் திணையின் முதற்பத்து, 'வேட்கைப்பத்து' என்பது வேட்கைப்பத்து முழுவதும் உள்ள பத்துப் பாடல்களிலும் முதல் வரியும், மூன்றாம் வரியும் ஒன்றே போல் காணப்படுகிறது.

வாழி ஆதன் வாழி அவினி
………………………………..
என வேட்டோளே யாமே யாமே (ஐங்குறுநூறு.1)

என்பது அப்பகுதி.

இதில் அரச வாழ்த்தே முதற்பத்தாக அமைந்திருப்பது. இந்நூலுக்குச் சிறப்பளிக்கிறது. பாடலில் காணப்படும் ஆதன் அவினி என்பது ஒருவரின் பெயரே, ஆதன் என்பது குடிப்பெயர், அவினி என்பது இயற்பெயர் என்னும் கருத்து உண்டு. ஆதன், அவினி எனப்படுவோன் செல்வக்கடுங்கோ வாழியாதன் என்றும் கூறுவர்.

வாழி ஆதன் வாழி அவினி
பகைவர் புல்ஆர்க, பார்ப்பார் ஓதுக
என வேட்டோளே யாயே

எனும் பாடலில் இடம்பெறும் பகைவர் புல்ஆர்க எனும் தொடர் வரலாற்றுக் குறிப்பினைத் தருவதாக அமைந்துள்ளது. பகைவர் தோற்று தம் தோல்வியை ஒப்புக் கொண்டதற்கு அடையாளமாகப் புல் மேய்வது போன்று குப்புற வீழச் செய்யப்பட்டனர். இக்குறிப்பையே 'பகைவர் புல்ஆர்க' என்னும் தொடர் வெளிப்படுத்துகிறது.

ஐங்குறுநூற்றில் கிள்ளி, கொற்கைக் கோமான், கடுமான், குட்டுவன், மத்தி, வீராஅன், ஆதன், அவினி போன்ற அரசர்கள் குறிப்பிடப்பட்டுள்ளனர். ஆமூர், தொண்டி, தேனூர், கழார், கொற்கை போன்ற ஊர்களும் இடம்பெற்றுள்ளன. ஐங்குறுநூற்றுப் பாடல்கள் பெரும்பாலும் தொடங்கும் நிலையில் மன்னனை வாழ்த்துவதாக அமைந்துள்ளது நோக்கத்தக்கது. இதுபோன்றே தலைவி,

நெல்பல பொலிக பொன்பெரிது சிறக்க
விளைக வயலே, வருக இரவலர்
அறம்நனி சிறக்க அல்லது கெடுக

எனக் கூறும் பாடலும் சிறப்புமிக்கது.

இந்நூலுக்குப் பழைய உரை உண்டு. அதில் 469 பாடல்களுக்கு மட்டுமே உரை உள்ளது. 1903ஆம் ஆண்டில் உ.வே.சா அவர்கள் முதன்முதலில் உரையுடன் இந்நூலை வெளியிட்டார். அதன் பின்னர் ஔவை.சு.துரைசாமிப் பிள்ளை இந்நூலுக்கு விரிவான உரை தந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. செடிகளைத் தலைப்பாகக் கொண்டு

அமைவது போன்றே, கேழற்பத்து, கிள்ளைப்பத்து, மயில் பத்து எனப் பிற கருப்பொருள்களாகிய விலங்குகளையும், பறவைகளையும் பாடல்களுக்குத் தலைப்புப் பெயராகக் கொண்டு பெயர் வைத்துள்ளமை புலவர்கள் கருப்பொருள்களிடத்தில் கொண்டுள்ள அன்பினைக் காட்டுவதாக அமைந்துள்ளது எனலாம்.



உண்ணும் நீர்த்துறையில் தெய்வம் உறையும் தினைப்புனத்திற்கு விலங்கு, பறவை வராமல் இருக்கப் பொய்ப்புலி வைத்தல், ஆமைக் குட்டியானது தாயின் முகத்தைப் பார்த்தே வளரும், முதலை பசி ஏற்பட்டால் தனது குட்டிகளைத் தானே தின்னும் இயல்புடையது என்பன போன்ற பழந்தமிழரின்பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள் பற்றிய குறிப்புகள் ஐங்குறுநூற்றில் இடம்பெற்றிருப்பது தனிச்சிறப்பு வாய்ந்ததாக உள்ளது.

### 11.5.4 கலித்தொகை

கலிப்பாக்களின் தொகுப்பாக இந்நூல் காணப்படுவது இதன் சிறப்பாகும். இது ஐந்திணைகளைப் பற்றிக் கூறுகின்றது. இலக்கண நூல்களிற் கூறும் அகப் பொருட்பகுதிக்கு இந்நூல் இலக்கியமாகத் திகழ்கிறது. குறிஞ்சிக் கலியைக் கபிலரும், மருதக்கலியை மருதனில நாகனாரும், முல்லைக்கலியை சோழன் நல்லுருத்திரனும், நெய்தல் கலியை நல்லந்துவனாரும், பாலைக்கலியை பெருங்கடுங்கோவும் இயற்றியுள்ளனர். இக்கலித்தொகை 150 பாடல்களைக் கொண்டுள்ளது. இந்நூல் முழுமைக்கும் நச்சினார்க்கினியர் உரை எழுதியுள்ளார்.

கலித்தொகையின் ஒவ்வொரு பாடலின் கீழும் அவ்வப் பாடலுக்குரிய கூற்று விளக்கம்பற்றிய பழைய குறிப்பு உள்ளது. மற்ற தொகை நூல்கள் அன்பின் ஐந்திணையை மட்டுமே பாடுகின்றன. ஆனால் கலித்தொகை மட்டுமே ஐந்திணையுடன் கைக்கிளையையும், பெருந்திணையையும் பாடுவது குறிப்பிடத்தக்க ஒன்றாகும். 11 முதல் 80 வரை இதற்கு அடியெல்லையாக அமைந்துள்ளது. திணையைப் பாடிய புலவர்கள் குறித்து,

பெருங்கடுங்கோன் பாலை, கபிலன் குறிஞ்சி
மருதனிள நாகன் மருதம் - அருஞ்சோழன்
நல்லுருத்திரன் முல்லை, நல்லந்துவன் நெய்தல்

கல்விவலார் கண்ட கலி

என்ற பழம்பாடல் எடுத்துரைக்கிறது.

சில ஏட்டுச் சுவடிகளில் மேற்குறித்த பாடல் இல்லை.எனவே ஒரே புலவரால் கலித்தொகை பாடப்பட்டது என்று அறிஞர் கே.என்.சிவராசபிள்ளையும், எஸ்.வையாபுரிப்பிள்ளையும் கருதுகின்றனர். நச்சினார்க்கினியர் நெய்தல்கலி 25ஆம் பாடல் உரையில் ஆசிரியர் நல்லந்துவனார் செய்யுள் செய்தார் என்று குறிப்பிடுகிறார். மேலும் சி.வை.தாமோதரம்பிள்ளை தனது பதிப்பில் நல்லந்துவனார் கலித்தொகை என்று தலைப்பிட்டுப் பதிப்பித்துள்ளது நோக்கத்தக்கது.

### 11.5.4.1 கலித்தொகையின் சிறப்பு

கலித்தொகையில் இடம்பெற்றுள்ள ஒவ்வொரு பாடலும் சிறு நாடகமாக அமைகின்ற அளவிற்குச் சிறப்பு மிக்கது. கலித்தொகை மூவேந்தர்களில் பாண்டிய மன்னனைப் பற்றி மட்டுமே குறிப்பிடுகிறது. மேலும் மதுரையைப் பற்றியும், வையையைப் பற்றியும் கலித்தொகையில் இடம்பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது.

கலித்தொகையில் இடம்பெற்றுள்ள 51ஆவது பாடலான ‘சுடர்த்தொடீஇ கேளாய்’ என்ற பாடல் சிறுகதை நயமிக்கது. தலைவனுடன் சென்ற தலைவியின் நிலையைக் கலித்தொகைப் பாடல் ஒன்று , ‘சந்தனம் மலையிலே பிறப்பினும் மலைக்கு பயனில்லை’, முத்து கடலில் கிடைப்பினும் கடலுக்கு அதனால் பயனில்லை, யாழிலே இசை பிறப்பினும் யாழுக்கு அதனால் பயனில்லை, அதுபோல பெண்ணும் திருமணத்திற்குப் பின் பிறந்த இடத்திற்குப் பயனில்லை, கணவனுக்கே பயனுடையாள்’ எனும் கருத்தில் அமையும் பாடல் பண்டைத் தமிழகத்தின் அன்றைய நடைமுறையை நன்கு விளக்குவதாக அமைகின்றது.

மனித வாழ்க்கையில் காணப்படும் அன்பு, பண்பு, அறிவு, செறிவு உள்ளிட்ட வாழ்வியல் கருத்துக்களின் விளக்கங்களை,

பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுதல்
அன்பெனப் படுவது தன்கிளை செறாஅமை
பொறைஎனப் படுவது போற்றாரைப் பொறுத்தல்
(நெய்தற்கலி.133)

என்ற பாடல் தெளிவுறுத்துகிறது.

### 11.5.5 அகநானூறு

ஐந்திணைகளைப் பற்றிய 400 பாடல்களைக் கொண்டுள்ளது. இந்நூலின் பாக்கள் 13 அடி முதல் 31 அடிகள் வரை கொண்டுள்ளன. 158 புலவர்கள் இந்நூலுள் பாடியுள்ளனர். சங்ககால மன்னர்களின் வரலாற்றையும், மக்களின் வாழ்க்கையையும், பெருமன்னர்கள்மற்றும் குறுநில மன்னர்களைப் பற்றிய செய்திகளையும் இவற்றில் காணலாம். நெடுந்தொகை, பெருந்தொகை நானூறு, அகம், அகப்பாட்டு என்பன அகநானூற்றின் வேறு பெயர்களாகும்.நூலின் பெயரில் ‘அகம்’ எனப்பட்ட எட்டுத்தொகை நூல் இது ஒன்று மட்டுமே ஆகும்.

இந்நூலைத் தொகுப்பித்தோன் பாண்டியன் உக்கிரப்பெருவழுதி, தொகுத்தவர் மதுரை உப்பூரிக் குடிக்கிழார் மகனால் உருத்திரசண்மனார். இந்நானூறு பாடல்களில் 1-120 பாடல்கள் களிற்றியானை நிரை எனவும், 121-300 வரையுள்ள பாடல்கள் மணிமிடைப் பவளம் எனவும், 301-400 வரையுள்ள பாடல்கள் நித்திலக்கோவை எனவும் அழைக்கப்படுகின்றன.

மேலும் 1, 3, 5, 7, 9, .. என ஒற்றைப்படை எண்ணாக வருபவை பாலைப் பாடல்கள், 4, 14, 24, 34, .. என நான்கு எனும் எண்ணைப் பெறுபவை முல்லைத் திணைப்பாடல்கள், 6, 16, 26, 36, .. என ஆறு எனும் எண்ணைப் பெற்று வருபவை மருதத்திணைப் பாடல்கள், 10, 20, 30, 40 .. என் இவ்வாறு பத்தின் மடங்காக வருபவை நெய்தல் திணைப்பாடல்கள், 2, 8, 12, 18, 22, 28.. எனும் எண்களைக் கொண்டு வருபவை குறிஞ்சித் திணைப்பாடல்கள் ஆகும். இவ்வைப்பு முறையை,

ஒன்றுமூன்று ஐந்துஊழ்ஒன் பாண்பாலை, ஓதாது
நின்றவற்றில் நான்கு நெறிமுல்லை, அன்றியே
ஆறாம் மருதம், அணிநெய்தல் ஐயிரண்டு
கூறாதவை குறிஞ்சிக் கூற்று
பாலைவியம் எல்லாம், பத்தாம் நெய்தல்
நாலு நளிமுல்லை, நாடுங்கால் மேலையோர்
தேரும் இரண்டெட்டு இலைவ குறிஞ்சி, செந்தமிழின்
ஆறு மருதம் அகம்

என்ற இரண்டு பழம் வெண்பாக்கள் எடுத்துரைக்கின்றன.

#### 11.5.5.1 அகநானூற்றின் சிறப்புகள்

அகநானூறு பழந்தமிழரின் திருமண முறையை (பாடல் எண்கள்:86, 136) விரிவாகச் சுட்டுகின்றது. ஆரியக் கலப்பில்லாத திருமணம் தமிழருக்கே உரியது என்று அறிஞர் பி.டி.சீனிவாச ஐயங்கார் குறிப்பிடுவர். அகநானூற்றில் வரலாற்றுச் செய்திகள் மிகுதியாக உள்ளன. பாடலிபுத்திரத்தை ஆண்ட நந்தர் பற்றிய குறிப்புகளும் (201, 25), மௌரியர் பற்றிய செய்திகளும், இதிகாச புராணச் செய்திகளும் அகநானூற்றில் இடம்பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது.

அகநானூற்றுக்குப் பழைய குறிப்புரை உண்டு. அது 90 பாடல்களுக்கு மட்டும் உள்ளது. 1920ஆம் ஆண்டில் இந்நூலை வே.இராசகோபால் ஐயங்கார் பதிப்பித்தார். பிற்காலத்தில் நாவலர் ந.மு.வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு, ரா.வேங்கடாசலம்பிள்ளை அவர்களோடு இணைந்து நூல் முழுவதற்கும் உரை எழுதியுள்ளார். பெருங்கடுங்கோ பாடிய, ‘அளிநிலை பெறாஅது’ எனும் ஒரு பாடலை விளக்குவதற்கு முனைவர் மு.வரதராசனார் அவர்கள், ‘ஓவச்செய்தி’ என்னும் திறனாய்வு நூலை எழுதியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

தினை உண்ண வந்த யானை, குறத்தியின் பாடல் இனிமையில் மயங்கி உறங்கி நின்றது (102), குடவோலைத் தேர்தல் முறை (77), ஆடுமகள் பாவை போல வெறியாடும் நிலை (370) முதலான சமுதாய நிகழ்வுக் காட்சிகளும் அகநானூற்றில் காணப்படுகின்றன. மேலும் அ∴தை (90), அகுதை (76, 113), அதியமான் நெடுமான் அஞ்சி (115), அத்தி (44), ஆதிமந்தி (45, 76), உதியஞ் சேரலாதன் (65), அவ்வி (115), எழினி (105), கரிகால் வளவன் (55), தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் (36, 57, 116) முதலான மன்னர்களைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளும் அகநானூற்றில் மிகுதியாக இடம்பெற்றிருப்பது நோக்கத்தக்கது.

## 11.6 புறப்பொருள் நூல்கள்

பதிற்றுப்பத்து

புறநானூறு

### 11.6.1 பதிற்றுப்பத்து

சேர மன்னர்களின் சிறப்பைப் பற்றிப் பத்துப்பத்தாகப் பாடிய பத்து புலவர்களின் நூறு பாடல்களைக் கொண்டது பதிற்றுப்பத்து. இந்நூலைத் தொகுப்பித்தவரும், தொகுத்தவரும் யாரெனத் தெரியவில்லை. முதல் பத்தும் இறுதிப்பத்தும் கிடைக்கவில்லை. இந்நூல் பாடாண் திணை வகையைச் சார்ந்த ஆசிரியப்பாவாலான நூலாகும். எட்டுப் புலவர்கள் இப்பாடல்களைப் பாடியுள்ளனர். சேரமன்னர்களின் வெற்றிச் செய்திகளையும் புலவர்களுக்குப் புரவலர்கள் அளித்த பரிசிற் பொருள்களையும் இந்நூல் கூறுகின்றது.

ஒவ்வொரு பாடலிலும் துறை, வண்ணம், தூக்கு, பெயர், தலைப்பு ஆகியன இடம்பெற்றுள்ளன. ஒவ்வொரு பத்தின் இறுதியிலும் பதிகம் உள்ளது. ஒவ்வொரு பாட்டும் பாட்டில் வரும் தொடரையே தலைப்பாகக் கொண்டுள்ளது.

கடற்கொள்ளையரை இமயவரம்பனும் செங்குட்டுவனும் வென்ற செய்தி, பகைவர் நாட்டுப் பெண்களின் கூந்தலை அரிந்து கயிறாக்கி யானையை இழுத்துப் பகை நாட்டை அவமதிக்கும் வழக்கம், மக்களின் பல்வேறு பழக்கவழக்கங்கள் போன்றவை நன்கு விளக்கப்பட்டுள்ளன.

வஞ்சிமாநகரின் சிறப்பும், நீர்நிலைகள், நெடுஞ்சாலைகள் பராமரிக்கப்படும் நிலையும் பதிற்றுப்பத்தில் கூறப்பட்டுள்ளன. மேலும் சேரநாட்டின் தொண்டி, நறவு, மாந்தை ஆகிய நகரங்கள் பற்றியும் அறியமுடிகிறது. பதிற்றுப்பத்தில் வடமொழிச் சொற்களின் கலப்பு மிகுதி. பிற்காலத்தில் தமிழும், வடமொழியும் கலந்து மலையாள மொழி சேரநாட்டில் தோன்றுவதற்குரிய சூழல் ஏற்பட்டுவிட்டதைப் பதிற்றுப்பத்து மொழிநடை உணர்த்துவதாகக் கருதலாம்.

#### 11.6.1.1 பாடிய புலவர்கள்

இரண்டாம் பத்தை இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர் கண்ணனாரும், மூன்றாம் பத்தை பல்யானைச் செல்கெழு குட்டுவனை பாலைக் கௌதமனாரும், நான்காம்பத்தை களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலைக் காப்பியாற்றுக் காப்பியனாரும்,

ஐந்தாம் பத்தை கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனை பரணரும், ஆறாம் பத்தை ஆறுகோட்பாட்டுச் சேரலாதனை காக்கைப் பாடினியாரும், ஏழாம் பத்தை செல்வக்கழுங்கோ வாழியாதனை கபிலரும், எட்டாம் பத்தை தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையை அரிசில் கிழாரும், ஒன்பதாம் பத்தை இளஞ்சேரல் இரும்பொறையை பெருங்குன்றூர் கிழாரும் பாடியுள்ளனர்.

பதிற்றுப்பத்தை 1904ஆம் ஆண்டில் உ.வே.சாமிநாதையர் முதன்முதலாய் பதிப்பித்தார். ஔவை சு.துரைசாமிப்பிள்ளை இதற்கு மிகச் சிறந்த முறையில் உரை எழுதியுள்ளார். ஈழத்துப் புலவர் சு.அருளம்பாலனார் சிறந்ததொரு ஆய்வுரையை எழுதியுள்ளமையையும் குறிப்பிடத்தக்கது.

நான்காம் பத்து அந்தாதித் தொடையால் ஆனது. இது பிற்கால அந்தாதிகளுக்கு முன்னொடி எனலாம். பிற்காலத்தில் கல்வெட்டுக்களில் இடம்பெறும் மெய்க்கீர்த்திகளின் போக்கு பதிற்றுப்பத்தில் உள்ள பதிகங்களில் காணமுடிகின்றது என்று தமிழண்ணல் கூறுகின்றார். இந்நூலில் வழக்கில் இல்லாத சொற்கள் மிகுதியாகப் பயின்று வந்துள்ளன. அதனால் இப்பதிற்றுப்பத்தை ‘இரும்புக் கடலை’ என்றும் அழைப்பர்.

### 11.6.2 புறநானூறு

4 அடி முதல் 40 அடிகள் வரை உள்ள 400 பாடல்கள் கொண்ட இந்நூலைச் சுமார் 157 புலவர்கள் பாடியுள்ளனர். 14 பாடல்களைப் பாடிய புலவர்கள் பற்றி அறியப்படவில்லை. நூலின் பெயரிலேயே புறம் என்ற புறத்திணைப் பாகுபாட புலப்பட உள்ள நூல் இது மட்டுமே ஆகும். புறம், புறப்பாட்டு என்பன இதன் வேறு பெயர்களாகும். ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் திணை, துறை, பாடியோர், பாடப்பட்டோர் முதலான குறிப்புகள் உள்ளன. இதில் இடம்பெற்றுள்ள கடவுள் வாழ்த்தினைப் பாரதம் பாடிய பெருந்தேவனார் பாடியுள்ளார்.

நானூறு பாடல்களில் இரண்டு பாடல்கள் (267, 268) முழுமையாகக் கிடைக்கவில்லை. முதல் 266 பாடல்களுக்குப் பழைய உரை உண்டு. உ.வே.சா அவர்கள் 1894ஆம் ஆண்டில் இதனைப்

பதிப்பித்து பழைய உரையோடு நூல் முழுமைக்கும் குறிப்புரையும் எழுதி வெளியிட்டார். ஔவை சு.துரைசாமிப்பிள்ளை நூல் முழுமைக்கும் உரை எழுதியுள்ளார்.



#### 11.6.2.1 புறநானூற்றின் சிறப்புக்கள்

கபிலர், பரணர், இரும்பிடர்த்தலையார் போன்ற பல புலவர்கள் பாடியுள்ள இந்நூலின் பாக்கள் 18 சேர மன்னர்கள், 18 சோழர்கள், 15 பாண்டிய மன்னர்கள் ஆகியோரைப் பற்றிய வீரச் செயல்களையும், வெற்றிச் சிறப்புக்களையும் கூறுவதோடு, குறுநில மன்னர்களின் வீரத்தையும், கொடைத் தன்மையையும் எடுத்துக்கூறுகின்றன.

ஔவையார், பாரிமகளிர், வெண்ணிக்குயத்தியார், ஒக்கூர் மாசாத்தியார், காவற்பெண்டு, ஆதிமந்தியார், பூதப்பாண்டியன் மனைவி பெருங்கோப்பெண்டு உள்ளிட்ட 15 பெண்பாற் புலவர்கள் புறநானூற்றில் பாடல்கள் பாடியுள்ளனர். புறநானூற்றில் ஆண்பாற் புலவர் உள்பட அனைவருள்ளும் மிகுதியான பாடல்கள் பாடியவர் ஔவையாரே. இவர் 33 பாடல்களைப் பாடியுள்ளார்.

வரலாற்று நிகழ்வுகளைக் கூறும் புறநானூறு

நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்
அல்லது செய்தல் ஓம்புமின் (நரிவெரூஉத்தலையார்.195)
யாதும் ஊரே யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தரவாரா (கணியன் பூங்குன்றனார்.192)
பெரிதே உலகம் பேணுநர் பலரே (பெருஞ்சித்திரனார்.207)
யானை வேட்டுவன் யானையும் பெறுமே
குறும்பூழ் வேட்டுவன் வறுங்கையும் வருமே
(கோப்பெருஞ்சோழன்)

என்பன போன்ற வாழ்வியல் உண்மைகளையும் தெளிவாக எடுத்துரைக்கின்றது.

## 11.7 அகமும் புறமும் கலந்த நூல்

பரிபாடல்

#### 11.17.1 பரிபாடல்

பரிபாடல் என்னும் இசைப்பாக்களால் ஆகிய பாடல்களைக் கொண்ட நூலாகும். 13 புலவர்கள் பாடியுள்ளனர். 32 அடிகள் முதல் 140 அடிகள் வரை கொண்டது. இதனைத் தொகுத்தவரும், தொகுப்பித்தவரும் யாரெனத் தெரியவில்லை. இசை வகுத்தவரின் பெயரை ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் காணலாம். பாண்டியரின் புகழ்பாடும் தொகைநூல் இதுவாகும். தமிழரின் இருவிழி போன்று அகம், புறம் என்னும் இரு பொருளின் கூடலே பரிபாடல் பரிந்து வரும். இசைப் பால்களால் ஆன பாவகை பரிபாட்டு எனப்படும். வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா ஆகிய நால்வகைப் பாக்களுக்கும் பலவகையான அடிகளுக்கும் பரிந்து இடம் கொடுக்கும் தன்மை உடையது பரிபாட்டு. மேலும், தரவு, எருத்தம், அராகம், கொச்சகம், அடக்கியல் வாரம் என்னும் உறுப்புகளுடனும் கலந்து இயங்கும் தன்மையினை உடையயுது பரிபாட்டு வகை.

இதற்குப் பரிமேலழகர் உரையுள்ளது. 1918ஆம் ஆண்டில் உ.வே.சா இதனை உரையுடன் பதிப்பித்துள்ளார். பரிபாடலின் பகுப்பு முறையைப் பற்றி,

> திருமாற்கு இருநான்கு செவ்வேட்கு முப்பத்
> தொருபாட்டு காடுகாட்கு ஒன்று –மருவினிய
> வையை இரு பத்தாறு மாமதுரை நான்கென்ப
> செய்ய பரிபாடல் திறம்

என்னும் பழம்பாடல் தெளிவுறுத்துகின்றது. தற்போது திருமாலுக்கு 5 பாடல்கள், முருகனுக்கு 8 பாடல்கள், வையைக்கு 8 பாடல்கள் என 22 பாடல்கள் மட்டுமே கிடைத்துள்ளன. காடுகாள் (காளி), மதுரை இரண்டிற்கும் பாடல்கள் இல்லை.

**11.7.1.1 பரிபாடற் சிறப்புகள்**

பரிபாடலில் வையை பற்றிய 8 பாடல்களிலும் அகம் சார்ந்த செய்திகள் காணப்படுகின்றன. ஏனைய திருமால், செவ்வேள் பற்றிய 14 பாடல்களும் இறைவனைப் பற்றிய பாடல்களே. மற்ற புறநூல்களைப் போன்று வீரம், செல்வம், கொடை முதலான செய்திகளைப் பரிபாடலில் காணமுடிவதில்லை. அகம் நீங்கலாக உள்ள சமயப் பாடல்களே புறத்திணைப் பாடல்களாகக் கொள்ளக்கிடக்கின்றன.

திருமாலைப் புகழ்ந்து பேசும் பாடல் ஒன்று ஆழ்ந்து நோக்கும் பொழுது தத்துவப் பொருளைத் தருகின்றது. மேலோட்டமாகப் பார்க்கும்

பொழுது 0 முதல் 9 வரையுள்ள எண்களைக் குறிக்கிறது.

0 – பாழ், ½ - பாகு, 9 – தொண்டு. இதில் சுழிக்கு (0) பாழ் என்னும் பெயர்ப் பொருத்தம் எண்ணி மகிழத்தக்கது. பாகு என்னும் எண்ணுப் பெயர் பாகுபடுத்தப்பட்ட பாதியான என்னும் பொருளைக் கொண்டுள்ளது. ஒன்று என்னும் எண்ணிக்கையில் பாதி எனப் பொருள் தருகின்றது. 9 என்னும் எண்ணுக்குத் 'தொண்டு' என்னும் தொன்மையான தமிழ்ப் பெயரினைப் பரிபாடல் பதிவு செய்துள்ளது. இதனை,

பாழ்என கால்என பாகுஎன ஒன்றென

இரண்டென மூன்றென நான்கென ஐந்தென

ஆறென ஏழென எட்டென தொண்டுஎன (பரி.திருமால்.3:77-79)

என்னும் பகுதி நவிழ்கிறது.

தெய்வங்கள் அடிப்படையில் பகுப்பு முறை அமைந்து ஒரே தொகை நூல் இதுவாகும். மேலும் வையை ஆறு, மதுரை, என்னும் ஊர் அடிப்படையிலும் பகுப்பு முறை அமைந்த ஒரே தொகை நூலும் இதுவேயாகும். சைவம், சாக்தம் (சக்தி), காணாபத்யம் (கணபதி), கௌமாரம் (குமரன்), வைணவம் (திருமால்), சௌரம் (சூரியன்) என்பன அறுவகைச் சமயங்கள். இவற்றுள் சாக்தம் (காடுகாள்), கௌமாரம் (செவ்வேள்) வைணவம் என்னும் மூன்று சமயங்களை மட்டும் பரிபாடல் எடுத்துரைக்கின்றது. சிவனைப பற்றிப் பிற சங்க நூல்கள் குறிப்பிடுகின்றன. சிவன் பார்வதியின் முதல் மகனாகவும் முருகனின் அண்ணனாகவும் இக்காலத்தே வழங்கப்படும். கணபதி குறித்த எந்த ஒரு குறிப்பும் சங்க நூல்களில் இல்லை என்பது நோக்கத்தக்கது.

தெய்வ வணக்கத்திற்கு ஏற்ற வகையாகப் பரிபாடல்கள் அமைந்துள்ளன. திருமாலிடம்,

தீயினுள் தெறல் நீ! பூவினுள் நாற்றம் நீ
கல்லினுள் மணியும் நீ! சொல்லினுள் வாய்மை நீ!
அறத்தினுள் அன்பு நீ! மறத்தினுள் மைந்து நீ!

முருகனிடம் கடுவன் இளவெயினனார்,

யாஅம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமும் அல்ல, நின்பால்

அருளும் அன்பும் அறனும் மூன்றும்

எனப் புலவர்கள் பரவுகின்றனர். அகிகை, மன்மதன் போன்றோரின் ஓவியங்கள் திருப்பரங்குன்றத்தில் தீட்டப்பட்டிருந்தமையைப் பரிபாடல் உணர்த்துகிறது. நெய்தல், குவளை, ஆம்பல், சங்கம், கமலம், வெள்ளம் ஆகிய சொற்கள் நூறு, ஆயிரம், பதினாயிரம், இலட்சம், பத்த இலட்சம், கோடி போன்ற எண்களுக்குக் குறியீடாகப் பயன்படுத்தப்பட்டமையைப் பரிபாடலால் அறியமுடிகிறது.

## 11.8 பத்துப்பாட்டு

முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை

பெருகு வளமதுரைக் காஞ்சி – மருவினிய

கோல நெடுநல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்

பாலை கடாத்தொடும் பத்து

என்ற பழம்பாடல் பத்துப்பாட்டு நூல்கள் இன்னின்னவை என்று தெரிவிக்கிறது. பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம் (கூத்தராற்றுப்படை) ஆகிய ஐந்தும் ஆற்றுப்படை நூல்களாகும். இவற்றுடன் மதுரைக்காஞ்சியையும் சேர்த்தால் புறப்பொருள் பற்றிய பத்துப்பாட்டு நூல்கள் ஆறு ஆகும். முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை ஆகிய இவை மூன்றும் அகப்பொருள் பற்றியவை. நெடுநல்வாடை அகப்பொருள், புறப்பொருள் இரண்டும் கலந்த நூலாகும். பத்துப்பாட்டு அனைத்தும் ஆசிரியப்பாவிலேயே அமைந்துள்ளன.

பத்துப்பாடல்களும் எட்டுப் புலவர்களால் பாடப்பட்டுள்ளன. பத்துப்பாட்டுள் நக்கீரர் திருமுருகாற்றுப்படை நெடுநல்வாடை ஆகிய இரு நூல்களைப் பாடியுள்ளார் கடியலூர் உருத்திரங்கண்ணனார். பெரும்பாணாற்றுப்படையையும் பட்டினப்பாலையையும் பாடியுள்ளார். பத்துப்பாட்டுப் பாடிய புலவோர் பெயர்களை,

முருகு நல்வாடையும் கீரன், முடத்தாமக் கண்ணி பொருந்
மருவு பாண், பாலை உருத்திரங் கண்ணன் மகிழ்சிறு பாண்

புரியுநத் தத்தன், மருதம் நன் காஞ்சி, நப்பூதன் முல்லை
வருமெங் கபிலன் குறிஞ்சி, மலைகடாம் கௌசிகனே

என்ற பாடல் எடுத்துரைக்கின்றது. பத்துப்பாட்டில் பாட்டுடைத் தலைவர் அறுவர் ஆவார். பாட்டுடைத் தலைவர் பற்றிய குறிப்பில்லை.

முருகாறு செவ்வேள், பொருநாறு பாலை
கரிகால், நெடுஞ்செழியன் காஞ்சி - இருபாலும்
நல்லியக் கோடன்இளந்திரையன் நன்னன்கடாம்
கல்வித் தலைவர் கருது

என்ற பழம்பாடல் நினைவில் நிறுத்துகின்றது.

பத்துப்பாட்டிற்கு நச்சினார்க்கினியர் உரை முழுமையாகக் கிடைத்துள்ளது. இது சிறந்த உரையாக அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. பட்டினப்பாலைக்கும், முல்லைப்பாட்டிற்கும் மறைமலையடிகள் சிறந்த ஆராய்ச்சி உரை எழுதியுள்ளார்.

**பத்துப்பாட்டின் சிறப்புகள்**

பத்துப்பாட்டின் சிறப்பை உணர்த்த மனோன்மணியம் சுந்தரம் பிள்ளை அவர்கள்,

பத்துப்பாட் டாதிமனம் பற்றினார் பற்றுவரோ
எத்துணையும் பொருட்கிசையும் இலக்கணமில் கற்பனையே

எனக்கூறிப் புகழ்கின்றார். நச்சினார்க்கினியரும்,

சான்றோர் உரைத்த தண்டமிழ் தெரியல்

எனப் பத்துப்பாட்டின் இலக்கியச் சிறப்பினை எடுத்துரைக்கின்றார். பத்துப்பாட்டுள் நூற்பெயரிலேயே மதுரை, காவிரிப்பூம்பட்டினம் என்ற இரு நகரங்களின் பெயர்கள் மதுரைக்காஞ்சி, பட்டினப்பாலை ஆகிய இருநூல்களில் இடம்பெற்றுள்ளன. பத்துப்பாட்டுள் பாட்டு என முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு என்ற இருநூல்கள் முடிகின்றன. பத்துப்பாட்டின் முதலும் முடிவும் ஆற்றுப்படை நூல்கள் அமைந்திருப்பது நோக்கத்தக்கது. மேலும் பத்துப்பாட்டின் செம்பாதி ஆற்றுப்படை நூல்களாக அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது. 103 முதல் (முல்லைப்பாட்டு) 782 அடி வரை (மதுரைக்காஞ்சி) உள்ள நூல்கள் பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ளன.

### 11.8.1 ஆற்றுப்படை நூல்கள்

ஆறு - நெறி, வழி என்ற பொருள் படும். வழிப்படுத்துதல் என்பதே ஆற்றுப்படுத்துதல் என்னும் பொருள்பட அமைந்துள்ளது. பொருள் பெற்று மகிழ்ந்த ஒருவன் பெறாதவரும் பெற்று மகிழ வழிகாட்டுவதே ஆற்றுப்படையாகும். ஆற்றுப்படையின் இலக்கணத்தை,

கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுரீஇ
சென்றுபயன் எதிரச்சொன்ன பக்கமும்

எனத் தொல்காப்பியம் புறத்திணையியலில் கூறுகின்றது. கூத்தர், பாணர், பொருநர், விறலியர் அவரவர் இனத்தவரை மட்டும் ஆற்றுப்படுத்தினர் அல்லர். இவருள் எவர் எவரைக் கண்டாலும் வள்ளலிடம் ஆற்றுப்படுத்தினர். இதனை ஆற்றிடைக் காஞ்சி உறழத் தோன்றி என்னும் தொல்காப்பிய வரி தெளிவு செய்கின்றது.

#### 11.8.1.1 திருமுருகாற்றுப்படை

திருமுருகாற்றுப்படையை இயற்றியவர் நக்கீரர். புத்துப்பாட்டில் முதலிடம் பெறுவது திருமுருகாற்றுப்படையே. இது புலவர் ஆற்றுப்படை எனவும் முருகெனவும் வழங்கப்படும். இது 317 அடிகளைக் கொண்ட ஆசிரியப்பாவால் அமைந்த புறப்பொருள் பற்றிய நூலாகும். பத்துப்பாட்டின் பத்து நூல்களுக்கும் கடவுள் வாழ்த்துப் போன்று இத்திருமுருகாற்றுப்படை அமைந்துள்ளது. இந்நூல் பதினோராம் திருமுறையில் தொகுக்கப்பட்ட பிரபந்தங்களின் வரிசையில் சேர்க்கப்பட்டுள்ளது.

முருகன் அருள் பெற்ற ஒருவன் முருகன் அருள் பெற விரும்பியவனை முருகனிடத்தில் ஆற்றுப்படுத்துவது திருமுருகாற்றுப்படை எனப்படும். துன்பப்படுவோரைக் காக்குமாறு முருகனிடம் வேண்டுவதால் முருகாற்றுப்படுத்தல் என்றும் இதனைக் கூறினர்.

மற்ற ஆற்றுப்படை நூல்கள் அனைத்தும் ஆற்றுப்படுத்தப்படும் இரவலரின் பெயரில் அமைந்துள்ளன. ஆனால் திருமுருகாற்றுப்படை மட்டும் ஆற்றுப்படுத்தப்படும் தலைவனான முருகனின் பெயரில்

அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. திருமுருகாற்றுப்படைபற்றி செவிவழிச் செய்தி ஒன்று உள்ளது. கற்கி, முகி என்னும் பூதம் புடைத்து உண்ணும் ஆசையால் நக்கீரரை அடைத்து வைத்தது. அச்சிறையில் இருந்து தன்னை மீட்க வேண்டி முருகனை நினைத்து நக்கீரர் திருமுருகாற்றுப்படையைப் பாடினார். முருகன் அருளால் நக்கீரர் பூதத்தின் சிறையில் இருந்து மீட்கப்பட்டார். இதுவே அந்தச் செவிவழிச் செய்தியாகும்.

திருமுருகாற்றுப்படை முருகன் எழுந்தருளி இருக்கும் இடங்களையும் வழிபடும் முறைகளையும் விரிவாக விவரிக்கின்றது. இதன் அடிப்படையில் திருமுருகாற்றுப்படையை ஆறு பிரிவுகளாகப் பகுக்கலாம்.

திருப்பரங்குன்றம் என்னும் மலைக்கோயில், இயற்கை வளம், முருகன் திருக்கோலம், சூரனுடன் முருகன் செய்த போர் ஆகியவை முதல் பகுதியில் இடம்பெற்றுள்ளது.

இரண்டாவது பகுதியில் திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்), தலம், முருகனுடைய ஆறுமுகங்கள், பன்னிரு தோள்களின் பெருமைகள் ஆகியவை இடம் பெறுகின்றன.

மூன்றாம் பகுதியில் திருஆவினன்குடி (பழனி) வழிபடும் மகளிரின் சிறப்புகள் முருகனை வழிபடும் முனிவரின் பெருமைகள் கூறப்படுகின்றன.

நான்காம் பகுதியில் திருவேரகம் (திருப்பதி) எனும் தலம் வழிபடும் மக்கள், மந்திரம் ஓதுவார் செயல்கள் ஆகியவை விளக்கப்படுகின்றன.

ஐந்தாம் பகுதியில், மலைப்பகுதி, மகளிர், குன்றக் குரவை, முருகனின் அணி, ஆசை, அழகு ஆகியவை எடுத்துரைக்கப்படுகின்றன.

ஆறாம் பகுதியில் பழமுதிர்ச்சோலை, முருகன் இருக்கும் நீர்த்துறை, பழமுதிர்ச்சோலையில் உள்ள அருவியின் சிறப்பு, முருகன் அருளும் முறை ஆகியவை விளக்கப்படுகின்றன. திருமுருகாற்றுப்படையில் திருப்பரங்குன்றம், திருச்சீர் அலைவாய், திருஆவினன்குடி, திருவேரகம், முருகன் குடியிருக்கும் குன்றுகள், பழமுதிர்ச்சோலை என முருகன் எழுந்தருளி இருக்கும் இடங்களாக ஆறு இடங்களை நக்கீரர் குறிக்கின்றார்.

திருமுருகாற்றுப்படையில்,

உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாங்கு

என்று தொடக்க இரண்டு அடிகளும், கடைசி அடிகளான

இழுமென இழிதரும் அருவிப்
பழமுதிர் சோலை மலைகிழ வோனே

என்ற அடிகளும் புகழ்பெற்றவையாக அமைந்துள்ளன. மேலும் திருமுருகாற்றுப்படையில் 'ஒப்பற்ற இறைவனே! ஊன்னை வணங்குபவருக்குக் கிடைத்தற்கரிய பரிசலைத் தருவாயாக! என முருகனிடம் இரந்து கேட்கும் பக்தி சிறப்பானது. இதனை,

ஒருநீ யாகித் தோன்ற விழுமிய
பெறலரும் பரிசில் நல்குமதி (திருமுரு.294-295)

என வரும் அடிகள் மொழிகின்றன.

சைவர்கள் திருமுருகாற்றுப்படையை நாள்தோறும் ஓதும் மந்திர நூலாகப் போற்றுகின்றனர். நாள்தோறும் இந்நூல் ஓதும் சிறப்பினை,

நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற்றுப் படையைத்
தற்கோல நாள்தோறும் சாற்றினால் - முற்கோல
மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித்
தான்நினைத்த எல்லாம் தரும்

என்ற பழம்பாடல் எடுத்துரைக்கின்றது.

**11.8.1.2 பொருநராற்றுப்படை**

ஒருவரைப் போன்று வேடமிட்டுப் பாடுபவரைப் பொருநர் என்றழைப்பர். ஏர் உழும் வயல், வேளாண்மையைப் பற்றிப் பாடுபவரை ஏர்க்களப் பொருநர் என்பர். மன்னன் போர் பற்றியும், போர்க்களத்தை நேரில் சென்று கண்டு பாடுபவரை போர்க்களப் பொருநர் என்பர். பரணி பாடுபவரையும் பொருநர் என்பர். இவர்களுள் பொருநராற்றுப்படை போர்க்களம் பாடும் பொருநரைப் பற்றிக் கூறுகின்றனது. இ∴து கரிகாற் பெருவளத்தானை முடத்தாமக் கண்ணியர் பாடியது, பரிசில் பெற்று பொருநன் பரிசில் பெறவிழையும் பொருநனை ஆற்றுப்படுத்தியதாக அமைந்துள்ளது. இந்நூல் வஞ்சியடிகள் இடைஇடையே வந்து

ஆசிரியத்தால் இயன்ற 248 அடிகளையுடைய புறப்பொருள் பற்றிய நூலாகும். இப்பொருநராற்றுப்படை வஞ்சியடிகள் கலந்த ஆசிரியப்பாவாகும்.



விழாக்காலம், விழாக்காலத்தில் பொருநன் இயல்பு, பாலை யாழின் அமைப்பு, பாடினியின் கேசாதிபாத வருணனை ஆகியவை இந்நூலில் நன்கு விளக்கப்பட்டுள்ளன. கரிகாலனின் கொடைத் திறனும் பொன்னையும் பொற்றாமையும் வாரி வழங்கும் பண்பும், வெண்ணிப் போரின் வெற்றியும், தாய் வயிற்றிலிருக்கும் போதே அரசு எய்திய குறிப்பும் பொருநராற்றுப்படையில் எடுத்துரைக்கப் பெற்றுள்ளன.

யாழினை மனப்பெண்ணிற்கு உவமையாக்குவதும், யாழின் பல்வேறு உறுப்புகளை விளக்குவதும் ஆசிரியரின் நுட்பமான இசை அறிவை விளக்குவதாக அமைந்துள்ளது. பாடினியின் முடிக்குக் கருமணல் ஒழுக்கு உவமையாகிப் பாதமாம் அடிக்கு ஓடிக் களைத்த நாயின் நாக்கு உவமையாலும் மிகச் சிறந்த அழகு மிளிரும் கற்பனையாகும்.

### 11.8.1.3 சிறுபாணாற்றுப்படை

இது 209 அடிகளையுடைய புறப்பொருள் பற்றிய நூலாகும் பண்பாடுவோர் பாணராவார். இசைப்பாணர், யாழ்ப்பாணர், பிச்சையேற்றுப் பிழைக்கும் மண்டைப் பாணர் எனப் பாணர் மூவகைப்படுவர். சிறிய யாழை வாசிப்போர் சிறுபாணாராவர். வறுமையில் வாடும் சிறுபாணரை ஓய்மா நாட்டு நல்லியக்கோடனிடம் ஆற்றுப்படுத்துவது சிறுபாணாற்றுப்படை ஆகும். ஆறு – வழி, படை – படுத்துதல், வழிப்படுத்துதல் என்பதாகும். பாடியவர் நல்லூர் நத்தத்தனார். இவர் பிறந்த ஊர் இடைக்கழிநாடு. இவ்வூர் இன்றைய செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ளது.

சேர, சோழ, பாண்டிய நாட்டின் தலைநகர்களாகிய வஞ்சி, உறையூர், மதுரை ஆகிய நகரங்களின் சிறப்புகள், ஆமூர், வேலூர், மாவிங்கை, ஏழு வள்ளல்களின் கொடைத்திறம், விறலியின் அழகு, பாணனின் வறுமை ஆகியவை ஆசிரியரால் நயமுற விளக்கப் பெற்றுள்ளன. பாணனின் வறுமை நிலையை,

> இன்குரற் சீறியாழ் இட்வயின் தழீஇ
>
> ………………………………………..

முனிவிகத் திருந்த முதுவாய் இரலை

என நல்லூர் நத்தத்தனார் நன்கு விளக்குகிறார். இமயமலையில் வில் பொறித்த குட்டுவன் வரலாறு இந்நூலில் சுட்டப்படுகிறது. இந்நூல் சங்கம் வளர்த்த மதுரையில் தமிழ்நிலை பெற்றது எனும் பொருளில்,

தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்
முகிழ்நலன் மறுகின் மதுரை

என மதுரை நகர் பாராட்டுகிறது.

வறுமை மிகுந்த பாணனின் வீட்டு அடுக்களையில் நாய், குட்டி ஈன்று கிடக்கும். புலவரின் வறுமை காரணமாக உணவின்றி வாடும் நாயிடம் அதன் குட்டி பால் குடிக்க முனையும். அப்போது பாலின்றி இருக்கும் புனிற்று நாய் வலிதாங்காமல் குரைக்கும் என்பதை,

திறவாக் கண்ண, சாய்செவிக் குருளை
கறவாப் பால்முலை கவர்தல் நோனாது
புனிற்று நாய் குரைக்கும் புல்லென் அட்டில்

என்று பாடியுள்ளார் நத்தத்தனார். ஏழு வள்ளல்களின் சிறப்பையும் நல்லியக்கோடனிடம் ஒருங்கே காண்பதாகக் கூறுகிறார். இதனை,

எழுவர் பூண்ட ஈகைச் செந்நுகம்
விரிகடல் வேலி வியலகம் விளங்க
ஒருநாள் தாங்கிய உரனுடை நோன்தாள்!

எனற அடிகள் எடுத்தியம்பும்.

**11.8.1.4 பெரும்பாணாற்றுப்படை**

தொண்டைமான் இளந்திரையனைச் சிறப்பித்துக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய இப்பாட்டு 500 அடிகளைக் கொண்ட புறப்பொருள் பற்றிய நூலாகும். இதில் வரும் பாணன் கையில் உள்ளது பேரியாழ் என்பதாகும். தொண்டைமான் இளந்திரையனிடம் பரிசில் பெறக் கருதும் பாணன் ஒருவனைச் சந்தித்து அவனைத் தொண்டைமானிடம் ஆற்றுப்படுத்துவதாக அமைந்துள்ளது.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்நிலங்களில் வாழும் மக்களின் இயல்பு இந்நூலில் நன்கு படம்பிடித்துக் காட்டப்படுகிறது. யாழின் இயல்பு, வறுமைத் துன்பம், மக்களின் விருந்தோம்பல் பண்பு, போகுமிடங்களின் சிறப்பு, அங்கு கிடைக்கும் பொருட்கள் ஆகியவற்றை கடியலூர் உருத்திரங்கண்ணனார்

புலமைத் திறத்துடன் விளக்கியிருக்கிறார்.



கலங்கரை விளக்கம் வானுக்கும் பூமிக்கும் உயரத்தில் அமைக்கப்பட்டிருந்தது. காண்பதற்கு வானம் கீழே விழாதபடி முட்டுக் காலாகத் தாங்கி நிற்கும் பற்றுக்கோடு போல் கலங்கரை விளக்கம் காணப்பட்டது. உச்சியில் சாந்து பூசப்பட்ட மாடம் இருந்தது. மாடத்தில் இரவு முழுவதும் அணையாமல் தொலைவில் உள்ள கப்பல்களுக்குக் காட்சி தரும் வகையில் விறகுகளைக் கொண்டு தீ மூட்டப்பட்டது. இத்தகைய கலங்கறை விளக்கம் நீர்பாயல் துறையில் இருந்தது. இக்காட்சியை,

வானம் ஊன்றிய மதலை போல
ஏணி சாத்திய ஏற்றரும் சென்னி
விண்பொர நிவந்த வேயா மாடத்து
இரவில் மாட்டிய இலங்குசுடர் நெகிழ

என்று பெரும்பாணாற்றுப்படை காட்சிப்படுத்துகிறது. காஞ்சி மாநகரின் சிறப்பு பலாப்பழத்தின் மனத்திற்கு ஈடாக எடுத்துரைக்கப்படுகிறது.

### 11.8.1.5 மலைபடுகடாம் (கூத்தராற்றுப்படை)

இதற்குக் கூத்தராற்றுப்படை எனவும் வேறு பெயருண்டு. இந்நூல் 583 அடிகளை உடைய நேரிசை ஆசிரியப்பாவால் ஆகியது. இது புறப்பொருள் பற்றிய நூலாகும். பரிசில் பெற வரும் கூத்தன் ஒருவனைப் பரிசில் பெற்றான் ஒருவன் நன்னனிடத்து ஆற்றுப்படுத்தியதாக, அந்நன்னனை இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் என்னும் புலவர் பாடியதே மலைபடுகடாம் ஆகும். இதனை மலையில் தோன்றும் ஓசை என்றும் குறிப்பிடுவர். ஆற்றுப்படையில் அதிக அளவு அடிகளை உடையது. இந்நூல் நன்னனின் மலையை யானைக்கு உவமித்து, அதன்கண் தோன்றி ஓசையுடன் வீழும் அருவியை யானையின் மதநீர் ஒழுகும் ஓசைக்கு (கடாம்) உவமை கூறிச் சிறப்பித்தமையால் இதனை மலைபடுகடாம் என்பர்.

இசைக் கருவிகளைத் தனித்தனியே சிறுசிறு முடிச்சுகளாகக் கட்டி அவற்றைக் காவடியின் இருமருங்கிலும் கோர்த்துத் தொகுதியாகத் தொங்கவிட்டுக் கூத்தர்கள் எடுத்துச் சென்றனர். இது பார்ப்பதற்குப் பலாக்காய்கள் பலா மரத்தில் காய்த்துத் தொங்குவதைப் போன்று இருந்தது என்று மலைபடுகடாம் கூறுகின்றது. இதனைக் கூறும்போது கௌசிகனார், முழவு, ஆகுளி, பதலை, கோடு, தூம்பு, குழல், யாழ்,

பாண்டில் ஆகிய சங்ககாலத்து இசைக்கருவிகளையும் படம்பிடித்துக்காட்டியுள்ளார்.

மலையில் எழும் பல்வேறு வகையான ஒலிகளையும் ஆசிரியர் காட்சிகளாகக் காட்டுவது சிறப்பானதாக அமைந்துள்ளது. மலைபடுகடாம் ஆசிரியர் இந்நூலில் இருபது வகையான ஓசைகளைக் குறிப்பிடுகிறார். இவ்வோசைகளே, 'மலைபடுகடாம்' ஆகும். அவ்வகையில் 'மலையில் தோன்றும் ஓசை' என இந்நூலிற்குப் பெயர் அமைந்திருப்பது பொருத்தமானதாகும். இவ்வோசைகளின் வாயிலாக மக்களின் வாழ்க்கை முறைகள், பழக்கவழக்கங்கள், மலையின் இயற்கை வளங்கள் ஆகியனவும் பெருங்கௌசிகனாரால் விளக்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

தமிழரின் இசைக்கருவியான யாழின் உறுப்புகளைக் கூத்தராற்றுப்படையின் மூலம் அறியலாம். மேலும் இவ்வாற்றுப்படை நூல்கள் அனைத்தும் தற்காலத்திய பயண இலக்கியங்களுக்கு முன்னோடிகளாக அமைந்திருக்கின்றன எனலாம்.

### 11.8.2 அகம் பற்றிய நூல்கள்

#### 11.8.2.1 முல்லைப்பாட்டு

இது பத்துப்பாட்டிலேயே மிகவும் சிறியது. 103 அடிகளை உடையது. காவிரிப்பூம்பட்டினத்துப் பொன் வாணிகனார் மகனார் நப்பூதனார் பாடியது. ஆசிரியப்பாவால் இயன்றது. இப்பாட்டு முல்லைத் திணைக்குரிய இருத்தல் ஒழுக்கத்தைச் சிறப்பித்துக் கூறுகிறது. போர் மேற்சென்ற தலைவன் திரும்பி வரும்அளவும், அவன் கூறிய சொல் திறம்பாமல் ஆற்றியிருந்த செயலைக் கூறுகிறது. முல்லைத் திணையைப் பாடியதால் முல்லைப்பாட்டு எனப்பட்டது.

பிரிந்து சென்ற தலைவனை நினைத்துத் தலைவி துன்பப்படுவதும் உடனே தன் மனத்தை நிலைப்படுத்திக் கொள்ள முயல்வதுமான காட்சியை முல்லைப்பாட்டு காட்டுகிறது. அப்போது,

> நெஞ்சாற்றுப் படுத்த நிறைதபு புலம்பொடு
> நீடுநினைந்து ஆற்றியும் ஓடுவளை திருத்தியும்

என்று கூறப்பட்டுள்ளது. இதில் 'நெஞ்சாற்றுப்படுத்த நிறை' என வரும் தொடரின் மூலம் முல்லைப்பாட்டு 'நெஞ்சாற்றுப்படை' என்றும்

வழங்கப்படுகிறது.

திருமால் வாமனனாய் அவதாரம் எடுத்த கதை இதில் உவமையாக வெளிப்பட்டுள்ளது. நல்லது கெட்டது அறிய விரிச்சி கேட்கும் பழக்கம் யானையைப் பயிற்றுவிக்க வடமொழியைப் பயன்படுத்துதல், மாலையில் வீட்டின் முன் விளக்கேற்றுதல், பொழுது அளந்து அறிய நாழிகை அறிவித்தல், அரசன் பள்ளி கொள்ளுமிடத்தில் காவலுக்கு ஊமையரை நியமித்தல் போன்ற அரிய செய்திகளை இந்நூல் எடுத்துரைக்கிறது. கார்காலத்தில் விலங்கின் மகிழ்வும் துயரும் கூறி, இறுதியில் கார்காலமும் தலைவனின் தேர்வரும் காலமும் ஒரே ஒலியாய் இணைய இரு இதயம் இணையப் போவதை நுட்பமாகக் கூறி முடியும் முல்லைப்பாட்டு கார்காலப் பாடல்களில் தலைசிறந்தது எனலாம்.

### 11.8.2.2 குறிஞ்சிப்பாட்டு

இ∴து 261 அடிகளால் ஆனது. கரந்து வாழ்க்கை நடத்தும் காதலர்களின் களவு ஒழுக்கத்தைச் சிறப்பித்துக் கூறுகிறது. கபிலர் என்னும் பெரும்புலவர் இந்நூலை இயற்றிய ஆசிரியர் ஆவார். இவர் பறம்பின் கோமானாகிய பாரியின் உயிர்த்தோழராவார். நச்சினார்க்கினியரின் உரை முடிவை ஆதாரமாகக் காட்டி, ஆரிய அரசன் பிரகதத்தனுக்குத் தமிழ் அறிவிப்பதற்காக இந்நூல் இயற்றப்பட்டது என்பர். தமிழ் எனில் 'அகத்திணை' என்று பொருள். அகத்திணை இன்பதம் (பா.2063) என்பதற்கு இனிய தமிழ் கூறிய இயற்கைப் புணர்ச்சியாகிய இன்பம் என நச்சினார்க்கினியர் மொழிவர். மேலும் தமிழ் எனில் அகத்திணை, களவு ஒழுக்கம் என்னும் பொருள்களைத் தருவதனை,

> தள்ளாப் பொருள் இயல்பின்
> தண்தமிழ் ஆய்வந்திலார்
> கொள்ளால் இக்குன்று பயன்

என்ற பகுதியிலும் அறியலாம். எனவே அக்களவொழுக்கத்தின் சிறப்பை உணர்த்துவதற்காகவே இந்நூலை கபிலர் பாடினார் எனலாம்.

அறத்தொடு நிற்றல் துறையில் அமைந்த இதற்குப் பெருங்குறிஞ்சி எனும் பெயரும் உண்டு என்பர். நச்சினார்க்கினியர் குறிஞ்சி நிலமும் புணர்த் ஒழுக்கமும் ஆகிய இரண்டையும் இந்நூல் முழுக்க முழுக்கப் பாடுவதாகக் குறிஞ்சிப்பாட்டு எனப்படுவது பொருத்தமாக உள்ளது.

தலைவி தலைவன் மீது கொண்ட காதலையும் களவொழுக்கத்தையும் தோழி செவிலிக்குக் கூறி அறத்தொடு நிற்பதாகக் குறிஞ்சிப்பாட்டு தொடங்குகின்றது. தலைவியின் களவொழுக்கத்தைச் செவிலியிடம் கூற முற்படும் தோழி மிகுந்த கவனமுடன் செயல்படுகிறாள். இருபெரு வேந்தர்களுக்கு இடையே செயல்படும் சான்றோர் போல கவனம், பொறுப்பு, ஆளுமை, அச்சம் முதலானவையுடன் தலைவி செவிலியிடம் அறத்தொடு நின்றாள். அதனை,

இகல்மீக் கடவும் இருபெரு வேந்தர்

வினையிடை நின்ற சான்றோர் போல

இருபேர் அச்சமொடு யானும் ஆற்றலென் (27-29)

எனும் பகுதி குறிப்பிடுகின்றது.

களவொழுக்கத்தை இயற்கைப் பின்னணியில் பூவோடு இணைத்துப் புணர்ச்சியைக் காட்டும் புதுமையான இலக்கியமாகக் குறிஞ்சிப்பாட்டு நிகழ்கின்றது. 99 வகையான பூக்களைத் தலைவியும், தோழியும் பறித்துக் குவிப்பதைக் குறிஞ்சிப்பாட்டு பட்டியலிட்டுக் காட்டுகிறது. இம்மலர்க் குவியலை 34 அடிகளில் உரைத்தமையால் கபிலர் இயற்கைகையை வருணிப்பதில் உலகிலேயே தலைசிறந்தவர் ஆகிறார் எனத் தனிநாயக அடிகளார் குறிப்பிடுகின்றார். உ.வே.சா அவர்களே முதன்முதலில் குறிஞ்சிப்பாட்டின் ஏடுகளைத் திரட்டி ஒழுங்குபடுத்திப் பதிப்பித்தார்.

அக்காலத் திருமண முறையில் தாலி கட்டுவதைவிடக் கைப்பிடிக்கும் சடங்கே முதன்மையாகக் கருதப்பட்டது என்பதைக் குறிஞ்சிப்பாட்டின்,

நேரிறை முன்கை பற்றி நுமர்தர

நூடறி நன்மனம் அயர்கம் சின்னாள்

எனும் அடிகள் எடுத்துரைக்கிறது. களவு என்னும் கைகோளுக்கு (கைகோள் - ஒழுக்கம்) உரிய துறைகள் பலவற்றையும் குறிஞ்சிப்பாட்டு தொகுத்துக் கூறியுள்ளது. இந்தவிதத்தில் பிற்காலத்து எழுந்த கோவை நூல்களுக்குக் குறிஞ்சிப்பாட்டு வித்திட்டது எனலாம்.

### 11.8.2.3 பட்டினப்பாலை



பட்டினப்பாலையை இயற்றியவர் கடியலூர் உருத்திரங்கண்ணனார். இப்பாடல்301 அடிகளைக் கொண்டது. இதில் 163 அடிகள் வஞ்சியடிகள். 138 அடிகள் ஆசிரிய அடிகள். ஆசிரிய அடிகள் இடையிடையே விரவி வரப் பெற்று வஞ்சிப்பாவில் அமைந்தது. வஞ்சி நெடும்பாட்டு என்பர். வஞ்சிப்பா என்று இதனை இளம்பூரணர் கூறுவர். அக்காலத்தில் பட்டினம் என விதந்து குறிக்கப்பெற்ற காவிரிப்பூம்பட்டினத்தைச் சிறப்பித்துப் பாலைத் திணையைப் பாடுவதால் இப்பாட்டு பட்டினப்பாலை எனப் பெயர் பெற்றது.

பொருள் காரணமாகத் தலைவியைப் பிரியக் கருதிய தலைவன் அன்பு காரணமாகப் பிரிவை நிறுத்தியது இதன் துறையாகும். காவிரியின் சிறப்பு,

வான் பொய்ப்பினும் தான்பொய்யா

மலைத் தலைய கடற்காவிரி

எனவும், காவிரிப்பூம்பட்டினத்தின் சிறப்பையும் தலைவனின் அன்பின் சிறப்பையும்,

முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்

வாரிருங் கூந்தல் வயங்கிழை ஒழிய

வாரேன் வாழிய நெஞ்சே

எனவும் கரிகாற்சோழனின் வீரத்தை,

திருமாவளவன் தெவ்வர்க்கு ஓக்கிய

வேலினும் வெய்ய கானம்

எனவும் அவன் அருள் திறத்தை,

அவன்

கோலினும் தண்ணிய தடமென்தோளே

எனவும் சிறப்புடன் பட்டினப்பாலை எடுத்துரைக்கிறது.

பட்டினப்பாலை காவிரிப்பூம்பட்டினத்தின் கடல் வணிகச் சிறப்பு,

வணிகர்களின் நேர்மை, வணிகர் தெரு, கடற்கரையில் சுங்க வரி விதிக்கும் முறை, காவிரிப்பூம்பட்டினத்தின் முக்கிய இடங்களாகிய பட்டினப்பாக்கம், மருவூர்ப்பாக்கத்தின் சிறப்பு, பரதவர்களின் வீரம் ஆகியவற்றை நன்கு எடுத்துரைக்கிறது. தோப்பு, சோலை, பொய்கை, ஏரி, விளையாட்டு இடங்கள் என ஒவ்வொரு காட்சியாகக் காட்டி வருவதால் பட்டினப்பாலையைப் பயண வழிகாட்டி நூல் எனலாம். பட்டினப்பாலைக்கு மறைமலையடிகள், இராகவையங்கார் ஆகியோர் சிறந்த ஆய்வு நுல்கள் எழுதியுள்ளனர்.

### 11.8.3 புறம் பற்றிய நூல்கள்

ஆற்றுப்படை நூல்கள் ஐந்தும், இவற்றுடன் மதுரைக்காஞ்சியையும் சேர்த்துப் புற நூல்கள் ஆறு ஆகும். இவை பற்றிய விளக்கம் முன்னர் குறிப்பிடப்பெற்றுள்ளன.

#### 11.8.3.1 மதுரைக்காஞ்சி

பத்துப்பாட்டுள் இதுவே பெரியது. 782 அடிகளையுடையது. மதுரையை ஆண்ட மன்னனுக்கு உலக இன்பம், பொருட்செல்வம், இளமை யாக்கை இவையெல்லாம் நிலையில்லாதவை என்னும் காஞ்சித்திணையை விரித்துக்கூறுவது மதுரைக்காஞ்சியாகும். இந்நூலாசிரியர் பாண்டியன் நெடுஞ்செழியனால் பெரிதும் பாராட்டப்பட மாங்குடி மருதனார் என்ற புலவர் ஆவார். காஞ்சி நிலையாமை, மதுரையைப் பாடுவதாலும், நிலையாமையைக் கூறுவதாலும் மதுரைக்காஞ்சி எனப்பட்டது. பாண்டியன் நெடுஞ்செழியனே இந்நூலின் பாட்டுடைத் தலைவனாவான்.

காஞ்சி பற்றிய பாடியதால் இதன் ஆசிரியர் மதுரைக்காஞ்சிப் புலவர் என்றும், காஞ்சிப் புலவனார் என்றும் சிறப்பிக்கப்படுகின்றார். நூலும் காஞ்சித்திணை, காஞ்சிப்பாட்டு எனச் சிறப்பிக்கப்படுகிறது. இந்நூலில் 428 வரிகளில் நிலையாமையினைப் பற்றி எடுத்துரைக்கின்றது, நோக்கத்தக்கது. இதனால், மதுரைக்காஞ்சியைத் ‘தொல்காப்பியக் காஞ்சி விளக்கப்பாட்டு’ என்று கூறலாம்.

மதுரையில் நாளங்காடியும் அல்லங்காடியும் அழகுற விளக்கப்படுகின்றன. மதுரையின் தெருக்கள் ‘ஆறு கிடந்தன்ன

அகன்நெடுந்தெரு’ எனவும் நாட்டின் அறங்கூறவையும் எப்படி இருந்தது என்பதை,

அச்சமும் அவலமும் ஆர்வமும் நீக்கிச்
செற்றமு் உவகையும் செய்யாது காத்து
ஞெமன்கோலன்ன செம்மைத் தாகிச்
சிறந்த கொள்கை அறங்கூறு அவையமும்

என்ற வரிகளில் தெளிவுறுத்துகிறார்.

ஐந்திணை வளம் கூறி, மன்னன் கடமைகளை எடுத்துரைக்கும், பாண்டியன் தலையாலங்கானத்தில் எழுவரை வென்றமையும், ஆட்சிச் சிறப்பும் கூறி, உலக இன்பங்களில் தன்னை மறந்த மன்னனிடம் உடனடியாக நிலையாமையைக் கூறாது மனம் மகிழ அவன் முன்னோர் பெருமையும், அவன் பெருமையும் எடுத்துரைத்து எத்தனை சிறப்புகள், அடைந்தாலும் மண் நமக்குச் சொந்தமன்று என்ற உண்மையைக் கூறி இறுதியில் வீடுபேற்றின் சிறப்பை எடுத்துரைக்கும் மாங்குடி மருதனாரின் பணி நுட்பமானது. இளமை, உடல், செல்பம் இவை நிலையாமை எனக் கூறி வீடுபேறே நிலைத்தது என மருதனார் நூலை முடிப்பது சிறப்பானதாக அமைந்துள்ளது எனலாம்.

### 11.8.4 அகப்புற நூல்கள்

#### 11.8.4.1 நெடுநல்வாடை

திருமுருகாற்றுப்படையை இயற்றிய நக்கீரர் இதனையும் ஆக்கியுள்ளார். மதுரைக்காஞ்சியின் தலைவனான தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனே இதன் பாட்டுடைத் தலைவனாவான். நீண்ட நல்ல வாடையைப் பாடும் பாட்டு இது. துணைவனைப் பிரிந்த தலைவிக்குத் துன்பம் தரும் நெடுநல்வாடையாகவும், தோன்றுவதால் இது நெடுநல்வாடை என்னும் பெயர் பெற்றது.

188 அடிகளைக் கொண்டது. நேரிசை ஆசிரியப்பாவால் ஆனது. தலைவனின் படை, வீரர்களைக் குறிப்பிடும் நிலையில் வேலின் முனையில் வேப்பம் பூ சூடியதைச் சுட்டியதால் பாண்டிய வீரர்கள் என்பது வெளிப்பட்டு விட்டது. அப்போதையை பாண்டிய மன்னன்

நெடுஞ்செழியன் என்பதும் குறிப்பால் புலப்படுவதால் இந்நூலை புறம் என்பர். இந்நூல் அகமா? புறமா? என்பது இன்றளவும் விவாதத்திற்கு உரியதாக இருந்து வருவது நோக்கத்தக்கது. ஆனாலும் அகம் குறித்த சிறந்த நூலாக நெடுநல்வாடை அமைந்துள்ளது எனலாம்.

கூதிர் காலத்தின் கொடுமை இந்நூலில் நன்கு வருணிக்கப்பட்டுள்ளது. விலங்குகள் மேய்ச்சலை மறந்தன. குரங்குகள் குளிரில் நடுங்கின. பறவைகள் நடுங்கி நிலத்தில் வீழ்ந்தன. குளிர் காரணமாகப் பசுக்கள் கன்றுகளுக்குப் பாலூட்டாது உதைக்கின்றன. மலையைக் குளிர்ச்சியடையச் செய்த குளிர்காலம் எனும் பொருளில்,

மாமேயல் மறப்ப மந்தி கூரப்

பரவை படிவன் வீழக் கறவை

கன்றுகோ ளொழியக் கடிய வீசிக்

கன்று குளிரப் பன்ன கூதிர்ப் பானாள்” (9-12)

என்று கூறப்பட்டுள்ளது நோக்கத்தக்கது.

அரசமாதேவியின் அந்தப்புரமும் அங்குள்ள ஓவியமும் அதில் புனையா ஓவியமாகக் பாண்டிமாதேவி படுத்திருக்கும் கட்டிலின் அழகும் நக்கீரரால் நன்கு காட்சிப்படுத்தப்பட்டுள்ளது நோக்கத்தக்கது. அரண்மனை வாயில், முற்றம், அந்தப்புரம், தந்தக் கட்டில் போன்றவை சிற்ப நுட்பத்துடன் விளக்கப்படுவதால் இதனை சிற்பப் பாட்டிடு எனவும் கூறலாம் என்று தமிழண்ணல் கூறுகின்றார்.

மலரின் மலர்ச்சியால் பொழுதறிந்து காலைப் பொழுதில் பெண்கள் நெல்லையும், மலரையும் தூவி விளக்கேற்றி இல்லுறைத் தெய்வத்தை வணங்கும் வழக்கம் சுட்டப்படுகிறது. மன்னனின் பாசறைத் தொழிலும் அவனது கடமையுணர்வும் வீரர்களுக்கு ஆறுதல் கூறும் நிலையும் நன்கு விளக்கப்படுகின்றன. நெடுநல்வாடையின் சிறப்புக் கருதி, ‘நெடுநல்வாடை ஒரு பெருஞ் சுரங்கம், நக்கீரர் கண்ட சுரங்கம், ‘தமிழ்ச்சுரங்கம்’ எனத் திரு.வி.க சிறப்பித்துக் கூறுகிறார்.

## 11.9 சங்க இலக்கியச் சிறப்புகள்



இயற்கையோடு மனிதர்கள் ஒன்றி வாழ்ந்த காலம் சங்ககாலம் ஆகும். ஐந்திணைக்கேற்ப மக்கள் வாழ்க்கையும் அமைந்திருந்தது. கருப்பொருளோடு சார்ந்து தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொண்டனர். தொல்காப்பியர் பொருளதிகாரத்தில் விளக்கும் கோட்பாடுகள் சங்க இலக்கியங்களில் பெரும்பாலும் அப்படியே காணப்பெறுகின்றன.

### 11.9.1 திணை இலக்கியங்கள்

சங்க இலக்கியங்களைத் திணை இலக்கியங்கள் என்று மொழிவர். முலை, காடு, வயல், கடல், வளமை அற்ற நிலம் என்னும் இந்த ஐந்து வகைப் பகுப்புகளுக்குள் உலகம் அடங்கி விடும். உலகின் நிலைத்த பகுப்புகளான இந்த ஐந்திணையும் சங்க இலக்கியங்கள் ஐந்திணை எனச் சுட்டுகின்றன.

நிலத்தை அடிப்படையாகக் கொண்டுதான் பருவநிலை மாறுதல்கள் ஏற்படுகின்றன. நிலம் மற்றம் பருவ நிலை மாறுதல்களால் ஏற்படும் பொழுது பாகுபாடுகள் இவற்றைக் கொண்டுதான் நீர், மரம், பூ, பறவை, விலங்கு, உணவு முதலானவை தகவமைகின்றன. இவற்றின் மூலமாகவே உணவையும் தொழிலையும் மனிதன் அமைத்துக் கொள்கின்றான். நிலம், பொழுது என்ற இரண்டும் முதற்பொருள் எனப்படும்.

மலையும் மலை சார்ந்த நிலமும் குறிஞ்சி எனப்படும். இதற்கு குளிர்காலம், முன்பனிக்காலம், பெரும்பொழுதுகளாகும். யாமம் சிறுபொழுதாகும். காடும் காடு சார்ந்த நிலமும் முல்லை நிலமாகும். இதற்கு கார்காலம் பெரும்பொழுதாகும். மாலை சிறுபொழுதாகும். வயலும் வயல் சார்ந்த நிலமும் மருத நிலமாகும். ஆறு பெரும்பொழுதுகளும், சிறுபொழுதாகிய வைகறையும் இதற்குரியனவாகும். கடலும் கடல் சார்ந்த நிலம் நெய்தலாகும். ஆறு பெரும்பொழுதுகளும், எற்பாடு என்ற சிறுபொழுதும் இதற்குரியனவாகும். மணலும், மணல் சார்ந்த நிலமும் பாலை எனப்படும். இதற்கு இளவேனில், முதுவேனில், பின்பனி ஆகிய பெரும்பொழுதுகளும், நண்பகல் என்ற சிறுபொழுதும் உரியதாகும்.

முதற்பொருளைக் கருவாகக் கொண்டு உருவான நீர் முதலாகத் தொழில் ஈறாக உள்ள 14 பொருள்கள் ஆகும். எனவே இவற்றைக் கருப்பொருள்கள் என்பர். உரிப்பொருள் என்பது உலக மக்கள் அனைவருக்கும் உரியபொருள் ஆகும். குறிஞ்சிக்குப் புணர்தலும் புணர்தல் நிமித்தமும், முல்லைக்கு இருத்தலும் இருத்தல் நிமித்தமும், மருதத்திற்கு ஊடலும் ஊடல் நிமித்தமும், நெய்தலுக்கு இரங்கலும் இரங்கல் நிமித்தமும், பாலைக்குப் பிரிதலும்பிரிதல் நிமித்தமும் உரிப்பொருளாகும். இவை அன்பின் ஐந்திணைகள் என்று வழங்கப்படுகின்றன. இவை தவிர கைக்கிளை, பெருந்திணை என்பன அன்பில்லாத் திணைகள் எனப்படும். கைக்கிளை என்பது ஒருதலைக்காமம், பெருந்திணை என்பது பொருந்தாக் காமம் ஆகும்.

### 11.9.2 புறத்திணைகள்

வீரம், புகழ், நிலையாமை என்பன புறத்திணைகள் எனப்படும். புறத்திணைகள் வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண் என்பர். வீரம், போர் பற்றிக் கூறுவதால் புறத்திணையாயிற்று. நாட்டின் வாழ்க்கையைப் பற்றிப் பேசப்படுவதாலும் பெயர் கூறி அமைந்தாலும் இவை புறம் எனப்பட்டது. மெய்ப்பாட்டியலில் மெய்யின்கண் ஏற்படும் புறப்பொருள் புறப்புலப்பாடுகள் பற்றி கூறப்படுகிறது.

அகன் ஐந்திணையும் புறத்திணைகளுக்குப் புறமாக வரும் குறிஞ்சி வெட்சி கரந்தைக்கும், முல்லை வஞ்சிக்கும், மருதம் உழிஞைக்கும், நெய்தல் தும்பைக்கும், பாலை வாகைக்கும், பெருந்திணை காஞ்சிக்கும், கைக்கிளை பாடாண் திணைக்கும் புறமாக வரும்..

இவ்வாறு அகன் ஐந்திணை, புறத்திணை அடிப்படையில் சங்க இலக்கியப் பாடல்கள் அனைத்தும் அமைந்துள்ளன. எனவே சங்க இலக்கியங்கள் திணை இலக்கியங்கள் எனப் போற்றப்படுகின்றன.

### 11.9.3 செவ்வியல் இலக்கியங்கள்

சங்க இலக்கியங்கள் தமக்கெனப் பல சிறப்புக்களைக் கொண்டுள்ளன. உலக இலக்கியங்கள் அனைத்திலும் காதல், வீரம் என்னும் பொருண்மைகளைக் கொண்ட சங்கப்பாடல்கள் ஏட்டில் எழுதா இலக்கியங்களாக இருந்து மக்கள் நாவில் தவழ்ந்தன. அதன் பின்பே

ஏட்டிலக்கியங்களாயின. அதன்பின்பு செவ்வியல் இலக்கியங்கள் என்ற சிறப்பைப் பெற்றன.

சங்க காலத்திற்கு முன்பே தோன்றிய இலக்கண நூல் தொல்காப்பியம். இந்நூலில் உரை, பிசி (விடுகதை), வாய்மொழி (மந்திரம்) குறிப்பு (அங்கதம்), முதுசொல் (பழமொழி) என்னும் ஐந்தும் வாய்மொழி இலக்கியங்கள் என்று குறிப்பிடப்பட்டுள்ளன.

வாய்மொழி இலக்கியத்தின் சாயல் சங்க இலக்கியப் பாடல்களிலும் காணப்படுவது குறிப்பிடத்தக்கது.

அகவன் மகளே அகவன் மகளே
மனவு கோப்பன்ன நன்னெடுங் கூந்தல்
அகவன் மகளே பாடுக பாட்டே
இன்னும் பாடுக பாட்டே, அவர்
நுன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே (குறுந்.23)

என்னும் பாடலை இதற்கு உதாரணமாகக் குறிப்பிடலாம். இதில் பாடுக பாட்டே, பாடுக பாட்டே எனக் கட்டுவிச்சியிடம் கேட்பது, வாய்மொழியாகப் பாடப்படும் பாட்டு இலக்கியத்தையே எனலாம்.

மேலும் பேச்சு வழக்கில் பேசப்படும் இன்னும் எனப்படும் சொல்லைப் பயன்படுத்தி இருப்பது இந்தப் பாடலே வாய்மொழி இலக்கியம் தான் என்பதையும் உணர்த்துகிறது. ஹோமரின் கிரேக்க ஆதி காவியங்கள் வாய்மொழி வழி வந்தவை என்பர் அறிஞர். சங்கப் பாடல்களிலும் இந்த ஆதி காவிய வாய்மொழி இலக்கியத் தன்மையைக் காணலாம்.

பாடப்படும் நெடும் பாடலுக்குள் தனிப் பாடல் வடிவங்களும் கலந்து சங்க இலக்கியங்களில் உள்ளன. ஏறுதழுவுதலைப் பற்றி விரிவாகக் கூறுவது முல்லைக்கலி. ஏறுகளின் காட்சிக்கு நடுவில்,

எழுந்தது துகள்
ஏற்றனர் மார்பு
கவிழ்ந்தன மருப்பு
கலங்கினர் பலர் (முல்லைக்கலி)

என்னும் வடிவம் காணப்படுகின்றது. இப்பாடலை நோக்கிய அளவில் இதன் தனிப்பாடல் வடிவ வகைமையை உணரலாம்.

### 11.9.4 அக மரபு

அகத்துறையில் தலைவன் தலைவியர் பெயர் குறித்து எழுதினால் அகத்திணை மாண்பு சிதைவுறும். நிகழ்ந்த காதல்கள் வரலாற்றுச் சுவடு அற்றுக் காதல் மணமாக வீசுதல் வேண்டும். களவியலையும் உளவியலையும் தெளிந்த நம் முன்னோர் அகத்திணையை நுண் இலக்கியமாகக் கொண்டனர். எனவே பெயர் குறியாது விடுத்தனர் என்று மூதறிஞர் வ.சுப.மாணிக்கம் அவர்கள் கூறுவர்.

அக இலக்கியங்களில் தலைவன் தலைவி என்னும் குறிப்பு தவிர பெயர் சுட்டப்படும் தன்மை காணப்படுதல் இல்லை. இதற்கு,

மக்கள் நுதலிய அகனைந் திணையும்
சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறாஅர் (தொல்.நூ.1000)

என்று தொல்காப்பியர் அகமரபினை உணர்த்துகின்றார்.

### 11.9.5 காதல் பாடல்களின் சிறப்பு

எட்டுத்தொகை நூல்களில் அகப்பாடல்களே மிகுதியாக உள்ளன. 2381 சங்க இலக்கியப் பாடல்களுள் 1862 பாடல்கள் அகத்திணைப் பாடல்களாகும். பரிபாடலும்,

காதற் காமம் காமத்தில் சிறந்தது

எனப் போற்றுகின்றது. இதன்மூலம் காதல்நிலைக் காலமே தமிழகத்தில் முற்படத் தோன்றியது என்பதனை உணரலாம். இதனை ஒட்டியே வீரநிலைக்காலம் உருவெடுத்தது.

ஏ.கே.இராமானுஜம் என்னும் அறிஞர் தேர்ந்தெடுத்த சங்க அகப்பாடல்களை 'The Interior Landscape' என்னும் தலைப்பில் மொழிபெயர்த்துள்ளார். அம்மொழிபெயர்ப்பில் சங்கப் பாடல்களில் உள்ள காதல் நிலைகளை வியந்து போற்றியுள்ளனர். செம்மல் வ.சுப.மாணிக்கம் அவர்கள் தமிழ்க்காதல் என்னும் நூலில் சங்க அகப்பாடல்கள் அனைத்தும் காதல்நிலை இலக்கியங்களே என்பதனை நிறுவுகின்றார்.

இம்மை மாறி மறுமை ஆயினும்
நீயா கியர்என் கணவனை
யானா கியர்நின் நெஞ்சுநேர் பவளே (குறுந்.49)

என்னும் குறுந்தொகைப் பாடல் உயிருடன் கலந்த உண்மைக் காதலுக்கு அணியாக ஒளிர்கிறது.

காதல் பாடல்கள் ஓரங்க நாடக அமைப்பாக அமைந்திருப்பது சிறப்பிற்குரியதாகும். ஒருவர் கூற்றாயின் செய்தி முழுவதும் சொல்லும் முறையே ஓரங்க நாடகப் பாங்கு எனப்படும்.

தலைவனின் பிள்ளைமை வயதுக் குறும்புகளும், தலைவன் பருவ வயது எய்திய பின் தன் மீது காதல் கொண்ட நிலையும், நீர்க்குவளையை வாங்குவது போல் தன் கையைப் பற்றியதையும், அஞ்சியதால் அலறியதையும், அவள் தாய் வந்து என்ன என்று கேட்டபொழுது 'நீர் பருகும் பொழுது இவனுக்கு விக்கிக் கொண்டது' எனக் கூறிச் சமாளித்ததையும் அலறலைக் கேட்டு அச்சமுற தலைவன் தனது சமாளிப்பைக் கண்டு,

கடைக்கண்ணால் கொல்வான் போலநோக்கி நகைக்கூட்டம்

செய்தான் அக்கள்வன் மகன் (கலித்தொகை.51)

என்று அனைத்து நிகழ்வுகளையும் தலைவியே கூறுகின்றாள். இத்தன்மையை இக்காலத்து ஓரங்க நாடகம் என்கிறோம். இந்த நாடகத் தன்மையானது கலித்தொகையில் உள்ள காதல் பாடல்களில் இடம்பெற்றுள்ளது போற்றுதற்குரிய ஒன்றாகும்.

**11.9.6 உவமைக்களஞ்சியம்**

சங்கப் பாடல்களில் உவமைகள் இயல்பாக அமைந்துள்ளன. இவ்விலக்கியங்கள் அனைத்தும் உவமைக் களஞ்சியமாகத் திகழ்கின்றன. காதலியை விட்டுப் பிரிந்து அயல்நாட்டிற்குச் சென்று கொண்டிருந்த தலைவன், ஒரு குன்றின் மேல் எழுந்துவரும் முழுமதியைப் பார்த்து, "எனக்கே உரிமையான ஒரு மதி அதோ அந்த மலைக்கு அப்பால் உள்ளது" என்று தன் தலைவியின் முகத்தை நினைந்து பாராட்டினான். பிரிவாற்றாமையால் வாடி ஒளி இழந்த ஒருத்தியின் முகம் விடியற்காலத்துச் சந்திரனுக்கு ஒப்பாகக் கூறப்பட்டுள்ளது. எட்டாம் பிறைச்சந்திரன் நெற்றிக்கு உவமையாக்கப்பட்டது. நெய்தல், குவளை முதலிய சில மலர்கள் மகளிரின் கண்களுக்கு உவமை ஆயின. அழுது கண்ணீர் சொரியும் கண்கள், பெய்யும் மழையால் நனைந்து நீர் வடியும் மலர்களாக உள்ளன.

தலைவன் போர்களத்திற்குச் சென்றுவிட்டான். தலைவனின் பிரிவாற்றாமையினால் தலைவி வருந்துகிறாள். தலைவியின் கண்களில் இருந்து கண்ணீர் பெருகுகிறது. அவ்வாறு தலைவியின் கண்களில் இருந்து வருவது கண்ணீரல்ல. அவை முத்துக்களாகும். இதனை,

பூப்போல் உண்கண் புலம்பு முத்துரைப்ப

என்ற முல்லைப்பாட்டில் அமைந்த அழகிய உவமை எடுத்துரைக்கிறது. இவ்வாறு சங்க இலக்கியங்கள் உவமைகளின் களஞ்சியமாகத் திகழ்கின்றது.

**11.9.7 வீரநிலை இலக்கியம் (வீரயுகப் பாடல்கள்)**

வீரமும் காதலும் வீரயுகத்தின் இருகண்களாகப் போற்றப்பட்டன. வீரத்தைப் பொருத்தவரையில்,

கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு
முன்தோன்றி மூத்த குடி

தமிழ்க்குடியாகும் எனப் புறப்பொருள் வெண்பாமாலை குறிப்பிடுகிறது. உன் மகன் யாண்டுளான் எனப் பெண்ணொருத்தி வினவியபோது, வீரனின் தாயொருத்தி, 'என் மகன் இப்பொழுது எங்கே அந்த ஊரில் எத்திசையில் இருக்கின்றான் என்று கூட தெரியாது. இதோ! புலி தங்கி இருந்து போன குகை என் வயிறு இங்கே இருக்கிறது என் மகன் ஏதாவது போர்க்களத்தில் இருப்பான்' என்று மறுமொழி கூறுகிறாள். இவள் சங்ககாலத்தை வீர யுகமாக மாற்றிய பெருமைக்கு உரியவள். இத்தாயின் வீரத்தை,

புலிசேர்ந்து போகிய கல்வளைபோல்
ஈன்ற வயிறோ இதுவே
தோன்றுவன் மாதோ போர்க் களத்தானே

என்னும் பாடல் எடுத்துரைக்கிறது.

குழந்தை இறந்து பிறந்தாலும், குழந்தையாக உருக்கொள்ளாது தசைப் பிண்டமாகப் பிறந்தாலும் கூட குழந்தையின் உடலில் வாளால் கீறிய பின்னரே பண்டைத் தமிழர் அடக்கம் செய்வர். வீரம் மிகுந்த சிறப்பினைப் பெற்றிருந்த அக்காலத்தை,

குழவி இறப்பினும் ஊண்தடி பிறப்பினும்
ஆளன் றென்று வாளின் தப்பார் (புறம்.74)

என்ற பாடல் தெளிவுறுத்துகிறது.

போரிட வாய்ப்பு இல்லாது நோயில் கிடந்து உயிர் நீத்த மன்னர்களைத் தமிழ்ச் சமுதாயம் இழிவாகக் கருதியது. இவ்விழிவு நீங்க அம்மன்னரின் மார்பில் கீறிப் புதைத்தனர். இவ்வீர நிகழ்ச்சியை,

நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇ
காதல்மறந்து அவர்தீது மருங்கு அறுமார்
……………………………………………..
மறம் கலந்தாக நல்லமர் வீழ்ந்த
நீள்கழல் மறவர் செல்வுழிச் செல்கென
வாள்போழ்ந்து அடக்கலும் உய்ந்தனர் (புறம்.93)

என்ற புறநானூற்றுப் பாடல் காட்சிப்படுத்துகின்றது. காதலும் வீரமும் கலந்த சங்கப் பாடல்கள் அனைத்தும் செவ்வியல் பண்புகளைத் தன்னகத்தே கொண்டு என்றும் பண்டைத் தமிழரின் பண்பாட்டுப் பெட்டகங்களாகத் திகழ்கின்றன.

## 11.10 தொகுத்துக் காண்போம்

- சங்க இலக்கியம் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்
- எட்டுத்தொகை நூல்களையும், அவற்றின் சிறப்பையும் அறிந்து கொண்டீர்கள்
- பத்துப்பாட்டு நூல்களையும், அவற்றின் சிறப்புகளையும் தெரிந்து கொண்டீர்கள்

## 11.11 சோதித்தறியும் வினாக்கள்

1. சங்க இலக்கியம் என்பவை யாவை?

………………………………………………………………
…………………………

2. எட்டுத்தொகை நூல்கள் பற்றி விளக்குக

………………………………………………………………
…………………………

3. பத்துப்பாட்டு நூல்கள் எத்தனை? அவை யாவை?

………………………………………………………………
…………………………

## 11.12 பயிற்சி வினா

1. சங்ககாலம் பொற்காலம் என்பதை விவரி
2. சங்க இலக்கியத்தின் சிறப்பினைப் புலப்படுத்துக
3. சங்க காலச் சமுதாய நிலையை விவரி

## 11.13 மேலும் படித்தறிக

முனைவர் சி.சேதுராமன், தமிழ் இலக்கிய வரலாறு, பாவை பப்ளிக்கேஷன்ஸ், சென்னை – 600 014.

# கூறு 12: பதினெண்கீழ்க்கணக்கு.

## 12.1 அறிமுகம்

உலகிலுள்ள தொன்மை மிக்கப் பழங்குடிகள் தங்களுக்கெனச் சில பண்பாடுகள், பழக்கவழக்கங்கள் போன்றவற்றைப் பெற்றுள்ளன. இவை அடுத்த காலக்கட்டத்தில் மாறலாம். இந்த மாற்றத்தில் பழையவை நீக்கப்படலாம் அல்லது கடியப்படலாம். புதியவை புகலாம். இவ்வகையான நிலையைச் சங்க இலக்கியக் காலத்திற்குப் பிறகு வரும் அற இலக்கியக் காலத்தில் அறிய முடிகின்றது. பதினெண்கீழ்க்கணக்கு நூல்களின் அறிமுகப்பகுதியாக இப்பாடம் அமைகிறது.

## 12.2 குறிக்கோள்கள்

- பதினெண்கீழ்கணக்கு நூல்கள் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்.
- அவற்றுள் அற இலக்கியங்கள் போதிக்கும் அறங்களைப் பற்றி அறிந்து கொள்வீர்கள்.
- சங்கம் மருவிய காலத்தில் மக்களின் அகவாழ்வைப் பற்றிப் புரிந்து கொள்வீர்கள்.
- சங்கம் மருவிய காலத்தில் மக்களின் புறவாழ்வைப் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்

## 12.3 பிற பெயர்கள்

சங்கம் மருவிய கால நூல்கள், அறநூல்கள், நீதி நூல்கள் என்று கூறப்பட்ட அனைத்தும் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களையே சாரும்.

## 12.4 காலம்

சங்கம் மருவிய காலம் கி.பி மூன்றாம் நூற்றாண்டு முதல் கி.பிஆறாம் நூற்றாண்டு வரையாகும்.

சங்கம் மருவிய காலத்தில் தமிழ்நாட்டை ஆண்டவர்கள் களப்பிரர்கள். களப்பிரர்கள் ஆண்ட காலம் இருண்ட காலம் எனப்படுகிறது. ஆதலால் இதற்கு இருண்ட கால இலக்கியம் என்ற பெயரும் இந்நூலுக்கு வழங்கப்படுகிறது.

சங்கம் மருவிய காலத்தில் புறச் சமயங்களான பௌத்தமும், சமணமும் மேலோங்கி இருந்தது.

வச்சிரணந்தியின் திராவிட சங்கத்தில் இயற்றப்பட்டவை பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் என்று சிலர் கருதுவர்.

## 12.5 தொகுத்தவர் தொகுப்பித்தோர்

இப்பதினெட்டு நூல்களையும் தொகுத்தவர் தொகுப்பித்தோர் பற்றி ஏதும் தெரியவில்லை.

## 12.6 பா அமைப்பு

பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் அனைத்தும் வெண்பா யாப்பில் ஆனவை.

## 12.7 பாடுபொருள்

சங்ககாலத்தில் அ∴றிணைகளைக் கொன்று சமைத்து உண்பதே சிறந்த உணவாகக் கருதப் பெற்றது. விருந்தும் அவ்வாறே இருந்தது என்பதை ஆற்றுப்படை இலக்கிய நூல்கள் உணர்த்துகின்றன. பெண்களோடு வாழ்வது பெரிய குற்றமாகக் கருதப்பெறவில்லை. இவை எல்லாம் அற இலக்கியக் காலம். நீதி இலக்கிய காலம் அல்லது சங்கம் மருவிய காலத்தில் கூடா ஒழுக்கங்களாகக் கருதப்பெற்றன. ஆத்தீக மதங்களில் உயிர்ப்பலிகள் நடைபெற்றன. ஆனால் கடவுள் மறுப்புக் கொள்கையாகிய நாத்திக வாதம் பேசிய சமணம், பௌத்தம் போன்ற மதங்கள் புலால் உண்ணுதல், பிறனில் விழைதல் போன்றவற்றைக் கடிந்தன.

படிப்படியான வளர்ச்சி நிலையில் தனிமனித வாழ்விலும் சமுதாய வாழ்விலும் மக்கள் பல அறக்கோட்பாடுகளைப் பின்பற்ற வேண்டிய சூழல் ஏற்பட்டது. இந்நீதிக் கோட்பாடுகளை விளக்குபவையே பதினெண்கீழ்க் கணக்கு நூல்களாகும்.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்திணை மக்களின் வாழ்வியல் பதிவுகளையும் பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் நயம்பட எடுத்துரைக்கின்றன.

## 12.8 பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள்

சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் கீழ்க்காண்பவை பதினெண்கீழ்க்கணக்கு என்பதை வெண்பா ஒன்று தொகுத்துக் கூறுகின்றது.

நாலடி நான்மணி நானாற்பது ஐந்திணைமுப்
பால்கடுகம் கோவை பழமொழி – மாமூலம்
இன்னிலைய காஞ்சியுடன் ஏலாதி என்பவெ
கைந்நிலையும் ஆம்கீழ்க் கணக்கு

1.நாலடியார், 2.நான்மணிக்கடிகை, 3.இன்னா நாற்பது, 4.இனியவை நாற்பது, 5.கார்நாற்பது, 6.களவழி நாற்பது, 7.ஐந்திணை ஐம்பது, 8.திணைமொழி ஐம்பது, 9.ஐந்திணை எழுபது, 10.திணைமாலை நூற்றைம்பது, 11.திருக்குறள், 12.திரிகடுகம், 13.ஆசாரக்கோவை, 14.பழமொழி, 15.சிறுபஞ்சமூலம், 16.முதுமொழிக்காஞ்சி, 17.ஏலாதி, 18.கைந்நிலை

பொய்கையார் என்னும் புலவர் இயற்றிய நாற்பத்து ஐந்து (45) வெண்பாக்களை உடைய இன்னிலை என்னும் நூலைக் கைந்நிலைக்குப் பதிலாக சிலர் அடக்குவர். வையாபுரிப்பிள்ளை இப்படி ஒரு நூல் இல்லை என்பார்.

இவை பொருள் அடிப்படையில் அற நூல்கள் 11, அகப்பொருள் நூல்கள் 6, புறப்பொருள் நூல் 1 எனப் பகுக்கப்பெறுகின்றன.

## 12.9 அற இலக்கியங்கள்

**அறநூல்கள்** **அகப்பொருள்**

**புறப்பொருள்**

1.திருக்குறள் 1.கார் நாற்பது

1.களவழி நாற்பது

2.நாலடியார் 2.ஐந்திணை ஐம்பது

3.நான்மணிக்கடிகை 3.திணைமொழி ஐம்பது

4.இன்னா நாற்பது 4.ஐந்திணை எழுபது

5.இனியவை நாற்பது 5.திணைமாலை நூற்றைம்பது

6.திரிகடுகம் 6.கைந்நிலை

7.ஆசாரக்கோவை

8.பழமொழி நானூறு

9.சிறுபஞ்சமூலம்

10.முதுமொழிக்காஞ்சி

11.ஏலாதி

## 12.10 அறநூல்களின் இலக்கணம்



பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் பன்னிரு பாட்டியல் குறிப்பது போலக் குறைந்த அடி வரையறையோடு அறம், பொருள், இன்பம் என்ற முப்பொருளை உணர்த்தும்.

அடிநிமிர் பில்லாச் செய்யுள் தொகுதி
அறம்பொருள் இன்பம் அடக்கி அவ்வத்
திறம்பட உரைப்பது கீழ்க் கணக்கு (பன்.பாட்.348)

## 12.11 அறநூல்கள்

திருக்குறள், நாலடியார், நான்மணிக்கடிகை, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, திரிகடுகம், ஆசாரக்கோவை, பழமொழி நானூறு, சிறுபஞ்சமூலம், முதுமொழிக்காஞ்சி, ஏலாதி ஆகிய பதினொரு நூல்களும் அறநூல்களாகும்.

### 12.11.1 திருக்குறள்

வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு (பாரதி.பாட.1767)

உலகிலுள்ள ஒவ்வொரு இனக்குழுவுக்கும் முன்னோர்கள் பல அரிய செல்வங்களை விட்டுச் சென்றுள்ளார்களா. தமிழர் பெருமைப்படத் தக்க வகையில் உள்ளவை ஒல்காப் பெரும்புகழ் தொல்காப்பியரின் தொல்காப்பியம், பாட்டும் தொகையும், திருவள்ளுவரின் திருக்குறள் போன்றவை ஆகும்.

திருக்குறளை விட மக்களால் அறியப் பெற்ற நூல்கள் உலகில் பல இருக்கின்றன. அவை நாடு, சாதி, மதம், மொழி என ஏதாவது ஒன்றில் சிறைப்பட்டு எல்லோராலும் முழுமையாக ஏற்றுக்கொள்ள முடியாத வகையில் சுருங்கிப்போய் உள்ளன. ஆனால் திருக்குறள் எல்லோருக்கும் பொதுவான அறத்தைக் கூறுவதால் உலகப் பொதுமறை எனப் போற்றப் பெறுகின்றது.

இவ்வரிய உண்மையை நன்கு உணர்ந்த மனோன்மணியம் சுந்தரம்பிள்ளை கீழ்க்கண்டவாறு குறிப்பதும் நோக்கத்தக்கது ஆகும்.

வள்ளுவர்செய் திருக்குறளை மறுவறநன் குணர்ந்தோர்கள்

உள்ளுவரோ மனுவாதி ஒரு குலத்துக் கொருநீதி (மனோ.)

**12.11.1.1 பாகுபாடு**

வாழ்க்கைக் கோட்பாடாக அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கைக் கூறுவார்கள். முதல் மூன்றில் முறையாக வாழ்ந்தால் வீடுபேறு தானாகக் கிட்டும் என்ற கோட்பாட்டில் திருவள்ளுவர் முதல் மூன்று அடிப்படையிலேயே குறள்வெண்பாவில் ஆயிரத்து முந்நூற்று முப்பது (1330) குறட்பாக்களையும் யாத்துள்ளார். ஒவ்வொரு அதிகாரத்திற்கும் பத்துப் பத்துக் குறள் என நூற்று முப்பத்து மூன்று (133) அதிகாரங்கள் வகுக்கப் பெற்றுள்ளன. அறத்தப்பால், பொருட்பால், இன்பத்துப்பால் என்ற பெரும் பகுப்பில் பகுக்கப் பெற்று அவற்றுள் சில உட்பிரிவுகளில் அதிகாரங்கள் அடக்கப்பெற்றுள்ளன.

| முப்பால் | இயல்கள் | அதிகாரங்கள் |
|---|---|---|
| 1.அறத்துப்பால் | 1.பாயிரம் | 01-04 - 04 |
| | 2.இல்லறவியல் | 05-24 - 20 |
| | 3.துறவறவியல் | 25-37 - 13 |
| | 4.ஊழியியல் | 38 - 01 |
| 2. பொருட்பால் | 1.அரசியல் | 39-63 - 25 |
| | 2.அமைச்சியல் | 64-73 - 10 |
| | 3.அரணியல் | 74-75 - 02 |
| | 4.கூழியல் | 76 - 01 |
| | 5.படையியல் | 77-78 - 02 |
| | 6.நட்பியல் | 79-95 - 17 |
| | 7.குடியியல் | 96-108 - 13 |
| 3.இன்பத்துப்பால் | 1.களவியல் | 109-115 - 07 |
| | 2.கற்பியல் | 116-133 - 18 |

**12.11.1.2 அறத்துப்பால்**

திருவள்ளுவர் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே பல அரிய-தனி மனித, குடும்பவியல் கோட்பாடுகளை எல்லாம் வகுத்துள்ளார். ஒருவன் பொறாமை, ஆசை, கோபம், கடுஞ்சொல் போன்றவற்றை நீக்கி மனதில் குற்றம் இல்லாமல் வாழும்போது தெய்வமாகக் கருதிப் பெறுவான்.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும் (திருக்.50)

இவ்வகையான தனி மனிதக் கோட்பாடு மிளிரும்போது இல்லம் என்பது இயற்கையாகவே சிறக்கும். இவ்வாறு சிறக்கும்போது நல்ல மக்கட்பேறு கிட்டும். உலகம் அவனைப் போற்றும்.

மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை
என்நோற்றான் கொல்எனும் சொல் (திருக்.70)

குடும்பம், குழந்தை என மகிழ்ந்து வாழும்போது தலைவன் தலைவி உறவு, சமுதாயத் தொடர்பு எனப் பல இணைப்புகள் கிடைக்கின்றன. விருந்தைப் போற்றுபவன் மேலோருக்கு விருந்தினன் ஆவான்.

செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு (திருக்.86)

தனிமனிதன் சமுதாயத்தோடு இணையும்போது பலர் உதவி செய்வார்கள். அவர்களை மறவாது வாழவேண்டும். எக்காலத்தும் நடுநிலைமை தவறாது வாழவேண்டும். அடக்கமும் ஒழுக்கமும் ஒருவர்க்கு உயர்ந்த பெருமையை அளிக்கும். பிறன் இல் விழையாக பெருமை மிக்கவனாகவும் பொறுமை மிக்கவனாகவும் வாழ வேண்டும். வாழ்க்கைக்குத் தேவையான நல்லவற்றைக் கடைபிடித்து அல்லவற்றை நீக்கும் போது மனிதருள் மாணிக்கமாக ஒருவன் திகழ்கின்றான். ஈதலால் புகழையும் அருளையும் பெறமுடியும்.

சங்ககாலத்தில் குற்றமாகக் கருதப்படாத பிறனில் விழைதல், புலால் உண்ணுதல், கள் உண்ணுதல் களவு செய்தல் போன்றவற்றைக் கூடா ஒழுக்கம் - கடியத்தக்கவை என்றார் திருவள்ளுவர்.

கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும் (திருக்.260)

வாழ்க்கை நிலையற்றது. வாழ்வாங்கு வாழ்வதே வாழ்க்கை. உயர்திணையாகிய மக்களும் மற்றைய உயிர்களும் போற்றும் வகையில் கொளவன கொண்டு தள்ளுவன தள்ளி வாழ்வதே வாழ்க்கை என அறத்துப்பாலில் பசுமரத்தாணி போலத் திருவள்ளுவர் பதிய வைக்கின்றார்.

### 12.11.1.3 பொருட்பால்

தனிமனித வாழ்வு சிறப்பாக அமையும் போதே சமுதாயமும் சிறப்பாக அமையும். வள்ளுவப் பெருந்தகை சமுதாயம் சிறக்க நயமாகவும் பயமாகவும் அறிவுரைகளைக் கூறுகின்றார்.

முடியாட்சி கோலோச்சி இருந்த காலம், ஆதலால் நாடு, ஆளும் மன்னர், அமைச்சர், படை எவ்வாறு இருக்க வேண்டும் என்பதைத் திருவள்ளுவர் தெளிவாகக் கூறுகின்றார்.

தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
நீங்கா நிலனாள் பவர்க்கு (திருக்.384)

முன்னேற வேண்டும் என்று நினைப்பவர்களுக்கு இவை இன்றியமையாதவை என்பதை எல்லோருடைய வாழ்விலும் உணரலாம். நாடாள்வோர் மாற்றாரது வலிமை, காலம், இடம் போன்றவற்றைத் தெளிவாக அறிந்து இருத்தல் வேண்டும் என்பதைத் தெளிவாக்குகின்றார். திருவள்ளுவர் காட்டும் அல்லது காட்ட விரும்பும் மன்னர்கள் சங்க மன்னர்களைப் போன்ற சான்றாண்மை மிக்கவர்கள். ஆராயாமல் தெளிவு அடைவதும் தெளிந்த பிறகு ஐயப்படுவதும் பெரும் தீங்கை ஏற்படுத்தும் என்பதைக் குறிப்பிடுகின்றார்.

செல்வத்தைப் பெருக்க வேண்டும். சுற்றத்தோடு கூடி வாழ்தல் வேண்டும். கண்ணோட்டம் இல்லாத வாழ்க்கை பயனற்றது. பிறரின் இடுக்கண்ணைத் தீர்த்தல் வேண்டும். அதே போன்று இடுக்கண் உற்றபோது சிரிக்க வேண்டும் என்கிறார்.

இடுக்கண் வருங்கால் நகுக அதனை
அடுத்தூர்வது அஃதொப்பது இல் (திருக்.621)

முன்னேற வேண்டும் என்று நினைப்பவர்களுக்கு இவை இன்றியமையாதவை என்பதை எல்லோருடைய வாழ்விலும் உணரலாம். நாடாள்வோர் மாற்றாரது வலிமை, காலம், இடம் போன்றவற்றைத் தெளிவாக அறிந்து இருத்தல் வேண்டும் என்பதைத் தெளிவாக்குகின்றார். திருவள்ளுவர் காட்டும் அல்லது காட்ட விரும்பும் மன்னர்கள் சங்க மன்னர்களைப் போன்ற சான்றாண்மை மிக்கவர்கள். ஆராயாமல் தெளிவு அடைவதும், தெளிந்த பிறகு ஐயப்படுவதும் பெரும் தீங்கை ஏற்படுத்தும் என்பதைக் குறிப்பிடுகின்றார். செல்வத்தைப் பெருக்க வேண்டும். சுற்றத்தோடு கூடி வாழ்தல் வேண்டும். கண்ணோட்டம் இல்லாத

வாழ்க்கை பயனற்றது. பிறரின் இடுக்கண்ணைத் தீர்த்தல் வேண்டும். அதே போன்று இடுக்கண் உற்றபோது சிரிக்க வேண்டும் என்கிறார்.

இடுக்கண் வருங்கால் நகுக அதனை
அடுத்தூர்வது அ∴தொப்பது இல் (திருக்.621)

திருவள்ளுவர் சொல்லும் கருத்துக்கள் எக்காலத்தும் எல்லோராலும் ஏற்றுக் கொள்ளும் வகையில் இருக்கின்றன. காலங்கள் மாறினாலும் வள்ளுவப் பேராசான் வகுத்துத் தந்த கருத்துக்கள் பகலில் கதிரவனாகவும் இரவில் சந்திரனாகவும் நமக்கு வழி காட்டுகின்றன.

**12.11.1.4 இன்பத்துப்பால்**

அறத்துப்பாலிலும் பொருட்பாலிலும் கூறப் பெற்றுள்ள கருத்துக்களைத் தனிமனிதனும் சமுதாயமம் பின்பற்றினால் புற வாழ்க்கை அமைதியாகவும் செழுமையுமாக அமையும். புற வாழ்க்கை அமைதியாக அமைந்தால் அகவாழ்க்கை இன்பமயமாகவே கழியும்.

திருவள்ளுவர் சங்க அக வாழ்க்கை முறையை ஏற்றுக் கொள்கின்றனர். இருப்பினும் அதில் பல சீர்திருத்தங்களைச் செய்கின்றனர். ஆணுக்கும் பெண்ணுக்கும் கற்பு நெறியைப் பொதுமைப்படுத்துகின்றார்.

களவியலில் சங்ககாலத் தலைவிகளை அப்படியே கண்முன் கொண்டு வந்து நிறுத்துகின்றார்.

யான்நோக்ககும் காலை நிலன்நோக்கம் நோக்காக்கால்
தான்நோக்கி மெல்ல நகும் (திருக்.1094)

பெண்மையின் நாணத்தைத் திருவள்ளுவர் எவ்வளவு நளினமாக உணர்த்துகின்றார். தலைவன்-தலைவியின் மன உணர்வுகளையும் அகவாழ்வின் இயல்பையும் அணு அணுவாக ஆராய்ந்து வெளிப்படுத்துகின்றார்.

**12.11.1.5 உலகப் பொதுமறை**

திருக்குறளின் பொதுமைக் கோட்பாட்டாலும் சுருங்கச் சொல்லி விளங்க வைத்து இருப்பதாலும் உலக மொழிகள் பெரும்பாலானவற்றில் மொழி பெயர்க்கப் பெற்றுள்ளது. பழைய பதின்மர் உரைகளோடு புத்துரைகள் வந்து கொண்டிருக்கின்றன. மேலை நாட்டு அறிஞர்கள் பலர் திருவள்ளுவரை அறிந்த பிறகே தமிழை அறிந்தார்கள். ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பெ, பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் (திருக்.972)

என்று கூறிய திருவள்ளுவரைப் பார்த்து மலைத்து நிற்கின்றானர். ஜி.யு போப் அவர்களைத் தமிழ் மாணவன் ஆக்கியது திருக்குறள். உலகத்தில் இதனைப் போன்று சிறந்த நீதி நூல் இல்லை என ஆல்பர்ட்டு சுவைட்சர் போன்ற அறிஞர்கள் குறிப்பிடுகின்றார்கள். பல பதிப்பகங்கள் பதிப்பித்துக் கொண்டே இருக்கின்றன.

முடியாட்சி காலத்திலேயே மக்களாட்சி மனிதற்குள் மலர அன்பின் வழி உயிர்நிலை (திருக்.80) என்று விழைகின்றார். எனவே, திருக்குறளில் இல்லாததே இல்லை என்னும்படி இம்மை வாழ்விற்கு எல்லாக் கருத்துக்களையும் கூறுகின்றார். பூமியைச் சமன் செய்த குறுமாமுனி அகத்தியன் போல் இருக்கும் திருக்குறளுக்குப் பெருமை சேர்க்கும் கீழ்க்காணும் ஔவையார் வரிகள்.

அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுக்கத் தறிந்த குறள்

**12.11.2 நாலடியார்**

பதினெண்கீழ்க்கணக்கு எனப்பெறும் நூல்களில் திருக்குறளுக்கு அடுத்து வைத்து எண்ணத்தக்கது நாலடியார். இந்நூலுள் வெண்பாவால் ஆகிய நானூறு பாக்கள் காணப்பெறுகின்றன. ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி நாலும் இரண்டும் சொல்லுக்கு உறுதி என வழங்கப்பெறுவதாலேயே இதன் பெருமை விளங்கும். பிற்காலத்தவர் அறம், பொருள், இன்பம் என நாலடியார் பாக்களைப் பகுத்து ஒன்று சேர்த்துள்ளனர். பல கருத்துக்கள் கூறியது கூறுதல் போல் இருப்பதால் ஒருவரால் இயற்றப் பெற்றவை அல்ல என்பதை எல்லோரும் ஏற்றுக் கொள்கிறார்கள். சமண மதக் கருத்துக்கள் நிறைந்து இருப்பதால் சமண முனிவர்கள் இயற்றியவையாக இருக்க வேண்டும் எனக் கூறுவது பொருத்தமான கருத்தே ஆகும். வாழ்க்கைக்கு மேன்மை தருவனவும் கேடு தருவனவும் நாலடியாரின் சிறப்பாக விளக்கப்பெறுகின்றன. மக்கள் வாழ்வோடு பின்னிப் பிணைந்த பொருட்கள் உவமையாகக் கூறப்பெறுகின்றன.

செல்வத்தைச் சேர்த்து வைக்கக்கூடாது. பகுத்துண்டு வாழவேண்டும். ஏனெனில் நிலையில்லாது வண்டிச் சக்கரம் போல் சுற்றிக் கொண்டே இருக்கம் என்பதை, அனடுற யார்மாட்டும் நில்லாது செல்வம் சகடக்கால் போல வரும் (நாலடி.2). மேலும் மனிதன் பெரிதும்

விரும்புகின்ற செல்வம், இளமை, யாக்கை எல்லாமே நிலையற்றவை என்பதை நாலடியார் தெளிவாக விளக்குகின்றது.

நாலடியார் பாக்களை இயற்றியவர்கள் சமண முனிவர்கள். ஆதலால் நிலையாமையை நுண்ணிதின் ஆராய்ந்து வெளிப்படுத்துகின்றார்கள். வாழ்க்கை என்பது புல் நுனியில் இருக்கும் பனித்துளி போன்றது. கதிரவன் ஒளியில் அறியலாம். காற்றின் அசைவில் விழலாம். எனவே அறத்தை உடனே செய்ய வேண்டும் என வலியுறுத்துவதைக் கீழ்க்காணும் நாலடியாரால் அறியலாம்.

புல்நுனிமேல் நீர்போல் நிலையாமை என்றெண்ணி
இன்னினியே செய்க அறவினை - இன்னினியே
நின்றான் இருந்தான் கிடந்தான் கேளலறச்
சென்றான் எனப்படுத லால் (நாலடி.29)

அறமும், தூய்மைத் தன்மையும், பற்றற்ற வாழ்வும், சினவாமையும் மனித நேயத்திற்கு அடிப்படை ஆதாரங்கள் என்பதை நாலடியார் வழி அறியலாம்.

கல்வி அறிவின்மையால் மக்கள் போரிட்டு மாண்ட நிலையை முடியாட்சி காலத்தில் அறியலாம். முடியழகும் ஆடையழகும் பிற பூச்சின் அழகும் உண்மையான அழகல்ல. உண்மை அழகு தருவது கல்வியே என்பதைக் கீழ்க்காணும் பாவால் அறியலாம்.

குஞ்சி அழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்சள் அழகும் அழகல்ல – நெஞ்சத்து
நல்லம்யாம் எனும் நடுவு நிலைமையால்
கல்வி அழகே அழகு (நாலடி.131)

இவ்வாறு எக்காலத்திலும் கற்றுக்கொள்ள வேண்டியதற்கும், நீக்க வேண்டியதற்கும் நிறைய செய்திகள் நாலடியாரில் உள்ளன. பலர் உரை எழுதியுள்ளனர். சில மட்டும் காணப்படுகின்றன.

இவ்வாறு வாழ்வுக்குச் சேர்க்க வேண்டியவற்றையும் நீக்க வேண்டியவற்றையம் இயல்பான பழமொழிகளோடு விளக்குவது இந்நூலின் பெருமையாகும்.

### 12.11.3 நான்மணிக்கடிகை

பதினெண்கீழ்க்கணக்கு எனப்பெறும் அறநூல்களுள் ஒன்றான நான்மணிக்கடிகை என்னும் புறப்பொருள் உணர்த்தும் நூலை யாத்தவர் விளம்பி என்னும் ஊரில் பிறந்தவர். விளம்பிநாகனார். கடவுள் வாழ்த்துப் பகுதியால் இவர் வைணவ சமயத்தைச் சார்ந்தவர் என்பதை அறியமுடிகின்றது. வெண்பா யாப்பில் அமைந்து இந்நூல் கடவுள் வாழ்த்தோடு நூற்று ஆறு (106) பாக்களை உடையது.

கள்ளி மரத்தின் நடுவில் அகில் என்னும் மணப்பொருள் தோன்றும். மானின் வயிற்றில் அரிதாரம் என்னும் பூச்சுப்பொருள் பிறக்கும். உயர்ந்த முத்துக்கள் கடலில் விளையும். இவை போலவே நல்லவர் பிறக்கும் குடியை யாவரும் அறியமாட்டார். உயர்ந்தோர் உயர்ந்த குடியில்தான் பிறப்பர் என்ற கோட்பாட்டை உடைக்கும் வகையில் கீழ்க்காணும் நான்மணிக்கடிகைப் பா அமைந்துள்ளது.

கள்ளி வயிற்றின் அகில்பிறக்கும் மான் வயிற்றில்
ஒள்ளரி தாரம் பிறக்கும் பெருங்கடலுள்
பல்விளைய முத்தம் பிறக்கும் அறிவார் யார்
நல்லாள் பிறக்கும் குடி (நான்மணி.6)

எந்தப் பாவை எடுத்தாலும் இப்படிப்பட்ட நான்கு மணியான கருத்துக்கள் தொகுத்துக் கூறப்பெற்றுள்ளன.

**12.11.4 இன்னா நாற்பது**

குழு வாழ்க்கையில் இருந்து வளர்ச்சி பெற்ற முடியாட்சிக் காலத்திலிருந்த சில நடைமுறைகள் சங்கம் மருவிய காலத்தில் கடியப்பட்டன. இவ்வகையில் எழுந்ததே பிற்காலக் கபிலரின் இன்னா நாற்பது. கடவுள் வாழ்த்தோடு நாற்பத்தொரு (41) வெண்பாக்களை உடையது. பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் நானாற்பது என்னும் பகுதியில் அடங்கும். திருக்குறளை ஒட்டிப் பல இன்னாக்கள் இந்நூலில் இடம்பெறுகின்றன. மது அருந்துவது இன்னாதது என்பதை கள்ளுண்பான் கூறும் கருமப்பொருள் இன்னா (இன்.நாற்.34) எனக் குறிப்பிடுகின்றார். சமண, பௌத்தக் கருத்தக்கள் இன்னா நாற்பதில் நிறையக் காணப்படுகின்றன.

யானையில் மன்னரைக் காண்டல் நனியின்னா

ஊனைத்தின்று ஊனைப்பெருக்குதல் முன்னின்னா
தேன்நெய் புளிப்பின் சுவையின்னா ஆங்கின்னா
கான்யாறு இடையிட்ட ஊர்





யானை இல்லாத அரசர் ஊனைத் தின்று உடம்பைப் பெருக்குவதும் தேன், நெய், புளிப்பு போன்றவற்றைச் சுவைப்பதும் காட்டாறுகளுக்கு இடையே ஊர் இருப்பதும் இன்னாதவை எனக் கபிலர் குறிப்பிடுகின்றார்.

நடைமுறை வாழ்க்கைக்குப் பயன்படும் வகையில் பல இன்னல்கள் இந்நூலில் இடம்பெறுகின்றன.

**12.11.5 இனியவை நாற்பது**

இவ்வரிய அறநூலை யாத்தளித்தவர் பூதஞ்சேந்தனார் என்னும் புலவர் ஆவார். இந்நூலில் நாற்பது வெண்பாக்கள் காணப்பெறுகின்றன. பெரும்பாலும் ஒவ்வொரு வெண்பாவிலும் நான்கு நான்கு இனியவை தொகுத்துக் கூறப் பெற்றுள்ளன. பல பாக்கள் இனியவை நாற்பதும் இன்னா நாற்பதும் ஒத்த கருத்துக்களைப் பெற்று உடன்பாட்டிலும் எதிர்மறையிலும் விளக்கப்பெறுகின்றன.

யானையைப் படையில் பெற்றிருப்பதுவும் ஊன் தின்று உடம்மைப் பேணாது இருப்பதுவும் மானம் உடையார் மதிப்பைப் பெற்று இருப்பதுவும் மானம் உடையால் மதிப்பைப் பெற்று இருப்பதும் இனிமையானவை. இன்னாநாற்பது பா (23) ஒன்றும் கீழ்க்காணும் இனியவை நாற்பது பாவும் ஒரே கருத்தை விளக்குகின்றன.

யானையுடைய படைக்காண்டல் முன்னினிதே
ஊனைத் தின்று ஊனைப் பெருக்காமை முன்னினிதே
கான்யாற்று அடை கரை ஊரினிது ஆங்கினிதே
மானம் உடையார் மதிப்பு (இனி.நாற்.5)

மானம் படவரின் வாழாமை முன்னினிதே குழவி பிணியின்றி வாழ்தல் இனிதே மானம் அழிந்தான் வாழாமை முன்னினிதே எனப் பல இனியவை வாழ்க்கைக்கு இனிறியமையாதவை இனியவை நாற்பது என்னும் இந்நூலில் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

**12.11.6 திரிகடுகம்**

புறப்பொருள் உணர்த்தும் நூலான திரிகடுகம் என்னும் நூலை எழுதியவர் நல்லாதனார் என்னும் புலவர் ஆவார். திருமால் தொடர்பான மண்ணளந்த புராண நிகழ்ச்சி போன்றவற்றைக் காப்புச் செய்யுளில் குறிப்பதால் இவர் வைணவச் சமயத்தைச் சார்ந்தவர் என்பதை அறிய முடிகின்றது. கடவுள் வாழ்த்துப் பாபோடு இந்நூல் நூற்று ஒரு (101) வெண்பாக்களை உடையது.

சுக்கு, மிளகு, திப்பிலி எனத் திவாகர நிகண்டு திரிகடுகம் என்பதற்கு விளக்கம் கூறும். இம்மூன்று பொருட்களாலும் செய்யப் பெற்ற மருந்து உடல் நலத்தைத் தருவதைப் போன்று மும்மூன்று கருத்துக்களைக் கொண்ட திரிகடுகம் பாக்கள் மனநலத்தைத் தரவல்லவை.

குற்றம் அற்றவர்களாக வாழ்கின்றவர்கள் எப்போதும் குளித்து உண்பர். எந்த நிலையிலும் ஒரு பக்கமாகச் சார்ந்து வஞ்சகமான தீர்ப்பைச் சொல்ல மாட்டார்கள். தோல் வற்றிச் சுருங்கி இளைத்தாலும் தங்களுடைய நற்குணங்களைக் கைவிட மாட்டார்கள்.

> உண்பொழுது நீராடி உண்டாலும் என்பெறினும்
> பால்பற்றிச் சொல்லா விடுதலும் - தோல்வற்றிச்
> சாயினும் சான்றாண்மை குன்றாமை இம்மூன்றும்
> தூஉயம் என்பார் தொழில் (தி.27)

ஒருவன் இளமையில் கற்று, உண்மை, உணர்ந்து வணங்கிப் பெரியோர் நெறி பிறழாமல் வாழ்வது உயர்வைக் கொடுக்கும்.

> முந்தை எழுத்தின் வரவுணர்ந்து பிற்பாடு
> தந்தையும் தாயும் வழிபட்டு வந்த
> ஒழுக்கம் பெருநெறி சேர்தலிம் மூன்றும்
> விழுப்ப நெறிதூரா வாறு (திரி.56)

இவ்வாறு திரிகடுக ஆசிரியர் பல விழுமிய நெறிகளை எல்லாக் காலமும் ஏற்றுக் கொள்ளும் வகையில் கூறியுள்ளார்.

**12.11.7 ஆசாரக்கோவை**

நீதிக் கருத்துக்களாக வழிவழியாகக் கடைபிடிக்கப் பெறும் ஆசாரங்களைத் தொகுத்துக் கூறுவதால் இக்கீழ்க்கணக்கு நூல் ஆசாரக்கோவை என்னும் பெயர் பெற்றது. நூறு (100) பாக்களை

உடைய இந்நூலை எழுதியவர் சைவ வமயத்தைச் சார்ந்த பெருவாயின் முள்ளியார் என்னும் புலவர் ஆவார்.

இந்நூல் வெண்பா யாப்பில் அமைந்து இருந்தாலும் இன்னிசை வெண்பா, நேரிசை வெண்பா, குறள் வெண்பா, ப.்.றொடை வெண்பா என எல்லா வகையிலும் எழுதப் பெற்றிருப்பதை அறியலாம். வழிவழியாகக் கைக்கொள்ளப் பெறும் ஆசாரங்களால் ஏற்படும் விளைவுகள் இந்நூலில் விவரிக்கப் பெறுகின்றன. பல பாக்கள் குறிப்பாக இளையோர் கொள்ள வேண்டிய ஆசாரங்களைக் குறிப்பிடுகின்றன.

அரசர், ஆசிரியர், பெற்ற தாய் தந்தையர், ஈடு இணையற்ற ஆன்றோரைத் தெய்வங்களைத் தொழுவதைப் போல வணங்க வேண்டும்.

அரசன் உவாத்தியான் தாய்தந்தை தம்முன்
நிகரில் குரவர் இவரிவரைத்
தேவரைப் போலத் தொழுதெழுக என்பதே
யாவரும் கண்ட நெறி (ஆசா.16)

மேலும் நல்ல மாணாக்கர் ஆசிரியரிடத்தே எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பதைக் கீழ்க்காணும் பா உரைக்கின்றது. ஆசிரியர் நிற்கும்போது நிற்க வேண்டும். முன்னால் இருக்கும்போது அவர் சொல்லாதவதை எழுந்து போகக் கூடாது. சொல்லும் பாடத்தைச் செவிமடுத்துக் கேட்ட வேண்டும். ஆசிரியர் யாதொன்றும் சொல்லாதிருக்கும் போது எதனையும் வினாவாதிருக்க வேண்டும்.

நின்றக்கால் நிற்க அடக்கத்தால் என்றும்
இருந்தக்கால் ஏவாமை ஏகார் பெருந்தக்கார்
சொல்லிற் செவிகொடுத்துக் கேட்டீக மிட்டும்
வினாவற்க சொல்லொழிந்தக் கால் (ஆசா.74)

நல்ல பல ஆசாரங்கள் சொல்லப்பட்டிருந்தாலும் வருணாசிர தரும அடிப்படையிலும் சொல்லப் பெற்றுள்ளன.

### 12.11.8 பழமொழி நானூறு

சங்க இலக்கியங்கள் புலவர்கள் தங்கள் கருத்துக்களைக் கூறும்போது பழமொழிகளையும் எடுத்தாள்கின்றார்கள். பழமொழிகள் சப்பானியக் குறுங் கவிதைகளை விட நுண்மையானவை. ஒவ்வொரு

பழமொழியையும் அவரவர் பார்வைக்கு ஏற்பப் பொருள் கொள்ளலாம். தோல்காப்பியர் பழமொழியை முதுமொழி எனக் கூறுவதும் நோக்கத்தக்கது.

நுண்மையும் சுருக்கமும் ஒளியுடைமையும்
ஒண்மையும் என்று இவை விளங்கத் தோன்றிக்
குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்
ஏது நுதலிய முதுமொழி என்ப (தொல்.பொருள்)

எனவே பழமொழி நானூறு நாட்டுப்புற இலக்கியக் கூறுகளுள் ஒன்றான பழமொழியைத் தொகுத்த முதல் நூல் என்ற பெருமையைப் பெறுகின்றது. வெண்பாவில் அமைந்த நானூறு (400) பாக்களில் கருத்துக்களைக் கூறியபின் இறுதியில் ஒரு பழமொழி இருக்கும். இவ்வாறு நானூறு பழமொழிகள் இந்நூலில் உள்ளன.

இந்நூலை யாத்தவர் சமண சமயத்தைச் சார்ந்த முன்றுறை அரையனார் என்னும் புலவர் ஆவார். மற்றைய அற இலக்கியங்களில் கூடப் பல செய்திகள் பிற பண்பாட்டில் இருந்து பெறப் பெற்றுள்ளன. ஆனால் பழமொழிகள் எல்லாம் தமிழ்நாட்டிற்கே உரியவை. பழமொழியாக ஒவ்வொன்றும் ஓர் அறத்தை உணர்த்தும்.

அறிவு மிக்க சான்றோரைச் சான்றோர் பெருமக்களாலேயே அறிந்து கொள்ள முடியும். பொது மக்களால் அறிந்து கொள்ள முடியாது என்பதைப் பாம்பறியும் பாம்பின் கால் என்ற பழமொழியால் முன்னுறை அறையனால் விளக்குகின்றார். பாம்பு ஊர்ந்து செல்லும் தன்மையது. மணற்பாங்கான இடங்களில் அது ஊர்ந்திருப்பது மக்கள் கண்ணுக்குத் தெரியும். ஆனால் புல், புதர் போன்றவற்றில் ஊர்ந்த இடம் கண்ணுக்கும் புலப்படாது. புணர்ச்சிக் காலகத்தில் நீண்ட தூரம் ஊர்ந்து தன் பிணை இருக்கும் இடத்தை நோக்கிச் செல்லுமாம் பாம்பு. இந்த நுட்பம் அறிந்தே இன்றும் பாம்பின் கால் பாம்பறியும் என்ற பழமொழி பயன்பாட்டில் உள்ளது.

புலமிக் கவரைப் புலமை தெரிதல்
புலமிக் கவர்த்தே புலனாம் - நலமிக்க
பூம்புனல் ஊர பொதுமக்கட்கு ஆகாதே
பாம்பறியும் பாம்பறியும் கால்

பெரியோரைச் சார்ந்து ஒழுகுவதால் கீழோரும் அவரது பண்புநலன்களைப் பெற்றுச் சிறப்பர். இச்செயல் பூவொடு நாரியைக்கு மாறு என பழமொழி நூலாசிரியர் குறிப்பிடுகின்றார்.

பெரிய குடிப்பிறந் தாரும் தமக்குச்
சிறியார் இனமாய் ஒழுகுதல் - எறியிலை
வேலொடு நேராக்கும் கண்ணாய் அ.ஃதன்றே
பூவோடு நாரியைக்கு மாறு (பழ.88)

பழமொழி நானூற்றில் அன்றாடம் இன்றும் பயன்படுத்தும் பழமொழிகள் பலவற்றைக் காணலாம்.

ஆயிரை இட்டு வரால் வாங்குபவர் (372)
இருதலைக் கொள்ளி என்பார் (141)
இறைத் தோறும் ஊறும் கிணறு (377)
திங்களை நாய் குரைத்தற்று (107)
நாய் காணின் கற்காணாறு (361)

இவ்வாறு பழமொழி நானூறு நாட்டுப்புறவியலின் பெட்டகமாகத் திகழ்ந்து நானூறு பழமொழிகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது.

### 12.11.9 சிறுபஞ்சமூலம்

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றான சிறு பஞ்ச மூலம் அறக்கோட்பாடுகளைக் கூற எழுந்த நூலாகும். மருந்துப் பொருட்களாகக் கருதப்பெறும் கண்டங்கத்தரிவேர், சிறுவழுதுணைவேர், சிறுமல்லிவேர், நெருஞ்சிவேர், பெருநல்லிவேர் நோய் நீக்கவல்லவை ஆகும். இவைபோல் ஒவ்வொரு பாவிலும் வாழ்வுக்குப் பயனளிக்கும் ஐந்து அறக் கருத்துக்கள் அமைந்துள்ளன.

கடவுள் வாழ்த்து, சிதைந்த இருபாட்டு முதலியவற்றோடு நூறு (100) வெண்பாக்களைக் கொண்ட இந்நூலை எழுதியவர் சமண சமயம் சார்ந்த காரியாசான் என்னும் புலவர் ஆவார்.

'கற்றது கைமண் அளவு, கல்லாதது உலகளவு' என்பதற்கு ஏற்ப இவ்வுலகில் எவரும் எல்லாவற்றையும் அறிந்தவர் இல்லை, ஒன்றையும் அறிவானதும் இல்லை. எல்லாக் குணங்களும் இல்லாதவனும்

எவனுமில்லை. எல்லாக் குணங்களும் உள்ளவனும் இல்லை. எல்லா நூல்களையும் கற்றவனும் இல்லை.

ஒருவன் அறிவானும் எல்லாம் யாதொன்றும்
ஒருவன் அறியா தவனும் ஒருவன்
குணனடங்கக் குற்றமில் லானாம் ஒருவன்
கணனடங்கக் கற்றானும் இல் (சிறு.31)

பிற உயிர்களைக் கொல்வது எவ்வளவு பெரிய பாவம். ஓர் உயிரைக் கொன்றவன், கொலைக்கு உடம்பட்டவன், கொலையுண்தன் கறியை விற்பவன், கொல்லப்பட்டதன் ஊனைச் சமைத்தவன், அதனை உண்டவன் என அனைவரும் பாவத்தில் இருந்து தப்பமாட்டார்கள்.

கொன்றான் கொலையை உடன்பட்டான் கோடாது
கொன்றதனைக் கொண்டான் கொழிக்குங்கால் கொன்தனை
அட்டான் இடவுண்டான் ஐவரினும் ஆகுமெனக்
கட்டெறிந்த பாவம் கருது (சிறு.70)

சமண சமயத்தைச் சார்ந்த புலவர் காரியாசான் இயல்பான வாழ்க்கை மானுட நேயம் போற்றவும் பல நல்ல அறநெறிகளைக் கூறுகின்றார்.

### 12.11.10 முதுமொழிக்காஞ்சி

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் புறப்பொருள் பற்றிப் பேசும் நூலுள் முதுமொழிக்காஞ்சி என்னும் இந்நூலும் அடங்கும். குறள் தாழிசையில் அமைந்த இந்நூலை யாத்த புலவர் மதுரைக்கூடலூர் கிழார் என்பவர் ஆவார். தொன்று தொட்டு நிலையாமை பற்றிச் சொல்லப்பெறும் கருத்துக்கள் பற்றிய தொகுப்பு ஆகும் இந்நூல்.

பலர்புகழ் புலவர் பன்னின தெரியும்
உலகியல் பொருள்முடிவு உணரக் கூறின்று (புறப்.)

எனப் புறப்பொருள் வெண்பா மாலை காஞ்சித் திணையில் முதுமொழிக்காஞ்சியை ஒரு துறையாகக் குறிப்பிடுகின்றது. அறம், பொருள், இன்பம் என்ற மூன்றும் தனித்தனியாகப் பகுக்கப் பெறாமல் விரவிப் பாடப்பெற்றுள்ளன.

நூறு ஒற்றையடிப் பாக்களும் பத்துப் பத்தாகப் பிரிக்கப் பெற்றுள்ளன. ஈற்றுச் சொல் அடிப்படையில் சிறந்த பத்து, அறிவுப் பத்து,

வரியாப் பத்து, துவ்வாப் பத்து, அல்ல பத்து, இல்லை பத்து, பொய்ப்பத்து, எளிய பத்து, நல்கூர்ந்த பத்து, தண்டாப்பத்து எனப் பத்துப் பகுப்பும் பெயரிடப் பெற்றுள்ளன.

மொழியியல் நோக்கில் தொடர்களை ஆராய்வதற்கு நல்ல சான்றாக முதுமொழிக்காஞ்சி அமைகின்றது. எல்லாப் பத்துப் பத்துக்களிலும் முதல் தொடர், ஆர்கலி உலகத்து மக்கட்கு எல்லாம் என அமைகின்றது. இத்தொடர் அடுத்து வரும் பத்து அடிகளையும் தழுவும். இன்னும் சொல்லப் போனால் இவ்வடி நூறு அடிகளையும் தழுவும்.

ஆர்கலி உலகத்து மக்கட்கு எல்லாம்

ஓங்கல் வேண்டுவோன் உயர்மொழி தண்டான்
விங்கால் வேண்டுவோன் பல்புகழ் தண்டான்
கற்றல் வேண்டுவோன் வழிபாடு தண்டான்
கற்றல் வேண்டுவோன் தவஞ் செயல் தண்டான்
வாழ்க்கை வேண்டுவோன் சூழ்ச்சி தண்டான்
மிகுதி வேண்டுவோன் வருத்தம் தண்டான்
துன்பம் வேண்டுவோன் இன்பம் தண்டான்
ஏமம் வேண்டுவோன் முறை செயல் தண்டான்
காமம் வேண்டுவோம் குறிப்புச் செயல் தண்டான் (முது.10)

இளமையிற் சிறந்தன்று மெய்பிணி இளமை (முது.1:5) நேராமல் கற்றது கல்வி அன்று (முத.5:6), முறையில் அரசன் நாடு நல் கூர்ந்தவை (முது.9:2) என ஒவ்வோர் அடியிலும் நல்ல கருத்துக்கள் காணப்பெறுகின்றன.

**12.11.11 ஏலாதி**

புறப்பொருள் உணர்த்தும் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாகிய ஏலாதி, கணிமேதாவியார் என்னும் புலவரால் யாக்கப் பெற்றது ஆகும். ஏலாதி என்பது ஏலம், இலவங்கம், நாககேசரம், மிளகு, திப்பிலி, சுக்கு என்ற ஆறு மருந்துப் பொருட்கள் கொண்டு செய்யப் பெற்ற மருந்து,

ஒருவன் எல்லா உயிரிடத்தும் தாயன்பைப் பெற வேண்டுமாயின் புலனடக்கம் வேண்டும். நல்ல குணங்களைப் பெற்றிருத்தல் வேண்டும், ஈகைத் தன்மை பெற்றிருத்தல் வேண்டும்

பொறுமையோடு இருத்தல் வேண்டும். பொய் கூறாது இருத்தல் வேண்டும், புலால் உண்ணாமை வேண்டும்.

நிறையுடைமை நீர்மை யுடைமை கொடையே
பொறையுடைமை பொய்மை புலாற்கண் - மறையுடைமை
வேயன்ன தோளாய் இவையுடையான் பல்லுயிர்க்கும்
தாயன்னன் என்னத் தகும் (ஏலா.6)

வாழ்வதற்கு அடிப்படையானவற்றில் உணவும் ஒன்றாகும். இதனைப் பெற வழியில்லாத கால் அற்றோர், கண்ணிழந்தோர், வாய் பேசாதோர், ஆதரவு அற்றோர் கல்வியறிவில்லாதோர் போன்றோர்க்கு வயிறு நிறைய உணவு அளிப்போர் தேவர்களால் போற்றப் பெறுவர்.

காலில்லார், கண்ணில்லார், நாவில்லார் யாரையும்
பாலில்லார் பற்றிய நூலில்லார் - சாலவும்
ஆடிப் படும் ஊணமைத்தார் இமையவரால்
விழப் படுவார் விரைந்து

இவ்வாறு பல அருமையான மனிதநேயம் போற்றும் வைரக் கருத்துக்களை ஏலாதியில் அளித்துள்ள கணிமேதாவியாரின் இன்னொரு நூல் திணைமாலை நூற்றைம்பது ஆகும்.

## 12.12 அகப்பொருள் நூல்கள்

கார் நாற்பது, ஐந்திணை ஐம்பது, திணைமொழி ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமாலை நூற்றைம்பது, கைந்நிலை ஆகிய நூல்கள் அகப்பொருள் பற்றிய நூல்களாகும்.

### 12.12.1 கார் நாற்பது

நானாற்பது எனக் கூறப்பெறும் இன்னா நாற்பது, இனியவை நாற்பது, களவழி நாற்பது என்பவற்றோடு கார் நாற்பதும் ஒன்றாகும். கார் காலத்து நிகழ்ச்சியை விளக்கும் வெண்பாவில் அமைந்து நூலாகும். இதனை எழுதியவர் மதுரைக் கண்ணங் கூத்தனார் என்னும் புலவர் ஆவார்.

முல்லைக் நிலத்தில் கார்காலத்தில் பிரிந்த தலைவன் வரும் நாளை எண்ணித் தலைவி ஆற்றி இருக்கின்றாள். தலைவன் வருவதாகக் கூறிச் சென்ற நாளும் வந்து விட்டது. பிரிவால் பசலை நோயுற்ற தலைவிக்கு மருந்தாகக் கார்காலக் காட்சிகள் அமைந்துள்ளன. நடனம் ஆடும் மாதரைப் போல் மயில்கள் ஆடுகின்றன. கொன்றை பூத்துக் குலுங்குகின்றது. தலைவன் விரைந்து வருவான் என்பது இதன் உட்பொருளாகும்.

ஆடுமகளின் மஞ்ஞை அணிகொளக்
காடும் கடுக்கை கவின் பெறப் பூத்தன
பாடு வண்டு ஊதும் பருவம் பணைத்தோள்
வாடும் பசலை மருந்து (கார்.)

இயற்கை எழில் வளரும் கார்காலம் பற்றி மதுரைக் கண்ணங்கூத்தனார் கார் நாற்பது என்ற இந்நூலில் கவினுறப் பாடியுள்ளார்.

### 12.12.2 ஐந்திணை ஐம்பது

முல்லை, குறிஞ்சி, மருதம், பாலை, நெய்தல் என்ற ஐவகைத் திணை அடிப்படையில் திணைக்குப் பத்துப் பத்து வெண்பாக்களை உடைதாகையால் இந்நூல் ஐந்திணை ஐம்பது என்னும் பெயர் பெற்றது.

இந்நூலை இயற்றியவர் மாறன் பொறையனார் என்னும் புலவர் ஆவார். இவரின் பாக்கள் இவர் சிறந்த புலவர் என்பதையும் எல்லாச் சமயங்கள் பாலும் ஈடுபாடுள்ளவர் என்பதையும் உணர்த்துகின்றன. தமிழர் தம் அக வாழ்வினை இவர் பாக்கள் சிறப்பாக வெளிப்படுத்துகின்றன.

சங்க இலக்கியமாகிய கலித்தொகையில் எல்லோராலும் நினைத்துப் பார்க்கக் கூடிய அரியதோர் காட்சி, பாலையின் வறண்ட பூமியில் நீர் நிலையில் குறைந்த அளவில் கடந்த நீரை யானைக் கன்று கலக்கி விட்டது. அந்நீரைக் களிறு முதலில் தன் பிடியை அருந்தி மிஞ்சியதைக் குடிக்கின்றது. இக்காட்சியைக் கீழ்க்காணும் அடிகளால் அறியலாம்.

துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்

குறிப்புகள்

பிடியூட்டிப் பின்னுண்ணும் களிறெனவம் உரைத்தனரே
(கலித்.11:8-9)

இக்கருத்தை அப்படியே ஏற்று, களிறு முழுநீரையும் பிடியையும் குடிக்க விட்டுத்தான் குடிப்பது போலப் பாசாங்கு செய்து நீரைக் குடிக்கவில்லையாம். அன்பின் உச்சக்கட்டத்தை இப்பா உணர்த்துவதை அறியலாம்.

சுனைவாய்ச் சிறுநீரை எய்தாதென்று எண்ணிப்
பிணைமான் இனிது உண்ணவேண்டிக் கலைமாதன்
கன்னத்தின் உச்சும் கரமென்பர் காதலர்
உன்னம் படர்ந்த நெறி (ஐந்.ஐம்)

சிறு குருகு என்னும் பறவை அலகால் கொத்தி விடும் என்றஞ்சி வாளை மீன் நீருக்கு அடியில் ஒளியும் என்றொரு காட்சி வருணிக்கப்பட்டுள்ளது.

கோலச் சிறுகுருகின் குத்தஞ்சி ஈர்வாளை
நிலத்துப் புக்கொளிக்கம் ஊரற்கு (ஐந்.ஐம்)

மேற்குறிப்பிட்டவாறு பல அரிய காட்சிகளை விளக்கும் வகையில் மாறன் பொறையனாரின் ஐந்திணை ஐம்பது என்னும் அகப்பாடல் நூல் அமைந்துள்ளது.

**12.12.3 திணைமொழி ஐம்பது**

ஐந்திணை ஐம்பதைப் போன்றே திணைமொழி ஐம்பது என்ற அகப் பொருள் நூலும் ஐந்து திணைகளுக்கும் பத்துப் பத்தாக ஐம்பது வெண்பாக்களை உடையது. இதனை இயற்றியவர் கண்ணன் சேந்தனார் என்னும் புலவர் ஆவார்.

இவ்வகப் பொருள் நூலும் பழந்தமிழர் தம் அக வாழ்வினைச் சிறப்பாக வெளிப்படுத்துகின்றது. மேலும் ஐந்நில இயற்கைக் காட்சிகளும் படிமமாக பதிய வைக்கப் பெறுகின்றன.

நீண்ட நாட்களாகத் தலைவன் தலைவியோடு களவு வாழ்க்கையே மேற்கொள்கிறான். அச்சம் தரும் இரவில் வருவதை நிறுத்தித் தலைவியைத் திருமணம் செய்து கொள்ளுமாறு வேண்டுகின்றாள். மேலும் வழூரில் அலர் ஏற்பட்டுள்ளதாம். செழிப்பு மிக்க தலைவன் மலைவீழ் அருவியின் ஓசை பல்வேறு இசைக் கருவிகளின் இன்னிசைக் கலந்து வருவது போல் உள்ளதாம்.

யாழும் குழலும் முழவும் இயைந்தென
வீழும் அருவி விறல்மலை நன்னாட
மாலைமான் நோக்கியும் ஆற்றாள் இரவரின்
ஊரறி கௌவை தரும் (திணை.ஐம்.24)

இவ்வாறு பல அரிய சங்க இலக்கியச் செய்திகளை உள்வாங்கிக் கண்ணன் சேந்தனார் இனிய திணைமாலை ஐம்பது பாக்களைத் தந்துள்ளார்.

### 12.12.4 ஐந்திணை எழுபது

திணைக்குப் பதினான்கு (14) பாக்கள் வீதம் மொத்தம் ஐந்து திணைக்கும் எழுபது வெண்பாக்கள் இருக்க வேண்டும். நான்கு பாக்கள் காணப் பெறவில்லை. தற்போது கிடைப்பவை அறுபத்தாறு (66) பாக்களே.

அக்காலத்துத் தலைவன் தலைவி ஒருவர் மேல் ஒருவர் இணையற்ற அன்பு வைத்திருந்ததோடு நம்பிக்கையம் வைத்திருந்தனர். சான்றோரின் நட்பு நன்மை பயப்பது போலத் தலைவனின் நடப்பும் நன்மை தரும் எனக் குறிப்பதைக் கீழ்க்காணும் அகப்பாவால் அறியலாம்.

சான்றவர் கேண்மை சிதைவின்றாய் ஊன்றி
வலியாகிப் பின்னும் பயக்கும் மெலிவில்
கயந்திகழ் சோலைமலை நாடன் கேண்மை
நயம் திகழும் என்னும் என்னெஞ்சு (ஐந்.எழு)

எருமை ஒன்று இனிதே நிழலில் ஓய்வெடுக்கும் காட்சி படிமமாகத் தரப் பெற்றுள்ளது.

உழலை முருக்கிய செந்நோக்கு எருமை
பழைமை படிந்து செய்மாந்தி – நிழல்வதியும்
தண்டுறை ஊரன் (ஐந்.எழு)

### 12.12.5 திணைமாலை நூற்றைம்புத

ஐந்திணைகளாகிய குறிஞ்சி, நெய்தல், பாலை, முல்லை, மருதம் என்ற ஒவ்வொரு திணைக்கும் முப்பது முப்பது வெண்பாக்களாக நூற்றைம்பது பாக்களைக் கொண்டது. திணைமாலை நூற்றைம்பது என்னும் இவ்வகை இலக்கியம் ஆகும்.

ஆனால் நூற்று ஐம்பத்து மூன்று பாக்கள் காணப்படுகின்றன. இதனை இயற்றிய புலவரும் ஏலாதியை இயற்றிய கணிமேதாவியார் என்பவரும் ஒருவரே.

கணிமேதாவியார் பழந்தமிழ்ப் பாக்களில் நன்கு தோய்ந்து பாக்களை யாத்துள்ளார். ஒவ்வொரு நிலத்திற்கும் கடவுளர் உண்டு. மருத நிலக் கடவுள் இந்திரன் ஆகும். மருதப் பாடல்களில் இக்குறிப்பு வருவதில்லை. ஆனால் இந்நூலில் (திணை.நூற்.14) ஒரிடத்தில் இந்திரன் பெயர் குறிக்கப் பெறுகின்றது.

தலைவன் பரத்தையிடம் சென்று திரும்பி வருவதைத் தலைவனின் ஊரில் எருமை ஒன்று குளத்தில் கிடந்து விட்டுக் கன்றை நினைத்து வருவதை உள்ளுறையாகக் கீழ்க்காணும் வெண்பாவில் காணலாம்.

இருணடந் தன்ன இருங்கோட்டு எருமை
மருணடைந்த பாப்பழனம் மாந்திப் - பொருணடந்த
கற்பெருக் கோட்டாற் கனைத்துத்தம் கன்றுள்ளி
நெற்போர்வு குடி வரும்.

மேற்குறிப்பிட்டவாறு சங்க இலக்கிய மரபைப் பின்பற்றி திணைமாலை நூற்றைம்பது பாக்கள் சிறப்பாக எழுதப் பெற்றுள்ளன.

### 12.12.6 கைந்நிலை

கைந்நிலை என்னும் இவ்வகப் பொருள் நூல் திணைக்கும் பன்னிரண்டு பன்னிரண்டாக அறுபது (60) வெண்பாக்களைப் பெற்றுள்ளது. புல்லங்காடனார் என்பவர் இதனை இயற்றிய புலவர் ஆவார். பல பாடல்கள் சிதைந்து காணப் பெறுகின்றன. இருப்பினும் ஐந்நிலங்கள் பற்றிய காட்சிகளைச் சொல்லோவியமாகக் கூறியுள்ளார்.

## 12.13 புறப்பொருள் நூல்

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் புறப்பொருள் பற்றிய ஒரே நூல் களவழி நாற்பது மட்டும் ஆகும்.

### 12.13.1 களவழி நாற்பது

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் புறப்பொருளை விளக்கும் ஒரே நூல் களவழி நாற்பது ஆகும். நாற்பது (40) வெண்பாக்கள் இந்நூலில் காணப்பெறுகின்றன. இதனைப் பாடியவர் பொய்கையார் என்னும் புலவர் ஆவார்.

செங்கணான் என்னும் சோழ மன்னனுக்கும் கணைக்கால் இரும்பொறை என்னும் சேர மன்னனுக்கும் கழுமலம் என்ற இடத்தில் நடைபெற்ற போரில் பின்னவன் தோற்றான். சோழ மன்னன் அவனைச் சிறைபிடித்து வந்தான். ஏர்க்களம் பாடுவது மட்டும் அன்றிப் போர்க்களம் பாடுவதும் களவழி என்பதைத் தொல்காப்பிய நூற்பா வழி அறியலாம்.

ஏரோர் களவழி அன்றிக் களவழிந்து
தேரோர் தோற்றிய வென்றியும்… (தொல்.பொருள்.78:3-4)

இவ்வகையில் பொய்கையார் அப்போர்க்களத்தைப் பாடி சோழனை மகிழ்வித்துச் சேரமான் கணைக்கால் இரும்பொறையை மீட்டதாக அறிய முடிகின்றது. போர்க்களக் காட்சிகளை அப்படியே மனதில் பதியுமாறு பொய்கையார் காட்சிப்படுத்தியுள்ளார்.

போர்க்களத்தில் அம்பாலும், வேலாலும் வீழ்த்தப்பெற்ற வீரர்களின் உடல்களில் இருந்த குருதி வெளிவருகின்றது. உதிரத்தை உண்ட காகங்கள் தம் கருமை நிறம் இழந்து செம்போத்தின் நிறத்தைப் பெற்று சிச்சலிக் குருவி போன்ற வாயை உடையவாயின.

தெரிகணை எ∴கம் திறந்தவாய் எல்லாம்
குருதி படிந்த காகம் - உருவிழந்து
குக்கிற் புறந்த சிரல்வாய் செங்கண்மால்
தப்பியார் அட்ட களத்து (கள.78:3-4)

## 12.14 அற இலக்கியங்கள் வழி அறியலாகும் செய்திகள்

சங்க இலக்கியங்களோடு அடுத்து வைத்து போற்றப் பெறும் சங்கம் மருவிய கால இலக்கியங்கள் மூன்று நிலையாகப் பகுக்கப் பெறுகின்றன. பதினொன்று (11) அறம்பாடுபவையாகவும் ஆறு (6) அகம் பாடுபவையாகும் ஒன்று (1) புறம் பாடுவதாகவும் பகுக்கப் பெறுகின்றன.

பதினெட்டு நூல்களில் ஏழு நூல்கள் அறத்தை முழுமையாகக் கொண்டு அமையவில்லை. இருந்தபோதிலும் பெரும்பான்மை நோக்கிப் பதினெட்டு நூல்களும் அற இலக்கியங்கள் எனக் கூறப் பெறுகின்றன.சங்க காலத்தில் அதாவது இந்நூல்களுக்கு முன்னுள்ள வாழ்வில் கண்ட குறைபாடுகள் குறிப்பாக கள்ளுண்டல், புலால் உண்ணல், கூடா ஒழுக்கம் போன்றவற்றைக் களைய இவை எழுந்தனவா? என்ற ஐயம் எழுகின்றது. இக்காலக்கட்டம் தமிழக வரலாற்றில் களப்பிரர் காலம் எனக் குறிக்கப் பெறுகின்றது. இக்காலக் கட்டத்தில் பௌத்த, சமண சமயங்கள் தமிழகத்தில் பரவி வளர்கின்றன. தனிமனித சமுதாய ஒழுக்கங்கள் செம்மையாக அமைய இக்கடவுள் மறுப்புச் சமயங்கள் பெரிதும் பாடுபட்டன.பதினெண்கீழ்க்கணக்கில் புறம் பாடும் புலவர் பெருமக்கள் சமண சமயத்தவர்களாக இருந்து இருக்கின்றார்கள் அல்லது ஈடுபாடு கொண்டு இருக்கின்றார்கள். இதனால்தான் மனித நேயத்தை இயற்கையின் சிறப்பை விளக்கும் வகையில் இந்நூல்கள் அமைந்து இருக்கின்றன. எனவே சங்க இலக்கியங்களைப் போன்று பதினெட்டு சங்கம் மருவிய கால நூல்களும் தமிழ்மொழிக்கு அரிய அணிகலன்கள் ஆகும்.

## 12.15 பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் அட்டவணை



| வ.எண் | இலக்கியம் | ஆசிரியர் | பாக்கள் | யாப்பு | வகை |
|---|---|---|---|---|---|
| 1. | நாலடியார் | சமணப் புலவர்கள் | 400 | வெண்பா | அறம் |
| 2. | நான்மணிக்கடிகை | விளம்பிநாகனார் | 106 | வெண்பா | அறம் |
| 3. | இன்னாநாற்பது | கபிலர் | 40 | வெண்பா | அறம் |
| 4. | இனியவை நாற்பது | பூதஞ் சேந்தனார் | 40 | வெண்பா | அறம் |
| 5. | கார் நாற்பது | குண்ணங் கூத்தனார் | 40 | வெண்பா | அகம் |
| 6. | களவழி நாற்பது | பொய்கையார் | 40 | வெண்பா | புறம் |
| 7. | ஐந்திணை ஐம்பது | மாறன் பொறையனார் | 50 | வெண்பா | அகம் |
| 8. | திணைமொழி ஐம்பது | கண்ணன் சேந்தனார் | 50 | வெண்பா | அகம் |
| 9. | ஐந்திணை எழுபது | மூவாதியார் | 70 | வெண்பா | அகம் |
| 10. | திணைமாலை நூற்றைம்பது | கணிமேதாவியார் | 150(153) | வெண்பா | அகம் |
| 11. | திருக்குறள் | திருவள்ளுவர் | 1330 | குறள் வெண்பா | அகம் |
| 12. | திரிகடுகம் | நல்லாதனார் | 101 | வெண்பா | அறம் |
| 13. | ஆசாரக்கோவை | பெருவாயின் முள்ளியார் | 101 | வெண்பா | அறம் |
| 14 | பழமொழி நானூறு | மூன்றுறை அரையனார் | 101 | வெண்பா | அறம் |
| 15. | சிறுபஞ்சமூலம் | காரியாசான் | 100 | வெண்பா | அறம் |
| 16. | முதுமொழிக்காஞ்சி | கூடலூர் கிழார் | 100 | குறள் தாழிசை | அறம் |
| 17. | ஏலாதி | கணிமேதாவியார் | 80 | வெண்பா | அறம் |
| 18. | கைந்நிலை | புல்லங்காடனார் | 60 | வெண்பா | அகம் |

## 12.16 தொகுத்துக் காண்போம்

- பதினெண்கீழ்கணக்கு நூல்கள் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.
- அவற்றுள் அற இலக்கியங்கள் போதிக்கும் அறங்களைப் பற்றி அறிந்து கொண்டீர்கள்.
- சங்கம் மருவிய காலத்தில் மக்களின் அகவாழ்வைப் பற்றிப் புரிந்து கொண்டீர்கள்.
- சங்கம் மருவிய காலத்தில் மக்களின் புறவாழ்வைப் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்.

## 12.17 சோதித்தறியும் வினாக்கள்

1. பதினெண்கீழ்க்கணக்கு என்பவை யாவை?

   …………………………………………………………

2. அறநூல்கள் எத்தனை வகைப்படும்? அவை யாவை?

   ……………………………………………………

3. அகநூல்கள் எத்தனை?

   ……………………………………………

4. புறநூல்கள் பற்றி எழுதுக

   …………………………………………

## 12.18 பயிற்சி வினா

1. அறநூல்களின் வழி அறியலாகும் வாழ்வியல் விழுமியங்களைத் தொகுத்துரைக்க
2. சங்க மருவிய காலத்தில் மக்களின் அகவாழ்வைப் பற்றி விளக்குக
3. புறநூலான களவழி நாற்பது பற்றிய செய்திகளை விவரி
4. புறநூல் ஒன்று மட்டும் இடம்பெற்றிருப்பதற்கான காரணங்களை ஆய்வு செய்து விளக்குக.

## 12.19 மேலும் படித்தறிக

முனைவர் ச.சுபாஷ்சந்திரபோஸ், தமிழ் இலக்கிய வரலாறு, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை – 600 014, முதற்பதிப்பு: ஜூலை 2002.

# கூறு 13

## ஐம்பெருங்காப்பியங்கள் - பிற்காலக் காப்பியங்கள் - கம்பராமாயணம் - பெரியபுராணம்

13.3.3.4 சிந்தாமணி தோன்றிய கதை

13.3.3.5 சீவக சிந்தாமணியின் உள்ளடக்கம்

13.3.3.6 சிந்தாமணியின் மரபுக் குறிப்பு

13.3.4 வளையாபதி

13.3.4.1 வளையாபதியின் உள்ளடக்கம்

13.3.4.2 வளையாபதியின் மரபுக் குறிப்பு

13.3.5 குண்டலகேசி

13.3.5.1 பெயர்க்காரணம்

13.3.5.2 குண்டலகேசியின் உள்ளடக்கம்

13.3.5.3 குண்டலகேசியின் மரபுக் குறிப்பு

13.4.1 பிற்காலக் காப்பியங்கள்

13.4.1.1 கம்பராமாயணம்

13.4.1.1 கம்பராமாயணம் ஆசிரியர் குறிப்பு

13.4.1.2 நூற்குறிப்பு

13.4.1.3 கம்பராமாயணத்தின் பழமைச் சிறப்பு

13.4.1.4 தமிழ் மரபைப் போற்றுதல்

13.4.1.5 கம்பரின் புதிய படைப்பு

13.4.1.6 கம்பராமாயணத்தில் இயற்கைக் காட்சிகள்

13.4.1.7 கம்பரின் கற்பனை வளம்

13.4.1.8 கம்பரின் சொல்லோவியம்

13.4.1.9 கம்பராமாயணத்தில் ஓசைச் சிறப்பு

13.4.1.2 பெரியபுராணம்

13.4.2.1 நூற்குறிப்பு

13.4.2.2 காப்பியச் சுருக்கம்

13.4.2.3 காப்பியத்தில் சில பகுதிகள்

13.5 தொகுத்துக் காண்போம்

13.6 சோதித்தறியும் வினாக்கள்

13.7 பயிற்சி வினா

13.8 மேலும் படித்தறிக

## 13.1 அறிமுகம்

சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி ஆகியவை ஐம்பெருங்காப்பியங்கள் என அழைக்கப்படுகின்றன. இவை பாரதத்தாய்க்கு அணிகலண்கள் போன்று அமைகின்றன. இவற்றுள் சிலப்பதிகாரமும் மணிமேகலையும் இரட்டைக் காப்பியங்கள் என அழைக்கப்படும். இசை சமயம் சார்ந்த இலக்கியமாகும். பெருங்காப்பியங்களுக்குரிய பண்புகளான அறம், பொருள், இன்பம், வீடுபேறு ஆகியவற்றை இக்காப்பியங்கள் உணர்த்துகிறது. சிலப்பதிகாரம் குடிமக்கள் காப்பியம் என்றும், மணிமேகலை பசிப்பிணி போக்கும் அறக்காப்பியம் என்றும், சீவகசிந்தாமணி காமச்சுவைக் காப்பியம் எனவும் வழங்கப்படுகின்றன. காப்பியகாலத்தில் மக்களின் வாழ்வியல் பற்றியும், சமய நிலை பற்றியும், அறக்கருத்துக்கள் பற்றியும் அறிமுகப்படுத்தும் வகையில் இப்பாடப்பகுதி அமைந்துள்ளது.

## 13.2 குறிக்கோள்கள்:

- ஐம்பெருங்காப்பியங்கள் பற்றி அறிந்து கொள்வீர்கள்
- பிற்காலக் காப்பியங்களான் கம்பராமாயணம், பெரியபுராணம் பற்றி அறிந்து கொள்வீர்கள்

## 13.3 ஐம்பெருங்காப்பியங்கள்

சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி ஆகியவை ஐம்பெருங்காப்பியங்கள் ஆகும்.

### 13.3.1 சிலப்பதிகாரம்

#### 13.3.1.1 சிலப்பதிகாரத்தின் உருவம்

சிலப்பதிகாரத்தின் ஆசிரியர் இளங்கோவடிகள். இவரின் காலம் கி.பி.2ஆம் நூற்றாண்டு. சிலப்பதிகாரம் 5001 அடிகள் கொண்டது. காண்டங்கள்: 1. புகார்க்காண்டம் - 10 காதைகள், 2. மதுரைக்காண்டம் - 13 காதைகள், 3. வஞ்சிக்காண்டம் - 7 காதைகள், பாவகை - நிலைமண்டில ஆசிரியப்பா, சமயம் - சமணம், உரைகள் - 1.அரும்பத உரையாசிரியர் உரை, 2. அடியார்க்கு நல்லார் உரை.

#### 13.3.1.2 சிலம்பின் உள்ளடக்கம்

சிலம்பில் மூன்று முப்பெரும் உண்மைகள் காணப்படுகின்றன.

அரசியல் பிழைத்தோர்க்கு அறம்கூற்று ஆவதூஉம்
உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்தலும்
ஊழ்வினை உருத்துவந்து ஊட்டும் என்பதூஉம்

என்னும் பகுதி எடுத்துரைக்கும்.

**13.3.1.3 சிலம்பின் சிறப்புகள்**

மூன்று நாடுகள் - சோழநாடு, பாண்டிய நாடு, சேரநாடு

மூன்று தலைநகரங்கள் - புகார், மதுரை, வஞ்சி

மூன்று முக்கிய கதை மாந்தர் - கோவலன், கண்ணகி, மாதவி

முத்தமிழ்க் காப்பியம் - இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ்

முச்செய்யுள் வடிவம் - மரபுச் செய்யுள் வடிவம், உரைநடை வடிவம், நாட்டுப்புறவடிவம்

மூன்று உறுதிப்பொருட்கள் - அறம், பொருள், இன்பம்

**13.3.1.4 சிலப்பதிகாரத்தின் பல்வேறு பெயர்களும் பெயர்க்காரணங்களும்**

- சிலப்பதிகாரம் - கண்ணகி காலில் அணிந்திருந்த சிலம்பினை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டதால்
- தமிழ் முதல் காப்பியம் - தமிழில் முதன்முதலாக நெடும்தொடர் வடிவில், நீண்ட கதையினைக் கூறியதால்
- உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் - சிலப்பதிகாரச் செய்யுளின் இடையே உரைநடைப் பகுதியும் கூறப்பட்டுள்ளதால்
- முத்தமிழ்க் காப்பியம் - இயல், இசை, நாடகம் என்னும் மூன்று தமிழ்க் கூறுகளும் நூலுள் காணப்படுவதால்
- முதன்மைக் காப்பியம் - ஐம்பெருங்காப்பியம், ஐஞ்சிறுங்காப்பியங்கள், தமிழின் பிற காப்பியங்கள், பிற நாட்டார் காப்பியங்கள் அனைத்திலும் முதன்மைத்தன்மை வாய்ந்திருப்பதால்
- பத்தினிக் காப்பியம் - கண்ணகியாம் கற்பின் கனலியைப் பற்றிப் பாடுவதால்

- நாடகக் காப்பியம் - காப்பியம் நாடகப் பாங்கிற்கு உரிய உத்திகளைக் கொண்டிருப்பதால்
- குடிமக்கள் காப்பியம் (தெ.பொ.மீ) - அரசனையோ, தெய்வத்தையோ கதையின் தலைமாந்தர்களாகக் கொள்ளாமல் வணிகக்குடி மக்களாகிய கண்ணகியையும் கோவலனையும் தலைமை மாந்தர்களாகக் கொண்டிருப்பதால்
- புதுமைக் காப்பியம் - ஆண்களுக்கு மட்டுமே உரியதாகக் கருதப்பட்ட நடுகல் வழிபாடு பெண்ணிற்கும் உரியதாக்கிப் பத்தினிக் கோட்டத்தையே எழுப்பி விழாச் சிறப்புச் செய்ததைக் கூறியுள்ளதால்
- பொதுமைக் காப்பியம், ஒற்றுமைக் காப்பியம், ஒருமைப்பாட்டுக் காப்பியம், தமிழ்த்தேசியக் காப்பியம், மூவேந்தர் காப்பியம் - சோழ நாடு (புகார்க்காண்டம்), பாண்டிய நாடு (மதுரைக் காண்டம்), சேரநாடு (வஞ்சிக் காண்டம்) ஆகிய மூன்று நாடுகளையும் மூவேந்தர்களையும் சேரரான இளங்கோவடிகள் ஏற்றத்தாழ்வின்றிப் பொதுமையாக ஒற்றுமைப்படுத்திக் கூறியுள்ளதால்
- வரலாற்றுக் காப்பியம் - தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன், கரிகாற் சோழன், பாண்டியன் நெடுஞ்செழியன், சேரன் செங்குட்டுவன், இலங்கை மன்னன் கயவாகு, வெற்றிவேற் செழியர் முதலான பல மன்னர்களைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகள் நிரம்பியுள்ளதால்
- போராட்டக் காப்பியம் - களவுக்குற்றம் சாட்டப்பட்ட தன் கணவன் மீதான நீதியை நிலைநாட்டத் தன்னந்தனியளான சோழ நாட்டுக் கண்ணகி, பாண்டி நாட்டு மன்னனையே எதிர்த்து வழக்குரைத்ததால்
- புரட்சிக் காப்பயிம் - (1) கணிகையர் குலத்திலே பிறந்திருந்தும் 'ஒருவனுக்கு ஒருத்தி' என வாழ்வேன் என கணிகையர் குலத்தாருக்கு எதிராக மாதவி போராடிப்

புரட்சி செய்து வெற்றி கண்டதால், (2) கணிகையர் குலமங்கை மாதவி தன் மகள் மணிமேகலையைத் துறவு பூணச் செய்ததால்

- சிலப்பதிகாரம் (உ.வே.சா) - 'காப்பியம் என்றால் இதுதான்' என்று கூறக் கூடிய அனைத்துச் சிறப்புகளையும் சிலப்பதிகாரம் பெற்றுத் தலைமைத் தன்மை வாய்ந்திருப்பதால்

**13.3.1.5 சிலம்பில் நாட்டுப்புற இலக்கியச் சாயல்**

ஆற்றுவரி, ஊசல் வரி, கந்துக வரி, அம்மானை வரி, கானல் வரி, ஆய்ச்சியர் குரவை, குன்றக் குரவை முதலான பகுதிகளில் நாட்டுப்புறப் பாடல் வடிவங்கள் சிலப்பதிகாரத்தில் காணப்படுகின்றன.

ஒரு பொருள் மேல் மூன்றடுக்கிப் பாடப்படுவது நாட்டுப்புறப் பாடல்களில் இயல்பாகக் காணப்படும் வடிவம் ஆகும். இப்பண்பை ஆய்ச்சியர் குரவையில் கண்ணன் குழலூதும் நிகழ்வைக் கூறும் பொழுது இளங்கோவடிகள் அமைத்துள்ளார். இதனை,

கன்று குணிலாக் கனிஉதிர்ந்த மாயவன்
இன்றுநம் ஆனுள் வருமேல் அவன்வாயில்
கொற்றையம் தீங்குழல் கேளாமோ தோழீ!
பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாதவன்
ஈங்குநம் ஆனுள் வருமேல் அவன்வாயில்
ஆம்பலம் தீங்குழல் கேளாமோ தோழீ!
கொல்லைஅம் சாரல் குருந்துஒசித்த மாயவன்
எல்லைநம் ஆனுள் வருமேல் அவன்வாயில்
முல்லைஅம் தீங்குழல் கேளாமோ தோழீ!

ஏன்னும் பகுதியின் மூலம் உணரலாம்.

**13.3.1.6 சிலம்பில் சங்க இலக்கியச் சாயல்**

சங்ககாலத்திற்கு அடுத்த சங்கம் மருவிய காலத்தில் எழுந்த நூலாதலின் சிலப்பதிகாரத்தில் சங்க இலக்கியச் சாயல் காண இயலுகின்றது.

**ஐந்திணை அமைப்பு முறை**

குறிஞ்சித்திணை – குன்றக்குரவையில், முல்லைத்திணை – ஆய்ச்சியர் குரவையில், மருதத்திணை – நாடுகாண் காதையில்,

நெய்தல் திணை – கானல் வரியில், பாலைத் திணை – வேட்டுவ வரியில் ஐந்திணை அமைப்பு முறை காணப்படுகிறது.

போரில் வீரப்புண் பட்டு இறந்த வீரர்களுக்கு நடுகல் நடும் வழக்கம் பண்டைக் காலத்து மரபு. இதனை,

“காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்
சீர்த்தரு மரபின் பெரும்படை வாழ்த்தல் என்று
இருமூன்று மரபின் கல்லொடு புணர

என்று தொல்காப்பியம் (புறத்திணை:60) இலக்கணம் வகுத்துள்ளது.

அதன் வழியில் சங்ககாலத்திலும் நடுகல் நடும் வழக்கம் இருந்தது.

நடுகல்லில் வீரனின் பெயர் பொறித்த பான்மையை,

……………………………..பெயர் பொறித்து
இனி நட்டனரே கல்லும்”

என்று புறநானூறு பகர்கின்றது.

இறந்த வீரனுக்கு நடுகல் நட்டுப் பெயர் பொறித்த பின் அவனது பீடும் பெருமையும் எழுதினர். நாளடைவில் கோயில் எடுப்பதும் வழக்கத்தில் வந்தது. இந்தக் கோயிலுக்கு வீரசாலை எனப் பெயரிட்டனர். வீரசாலைக்குப் பாணர்களைக் கொணர்வித்து மடிந்த வீரனின் புகழைப் பாடுவித்தனர். இத்தகைய நினைவு நாட்களில் வீரசாலைக்குப் போகும் வழி (அதர்)யில் மயிற்பீலி கட்டி அலங்கரித்தனர். இதனை,

ஆடவர் பெயரும் பீடுமெழுதி அதர்தொறும்
பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்

என்று அகநானூறு வெளிப்படுத்துகின்றது.

இளங்கோவடிகளும் இதே மரபுகளை மாறாமல் கடைப்பிடிக்கின்றார். வஞ்சிக் காண்டத்தில் குன்றக்குரவை நீங்கலாக ஆறு காதைகள் காட்சி, கல்கோள், நீர்ப்படை, நடுகல் வாழ்த்து, வரந்தருதல் என அமைந்திருக்கிறது. இது சங்க இலக்கியச் சாயலை சிலப்பதிகாரம் அடியொற்றுவதைக் காட்டுகிறது.

சங்ககாலத்திற்கும் பலபடி மேலே இளங்கோவடிகள் போய், பெண்ணின் பெருமைக்குப் பெருமை சேர்க்கின்றார்.

குறிப்புகள்

| **சங்க காலத்தில் நடுகல்** | **சிலம்பில் நடுகல்** |
|---|---|
| 1. போரில் வீர மரணம் அடைந்த ஆண்களுக்கு மட்டுமே நடுகல் நடப்படும் | போர் நிகழ்வு தழுவாமல் பெண்ணாகிய கண்ணகிக்கு நடுகல் நடப்பட்டது |
| 2. நடுகல்லில் வீரனின் பெயரும் பீடும் எழுதப்படும் | குண்ணகிக்கு நடுகல் நடப்பட்டதோடு, கண்ணகிக்காக 'சிலப்பதிகாரம்' என்னும் காப்பியத்தையே இளங்கோவடிகள் எழுதியுள்ளார் |
| 3. நடுகல் நடப்படும் பகுதியில் சென்று சிறந்த கல்லைக் கண்டு, தேர்ந்து எடுத்து வந்தனர். (இதனையே காட்சி, கல்கோள் என்று குறித்தனர்) | கண்ணகி சிலைக்காக இமயமலையில் இருந்து கல் எடுத்து வரப்பட்டது. |
| 4. வீரர்க்கு எனத் தேர்ந்து எடுக்கப்பட்ட நடுகல்லை உள்ளூர் மக்களே சுமந்து வருவர். | கண்ணகிச் சிலைக்கு எனத் தேர்ந்தெடுக்கப்பட்ட நடுகல்லை கனகன், விசயன் என்னும் மன்னர்கள் வடநாட்டில் இருந்து தம் தலையில் சுமந்து வரச் செய்தான் சேரன் செங்குட்டுவன். |
| 5. நடுகல் நட்டபின் சிறிய அளவில் ஒரு நினைவிடம் மட்டுமே அமைக்கப்படும் | கண்ணகியின் உருவச் சிலையை அமைத்து, கண்ணகிக்காகக் கோட்டம் (கோவில்) அமைக்கப்பட்டுள்ளது. |

### 13.3.1.7 முத்தமிழ்க் காப்பியம்

இயல், இசை, நாடகம் ஆகிய மூன்றனையும் 'முத்தமிழ்' எனக் குறிப்பர். சிலம்பில் முத்தமிழின் மூன்று வடிவங்களும் முறைமையில் அமைந்துள்ளன.

**(அ) இயற்றமிழ்**

இயல் தமிழ் - இயற்றமிழ். இயல்பாகக் கூறப்படுவது இயற்றமிழ் எனப்படும். சிலப்பதிகாரத்தில் பதிகத்தை அடுத்து அமைந்துள்ள 'உரைபெறு கட்டுரை' என்னும் பகுதி இயற்றமிழ்ப் பகுதியாகும். உரைபெறு கட்டுரையில் வெற்றிவேற்செழியன், கொங்கிளங்கோசர், கயவாகு மன்னன், சோழன் பெருங்கிள்ளி ஆகியோர் நான்கு பத்திகளில் குறிப்பிடப்படுகின்றனர்.

அதுகேட்டுச் சோழன் பெருங்கிள்ளி கோழியகத்து எத்திறத்தானம் வரந்தரும் இவள் ஓர் பத்தினிக் கடவுளாகும் என நங்கைக்குப் பத்தினிக் கோட்டமும் சமைத்து நித்தல் விழாவணி நிகழ்வித்தோளே என்பது அவற்றுள் ஒரு இயற்றமிழ்ப் பகுதி.

**(ஆ) இசைத்தமிழ்**

தமிழரின் இசைச் சிறப்பினையம் கூத்தின் பெருமையினையும் சிலப்பதிகாரம் எடுத்துரைக்கின்றது.

மங்கல வாழ்த்துப் பாடல் அரங்கேற்று காதை, கானல் வரி, வேனிற்காதை, வேட்டுவவரி, ஆய்ச்சியர் குரவை, வாழ்த்துக் காதை ஆகியன அக்காலத்து இசைக்கலையின் பெருமைகளை வெளிப்படுத்துகின்றன.

இசைக் கருவிகள் ஒன்றோடொன்று இயைந்து இசைக்கப்பட்டன. இதனை,

> குழல்வழி நின்றது யாழே யாழ் வழித்
> தண்ணுமை நின்றது தகவே தண்ணுமைப்
> பின்வழி நின்றது முழவே முழவோடு
> கூடிநின்று இசைத்தது ஆமந்திரிகை

என்னும் பகுதி மூலம் அரங்கேற்றுக்காதை அறிவிக்கின்றது. குழல் யாழ் தண்ணுமை முழவு ஆமந்திரிகை என்னும் இசைக்கருவிகள் ஒன்றன் வழி ஒன்று நேர்ப்பட்டு நின்றதை இதன்மூலம் உணரலாம்.

கடலாடு காதையில் மாதவி ஆடிய பதினொரு வாகை ஆடல்கள் விவரிக்கப்படுகின்றன.

**(இ) நாடகத்தமிழ்**

நாடகப் பாங்கிற்கு உரிய பல உத்திகளும் அணிகளும் சிலப்பதிகாரக் கதையை மிகச் செறிவாகவும் ஈரக்கும் வண்ணமும் நடத்திச் செல்கின்றன.

நாடகத்தின் தொடக்கத்தில் இறைவனைப் போற்றிப் பாடப்படுவது வழக்கம். சிலம்பின் தொடக்கத்திலும் திங்கள், ஞாயிறு, மாமழை, பூம்புகார் ஆகியவற்றைப் போற்றும் பாடல்கள் நூலின் தோற்றுவாயாக அமைந்துள்ளன.

களம், காட்சி, சூழல் ஆகியவற்றை அமைத்து நாடகத்திற்கு உரிய தோற்றத்தை இளங்கோவடிகள் ஏற்படுத்தி விடுகின்றார்.

அரங்கேற்றுக் காதையில் ஒருமுக எழினி, பொருமுக எழினி, கரந்து வரல் எழினி ஆகிய மூவகைத் திரைகளை விவரிக்கின்றார்.

1) ஒரு பக்கத்தில் இருந்து மற்றொரு பக்கத்திற்குச் செல்லும் திரை ஒருமுக எழினி எனப்படும்.

2) இரண்டு ஓரங்களிலும் இருந்தும் மேடையின் நடுப்பகுதிக்கு வந்து மூடுமாறு அமைக்கப்படும் திரை பொருமுக எழினி.

3) மேலே இருந்து கீழே மெல்ல மெல்ல இறங்கி வந்து நாடக மேடையை மூடுவது கரந்து வரல் எழினி.

இம்மூன்று வகை எழினிகளைப் பற்றிப் படிக்கும்பொழுது நாடக அரங்கில் அமர்ந்திருப்பது போன்ற உணர்வினை இளங்கோவடிகள் ஏற்படுத்துகிறார்.

வழக்குரை காதையில் கண்ணகி வழக்கு உரைப்பதைப் படிப்பவர்கள் நேரே கண்ணகி கண்ணீர் விட்டு நீதி கேட்டு அழுவதைக் காண்பது போன்ற தோற்றம் உண்டாகின்றது.

ஒரு நாடகத்தில் 1.தோற்றுவாய், 2.கதைப்பின்னல், 3.கதைச்சிக்கல், 4.கதைத்திருப்பம், 5.கதையின் இரங்குமுகம், 6.கதை முடிவு என்னும் ஆறு கூறுகள் இருக்கவேண்டும். இவை ஆறும் அருமையாக அமைந்து சிலம்பின் நாடகப் பாங்கிற்கு உரமூட்டுகின்றன.

சிலம்பில் ஆங்காங்கு நாடகமுரண் எனப்படும் உத்தியினை இளங்கோவடிகள் கையாண்டுள்ளார். இவ்வுத்தி நாடகத்தின் பின்னால் நடக்க இருக்கும் நிகழ்வுகளைக் குறிப்பால் முன்பே உணர்த்தும் நுட்பத்தைத் தருகின்றது சிலம்பின் தொடக்கத்திலேயே.

காதலன் பிரியாமல் கவவுக்கை ஞெகிழாமல்
தீதறுக

என எதிர்மறை வாழ்த்திசைப்பது கோவலன் கண்ணகியின் பிரிவு வாழ்க்கையை மறைமுகமாக உணர்த்தி விடுகின்றது.

கோவலனும் கண்ணகியும் மதுரைக்குள் நுழையும் முன்,

போருழந்து எடுத்த ஆரெயின் நெடுங்கொடி
வாரல் என்பனபோல் மறித்துக் கைகாட்ட

என்று கொடி இருவரையும் தடுத்துரைப்பது போல் கூறப்பட்டிருப்பது இருவர்க்கும் மதுரையில் நிகழ இருக்கும் தீமைகளை முன்னர் கூட்டியே எடுத்துரைக்கும் நாடக உத்தியாக அமைந்துள்ளது.

இவற்றின் மூலம் சிலம்பில் இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழ்க் காப்பியக் கூறுகள் மிடைந்து காணப்படுகின்றன என்பதை அறியலாம்.

**13.3.1.8 சிலப்பதிகாரத்தின் மரபுக் குறிப்பு**

தமிழ் இலக்கிய வரலாற்றில் முதல் தமிழ்க் காப்பியம் என்னும் புதிய இலக்கிய வகைமைக்குச் சிலப்பதிகாரம் தோற்றுவாய் செய்துள்ளது.

சிலப்பதிகாரத்தின் பெருமை கண்டு பாரதியார் நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம் என்று போற்றுகின்றார்.

சிலம்பில் இடம்பெறும் சதகர்ணிகன் என்போர் மகத நாட்டைச் சேர்ந்த நூற்றுவர் கன்னர் எனப்படுவோர் ஆவர்.

வடமொழியில் நூபுர காவியம் எனவும், இந்தியில் நூபுரகதா எனவும், சிலப்பதிகாரம் மொழியாக்கம் செய்யப்பட்டுள்ளது.

ஆடித்திங்கள் பேரிருள் பக்கத்து
ஆழல்சேர் குட்டத்து அட்டமி ஞான்று
வேள்ளி வாரத்து ஒள்ளெரி உண்ணும்

என்னும் வரிகளை ஆராய்ந்த எல்.டி.சுவாமிக்கண்ணுப்பிள்ளை (கருமத்தம்பட்டி, கோவை) இத்தகைய வானவியல் குறிப்பு கி.பிஆம் நூற்றூண்டுக்கு உரியது என்று குறிப்பிடுவார்.

கண்ணகி பாண்டியனிடம் வழக்குரைத்த நாளும் ஆடிமாதத்து வெள்ளிக்கிழமை என்பதால் பெண்கள் அக்கிழமையைப் புனிதமான நாளாகக் கொண்டாடுவதாகவும் மு.வரதராசனார் தனது தமிழ் இலக்கிய வரலாற்று நூலில் குறித்து உள்ளார்.

கண்ணகி வழிபாடே பிற்காலத்தில் மாரியம்மன் வழிபாடாக வளர்ந்தது என்னும் கருத்தும் உண்டு.

கண்ணகியின் பொற்சிலம்பு வழிபாட்டுக்கு உரியதான பின்பு தமிழ்ப் பெண்டிர் பொன்னாலான அணிகளைக் காலிலே அணியும் பழக்கத்தை விட்டு விட்டதாக நம்பப்படுகிறது.

கோவலன் கண்ணகி இருவரும் செட்டியார்கள் தாம். காவிரிப்பூம்பட்டினத்துச் செட்டியார்களை நகரத்தார் என்கிறோம் என்று தமிழில் காப்பியங்கள் என்னும் நூலில் எஸ்.சௌந்தரபாண்டியன் தெளிவபடுத்துகிறார்.

தீயோன் (வில்லன்) இல்லாத காப்பியம். தீயோனுக்கு இணையாக ஊழ்வினை செயல்படுவதாகக் காட்டப்பட்டுள்ளது.

### 13.3.2 மணிமேகலை

**மணிமேகலையின் உருவம்**

ஆசிரியர்: மதுரைக் கூல வாணிகன் சீத்தலைச் சாத்தனார்

காலம்: கி.பி 2ஆம் நூற்றாண்டு

அடிகள்: 4286

காதைகள்: 30

பா வகை: நிலைமண்டில ஆசிரியப்பா

சமயம்: பௌத்தம்

வேறுபெயர்: மணிமேகலைத் துறவு

#### 13.3.2.1 மணிமேகலையின் பல்வேறு பெயர்களும் பெயர்க் காரணங்களும்

கணிகையர் குலத்து மாதவியின் மகளான மணிமேகலை இளமையிலேயே துறவு பூண்டதைக் கூறுவதால் மணிமேகலைத் துறவு என அழைக்கப்படுகிறது.

தமிழ்க் காப்பிய வகைமையில் முதன்முதலில் பௌத்த சமயக் கொள்கைகளை வலுவாக எடுத்துக் கூறி வற்புறுத்துவதால் முதல் சமயக் காப்பியம் என்று பெயர் பெற்றது.

எக்காலத்திற்கும் ஏற்ற அறங்களை எடுத்துக் கூறுவதால் அறக்காப்பியம் என்றழைக்கப்படுகிறது.

பரத்தமை ஒழிப்பு, மது ஒழிப்பு, சிறை ஒழிப்பு, சாதி ஒழிப்பு, பசி ஒழிப்பு, கொலை, களவு ஒழிப்பு முதலான பல சமுதாய சீர்திருத்தங்களைப் பேசுவதால் சீர்திருத்தக் காப்பியம் என்று பெயர் பெறுகிறது.

காலம், இடம், இனம் கடந்த சமுதாய குறிக்கோள்களை முன் எடுத்து வைப்பதால் குறிக்கோள் இலக்கியம் என்றழைக்கப்படுகிறது.

பரத்தையின் மகளை அறத்தின் தலைவியாகவும் துறவியாகவும் மாற்றிக் காட்டியுள்ளதால் இக்காப்பியம் புரட்சிக் காப்பியம் என அழைக்கப்படுகிறது.

பௌத்த சமயத்திற்கு உரிய வடமொழி, பாலி மொழிக் கலைச் சொற்களை இயன்ற வரையிலும் தமிழாக்கம் செய்யும் பெருமுயற்சி காணப்படுவதால் சமயக் கலைச் சொல்லாக்கக் காப்பியம் என்று அழைக்கப்படுகிறது.

கிளைக் கதைகளை மிகுதியாகக் கூறுவதால் கதைக் களஞ்சியக் காப்பியம் என்று பெயர் பெற்றது.

அமுதசுரபி கொண்டு அனைவரின் பசிப்பிணியையும் மணிமேகலை மாற்றிக் காட்டியதால் பசிப்பிணி மருத்துவக் காப்பியம் என்று அழைக்கப்படுகிறது.

பசுவின் பெருமைகளை ஆபுத்திரன் மூலம் எடுத்துக் காட்டுவதால் பசு போற்றும் காப்பியம் என பெயர் பெற்றது.

**13.3.2.2 அறிஞர்களின் பார்வையில் மணிமேகலை**

1. உ.வே.சாமிநாதையர்: பௌத்த சமயம் சம்பந்தமான தொடர்களைத் தமிழ் மொழிக்கு ஏற்ப சீத்தலைச் சாத்தனார் மொழியாக்கம் செய்திருத்தல் மிகப் பாராட்டுதற்கு உரிய ஒன்று.

2. துறைமங்கலம் சிவப்பிரகாசர்: கொத்தார் குழல் மணிமேகலை நூல்நுட்பம் கொள்வது எங்ஙன்!

3. அம்பிகாபதிக் கோவை: மாதவி பெற்ற மணிமேகலை நம்மை வாழ்விப்பதே!

4. சுத்தானந்த பாரதியார்: ‘காதொளிரும் குண்டலமும் கைக்கு வளையாபதியும் கருணை மார்பின் மீதொளிர் சிந்தாமணியும் மெல்லிடையில் மேகலையும் சிலம்பார் இன்பப்போது ஒளிரும் திருவடியும்’ எனத் தமிழ்த்தாயின் இடையணியாக அழகுறுத்துகின்றார்.

5. தெ.பொ.மீனாட்சி சுந்தரனார்: நாளந்தா பல்கலைக் கழகத் தலைவர்களான திந்நாகரும் தரும பாலரும் பண்ட தருக்க நெறியின் மொழிபெயர்ப்புகள், மணிமேகலையின் இடைச் செருகல்கள்

6. பல்வேறு உணர்ச்சிகளை வேறு வேறு ஓசைகளால் சிலப்பதிகாரம் போல் புலப்படுத்தாமல் நூல் முழுவதும் ஒரே ஓசையுள்ள அகவல் செய்யுளால் அமைந்து உள்ளது.

7. வ.சுப.மாணிக்கம்: சிலம்பின் அமைப்பில் காணும் நல்ல இலக்கியக்கூறுகள் மணிமேகலைக்கு இல்லை என்பது வெளிப்படை.

8. மது.ச.விமலானந்தம்: திருவள்ளுவரைப் ‘பொய்யில் புலவன்’ எனவும், திருக்குறளைப் பொருளுரை’ எனவும் முதன்முதல் காப்பியத்தில் வைத்துப் போற்றும் முதல் பனுவல்.

**13.3.2.3 மணிமேகலைக்கு வழங்கும் மணிமொழிகள்**

**(அ). உணவளித்தலின் உயர்வு**

உணவினை ஏற்பதற்கு உரியார் யார் என்பதனை,

குருடர் கேளார் கால்முடப் பட்டோர்
பேணுநர் இல்லோர் பிணிநடுக்கு உற்றோர்
யாவரும் வருக இசைத்துஉடன் ஊட்டி

என்றும்

மண்திணி ஞாலத்து வாழ்வோர்க்கு எல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே

என்றும்,

அறம்எனப் படுவது யாதெனக் கேட்பின்
மறவாது இதுகேள் மன்னுயிர்க்கு எல்லாம்
உண்டியும் உடையும் உறையுளும் அல்லது
கண்டது இல்

என்றும்,

விடுநில மருங்கின் படுபுல் ஆர்ந்து
நெடுநில மருங்கின் மக்கட்கு எல்லாம்
பிறந்தநாள் தொட்டும் சிறந்ததன் தீம்பால்
அறந்தரு நெஞ்சமொடு அருள்சுரந்து ஊட்டும்

என்றும், அறஞ் செய்தலின் மேன்மையை மணிமேகலை விரித்துரைக்கிறது.

பசியும் பிணியும் பகையம் நீங்கி
வசியும் வளனும் சுரக்கென வாழ்த்தி

என்பது பிறர்நலம் பேணும் நல்வாழ்த்தாக உள்ளது.

**(ஆ). நிலையாமை கூறல்**

நிலையாமைத் துன்பத்திற்கு மக்களின் உடல் இடமாக உள்ளது. இதனை,

பிறத்தலும் மூத்தலும் பிணிபட்டு இரங்கலும்
இறத்தலும் உடையது இடும்பைக் கொள்கலம்
மக்கள் யாக்கை இது

என்ற பகுதி எடுத்துரைக்கின்றது.

**(இ) பசி என்னும் பாவி புரியும் தீமைகள்**

'பசி வந்திடப் பத்தும் பறந்து போம்' என்பது பழமொழி. மணிமேகலை,

குடிப் பிறப்பு அழிக்கும் விழுப்பம் கொல்லும்
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்,
நாண்அணி களையம் மாண்எழில் சிதைக்கும்
பூண்அணி மாதரொடு புறங்கடை நிறுத்தும்
பசிப்பிணி என்னும் பாவி

என்று பசியின் தீமைகளை வெளிச்சமிட்டுக் காட்டுகின்றது.

**(ஈ) அறிவியல் உண்மை**

பளிக்கறை மண்டபத்திற்குள் ஒளிந்திருந்த மணிமேகலை வெளியே இருந்த உதயணன் அழைத்துப் பார்க்கிறான். பளிக்கறை மண்டபம் இருவர் உருவங்களை மட்டும் வெளியிடுகின்றது. ஒளிக்கு இடம் தந்த பளிக்கறை மண்டபம் ஒலியைத் தடை செய்கின்றது.

கண்ணாடி அறையை ஒத்த பளிக்கறை மண்டபம் ஒளிக்கு வழிவிட்டு ஒலியைத் தடை செய்த பான்மையை,

விளிப்பு அறைபோகாது மெய்புறத்து இடூஉம்
பளிக்கறை மண்டபம்

என்று மணிமேகலை சுட்டுகின்றது.

குறிப்புகள்

### 13.3.2.4 இரட்டைக் காப்பியங்களில் காணலாகும் ஒற்றுமைகள்

1. சிலம்பு மேகலை இருகாப்பியங்களும் கி.பி.2ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை

2. ‘அடிகள் நீரே அருளுக’ என்று சாத்தனார் கூற இளங்கோவடிகள் சிலம்பு செய்தார். அதைப் போலவே இளங்கோ முன்னிலையில் மணிமேகலையைச் சாத்தனார் அரங்கேற்றினார்.

3. இரு காப்பியங்களும் 30 காதைகள் பெற்றுள்ளன.

4. இரு காப்பியங்களிலும் ‘பதிகம்’ என்ற அமைப்பு உள்ளது.

5. இரு காப்பியங்களிலும் கடவுள் வாழ்த்து எனத் தனியாக ஒன்றில்லை.

6. இரண்டுமே ஆசிரியப்பா யாப்பு கொண்டு உள்ளன.

7. வணிகக் குலப்பெண் கண்ணகியையும் பரத்தையர் குலப்பெண்கள் மாதவி, மணிமேகலையையும் ஏற்றம் பெற வைத்துப் பெண்ணின் பெருமையை இரு காப்பியங்களும் பேசுகின்றன.

8. இரு நூல்களிலும் இந்திர விழா சிறப்பிக்கப்படுகிறது.

9. மணிமேகலா தெய்வம் இரு காப்பியங்களிலும் குறிப்பிடப்படுகிறது.

10. மாதவி தன் மகள் மணிமேகலையைக் ‘கண்ணகியின் மகள்’ எனச் சிறப்பிக்கின்றாள்.

11. சிலம்பின் இறுதியில் மணிமேகலை மேல் உரைப்பொருள் முற்றிய சிலப்பதிகாரம் எனக் கூறப்படுவதால் இரு நூல்களும் இரட்டைக் காப்பியங்கள் என உறுதிப்படும்.

12. ‘ஊழ்வினைக் கொள்கை’ இரு காப்பியங்களிலும் வேரோடி உள்ளது.

13. இரு காப்பியங்களிலும் சில செய்யுட் பகுதிகள் ஒற்றுமை கொண்டு காணப்படுகின்றன.

பசியும் பிணியும் பகையம் நீங்கி
வசியும் வளனும் சுரக்கஎன வாழ்த்தி

(சிலப் 5.72-73/மணி 1.70-71)

வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசம்
கச்சை யானைப் பிடர்தலை ஏற்ற
(சிலப்.5:141-142/மணி.1:27-28)



என்னும் பகுதிகள் ஒத்துக் காணப்படுகின்றன.

14. கண்மணி அனையாற்குக் காட்டுக என்றே எனச் சிலம்பில் காணப்படும் தொடர் கண்மணியனையான் கடிதுசுங்கு உறுமென என மேகலையில் இடம்பெற்றுள்ளது.

15. சொல்லாட்சி, தொடரமைப்பு, திருக்குறள் மேற்கோள் முதலான அமைப்பு வகைகளிலும் இரு காப்பியங்களுக்கு இடையே ஒற்றுமைகள் காணப்படுகின்றன.

**13.3.2.5 இரு காப்பியங்களிலும் காணலாகும் வேற்றுமைகள்**

1. இளங்கோ – சமணர், சாத்தனார் - பௌத்தர்
2. இளங்கோ – பொதுமை விரும்பி, சாத்தனார் - பௌத்த விரும்பி
3. சிலம்பில் வரும் பலரும் பல சமயத்தவராய் இருப்பர்
    1. கோவலன் - சாவக நோன்பி
    2. மாடல மறையோன் - வைதிகன்
    3. கவுந்தி – சமணத்துறவி
    4. மாங்காட்டு மறையோன் - வைணவன்

    மேகலையில் மாதவி மணிமேகலை அறவண அடிகள் எனத் தலைமாந்தர் அனைவரும் பௌத்தர்களே.
4. இளங்கோ – அரச இளவல், சாத்தனார் - வணிகப்புலவர்
5. சிலம்பு – முத்தமிழ்க்காப்பியம், மேகலை - இயற்றமிழ்க் காப்பியம்
6. சிலம்பு – தனித்தமிழ்க் காப்பியம், மேகலை – வடசொற் கலப்புக் காப்பியம்
7. சிலம்பு – வரலாற்றுக் காப்பியம், மேகலை – கற்பனைக் காப்பியம்
8. சிலம்பு – கிளைக் கதைகள் குறைவு, மேகலை – கிளைக் கதைகள் மிகுதி
9. சிலம்பு – புகாரின் செல்வ வளர்ச்சியைக் கூறுகிறது, மேகலை – புகாரின் செல்வத் தளர்ச்சியைச் சுட்டுகிறது.

10. சிலம்பில் கதைச் செறிவு சிறக்கிறது., மேகலையில் கதைத் தொய்வு தெரிகிறது.

**13.3.2.6 மணிமேகலையின் மரபுக்குறிப்பு**

தமிழின் முதல் சமயக் காப்பியம் மணிமேகலை

சிலம்பின் தொடர்ச்சி மணிமேகலை என்பதனைச் சிலம்பின் இறுதியில் 'மணிமேகலை மேல் உரைப்பொருள் முற்றிய சிலப்பதிகாரம் என்பதனைக் கொண்டு உறுதி செய்யலாம்

காப்பியத் தலைவியின் பெயரையே காப்பியத்தின் பெயராகவும் கொண்டு பெண்ணின் பெருமை பேணும் முதல் காப்பியம் மணிமேகலை

பரத்தையின் மகளைக் காப்பியத் தலைவியாகக் கொண்ட புரட்சிக் காப்பியம் மணிமேகலை

மணிமேகலையில் உள்ள 'சமயக் கணக்கர்தம் திறம் கேட்ட காதை' தவத்திறம் பூண்டு தருமம் கேட்ட காதை' பவத்திறம் அறுக எனப் பாவை நோற்ற காதை' ஆகிய மூன்று காதைகளும் பௌத்த சமயநெறி உரைக்கும் காதைகளாகும்.

பௌத்தம் சார்ந்த செய்திகளைக் கூறும்போது வடமொழிச் சொற்களும், பாலி மொழிச் சொற்களும் காணப்படுகின்றன.

சமய சம்பந்தமான சொற்களைக் கூறும்போது 'முடிந்த வரையிலும் தமிழில் இடத்திற்குத் தகுந்தாற்போல் கூற வேண்டும் என்னும் முயற்சி மிகப் பாராட்டிற்கு உரிய ஒன்று' உ.வே.சா உரைக்கின்றார்.

பரத்தமை ஒழிப்போடு மதுவொழிப்பு, சிறையொழிப்பு, சாதியொழிப்பு என்றினைய சமுதாய சீர்திருத்தங்களின் களஞ்சியம் இக்காவியம்' என்று வ.சுப.மாணிக்கம் பாராட்டுகின்றார்.

மணிமேகலையில் கிளைக்கதைகள் மிகுதி.

சுதமதி, தீவதிலகை, ஆபுத்திரன், ஆதிரை, காயசண்டிகை, மருதி, விசாகை முதலியோர் வரலாறுகள் காப்பியத்தோடு பின்னிப் பிணைந்து செல்கின்றன.

இவற்றுள் ஆதிரை, மருதி, விசாகை கதைகளை அவர்களே கூறும் பாங்கில் அமைந்துள்ளன.

### 13.3.3 சீவக சிந்தாமணி

**சீவக சிந்தாமணியின் உருவம்**

| | | |
|---|---|---|
| ஆசிரியர் | : | திருத்தக்கதேவர் |
| காலம் | : | கி.பி ஒன்பதாம் நூற்றாண்டு |
| சமயம் | : | சமணம் |
| பாவகை | : | விருத்தப்பா |
| பாடல்கள் | : | 3147 விருத்தங்கள் |

**13.3.3.1 ஆசிரியரின் வேறு பெயர்கள்:**

திருத்தகு முனிவர், திருத்தகு மகா முனிவர், திருத்தக்க மகாமுனிகள், தேவர்

**13.3.3.2 காப்பியப் பகுப்பு – 13 இலம்பகங்கள்**

1.காந்தருவதத்தையார் இலம்பகம் - சீவகன் காந்தருவதத்தையை யாழிசையில் வென்று மணந்தது.

2.குணமாலையார் இலம்பகம் - மதயானையை அடக்கி சீவகன் குணமாலையை மணந்தது.

3.பதுமையார் இலம்பகம் - பாம்பு விடம் நீங்கிச் சீவகன் பதுமையைக் காப்பாற்றி மணந்தது.

4.கேமசரியார் இலம்பகம் - சீவகன் கேமசரியையைக் கண்டு காதல் கொண்டு மணந்தது.

5.கனக மாலையார் இலம்பகம் - வில்வித்தை கற்பித்துக் கனக மாலையைச் சீவகன் மணந்தது.

6.விமலையார் இலம்பகம் - பந்தாடிய விமலையைக் கண்டு காதலித்துச் சீவகன் மணந்தது.

7.சுரமஞ்சரியார் இலம்பகம் - கிழவனாக வேடம் பூண்டு சுரமஞ்சரியைக் காதலித்து மணந்தது.

8.இலக்கணையார் இலம்பகம் - தன் மாமன் மகள் இலக்கணையைச் சீவகன் மணந்தது.

9. கோவிந்தையார் இலம்பகம் - தன் நண்பன் பதுமுகனுக்குக் கோவிந்தையை மணம் முடித்துக் கொடுத்தது.

10.நாமகள் இலம்பகம் - சீவகன் ‘ஞானம்’ என்னும் குமரி (கல்வியை) மணந்தது.

11.மண்மகள் இலம்பகம் - கட்டியங்காரனை வென்று மணமகளை மணந்தது (நாட்டை மீட்டு ஆட்சி செய்தது)

12.பூமகள் இலம்பகம் - சீவகன் பூமகளை மணந்தது (முடிசூட்டிக் கொண்டது)

13.முத்தி இலம்பகம் - சீவகன் கேவல ஞானம் பெற்று வீடுபேற்றைக் காதலித்தது.

நூலின் வேறு பெயர்: மணநூல்

**13.3.3.3 நூலின் பெயர்க்காரணங்கள்**

1. நூலின் பதின்மூன்று இலம்பகங்களும் மணவினைகளைப் பற்றிக் கூறுவதால் மணநூல் எனப்படுகிறது.

2. 'சிந்தாமணியின் சரிதம் சிதர்ந்தேன்' திருத்தக்கதேவர் நூலில் குறிப்பிட்டுள்ளதால் நூலுக்கு ஆசிரியர் இட்ட பெயர் 'சிந்தாமணி' என உணரலாம்.

3. நினைத்ததைத் தரும் ஆற்றல் மிக்கது சிந்தாமணிக்கல். அதனைப் போன்று நினைத்த இலக்கிய வளங்களைக் கொண்டுள்ளதால் சிந்தாமணி எனப்படுகிறது.

4. சீவகன் பிறந்தபோது விசயை 'சீவ' (நீடூழி வாழ்க) என வாழ்த்தியதால் சீவக சிந்தாமணி எனப்படுகிறது.

**13.3.3.4 சிந்தாமணி தோன்றிய கதை**

மதுரைத் திரமிள சங்கத்தைச் சேர்ந்தவர் திருத்தக்கதேவர். அச்சங்கப் புலவோர் 'சமணத் துறவியர்க்குக் காமச் சுவை ததும்ப காப்பியம் எழுத இயலாது' என்றனர். இக்கூற்றை மறுக்க, தானே அத்தகைய நூலை இயற்ற வேண்டி, தனது ஆசிரியரான அச்சணந்தியிடம் அனுமதி கேட்டார்.

தேவரின் புலமையைச் சோதித்தறிய அப்பொழுது தொலைவில் ஓடிய நரியைப் பற்றிப் பாடுக எனப் பணித்தார். உடனே இளமை, யாக்கை, செல்வங்களின் நிலையாமைகளை விளக்கும் வகையில் நரிவிரித்தம் என்னும் காப்பியத்தைத் திருத்தக்கதேவர் பாடினார். இவரது திறமையை உணர்ந்த அச்சணந்தி காமச்சுவை உடைய காப்பியம் பாட தேவர்க்கு அனுமதி அளித்தார். தேவரும், எட்டே நாளில் சீவக சிந்தாமணியைப் பாடி முடித்தார்.

நூல் அரங்கேறியது. 'திருத்தக்கதேவர் காம இன்பத்தைத் துய்த்தவராகத்தான் இருக்க முடியும்' என்ற சொல் எழுந்தது. பழுக்கக் காய்ச்சிய இரும்பைக் கையில் பிடித்து தனக்கு ஒன்றும் ஆகாமையைக் காட்டித் தனது தூய்மையைத் திருத்தக்க தேவர் உறுதி செய்தார்.

**13.3.3.5 சீவக சிந்தாமணியின் உள்ளடக்கம்**

ஏமாங்கத நாட்டு மன்னன் சச்சந்தன். தன் மனைவி விசயை மீது கொண்ட நாட்டத்தால் அரசாட்சியை அமைச்சனான கட்டியங்காரன் என்பவனிடம் சச்சந்தன் ஒப்படைத்தான். கட்டியங்காரன் சூழ்ச்சியால் நாட்டைக் கவர்ந்து கொள்ளத் திட்டம் தீட்டினான். நிறை மாத சூலியான விசயை மயிற்பொறி ஒன்றில் ஏறி நாட்டை விட்டுத் தப்பிக்கின்றாள். சுடுகாட்டில் சீவகன் பிறந்தான். சச்சந்தன் போரில் மடிந்தான். மனம் வெறுத்த விசயை சுடுகாட்டில் சீவகனைப் போட்டு விட்டுத் தவம் மேற் கொள்ளப் போய்விடுகின்றாள். கந்துக்கடன் என்னும் வணிகன் சீவகனை எடுத்து வளர்த்தான். அச்சணந்தி என்பவரிடம் சீவகன் கல்வி, கேள்வி பயின்றாள். காந்தர்வதத்தையார் முதல் எண்மரை மணம் புரிந்தான். தன் நாட்டைக் கைப்பற்றி முடிசூட்டினான். உலகின் நிலையாமை உணர்ந்து ஞானம் பெற்று துறவி நிலை அடைந்து வீடுபேறு அடைந்தான்.

இளமை நிலையாமை, இன்பம் நிலையாமை, செல்வம் நிலையாமை முதலான நிலையாமைகளை நெஞ்சில் நிற்கும் வண்ணம் நூல் எடுத்துரைக்கின்றது.

மது அருந்துவதால் வரும் தீமையைப் பறவைகளைக் கொண்டு கூறும் பகுதி நயம் மிக்கது. கடைச்சியராகிய உழத்தியர் மது கீழே சிந்துகிறது. அதனைப் பருகிய ஆண் அன்னம் மதுவின் மயக்கத்தால் அருகில் இருந்த நாரையை நாடுகின்றது. அதைக் கண்ட பெண்மயில் 'மது அருந்துவது மதியை மயக்கும், இந்த அன்னம் போல நெறி பிறழ நேரும்' என ஆண் மயிலுக்கு அறிவுறுத்தியது. இந்த அழகிய காட்சியை,

வளைக்கையால் கடைசியர் மட்டு வாக்கலின்
திளைத்தவர் பருகிய தேறல் தேங்குழிக்
களிப்பஉண்டுஇள அனம் கன்னி நாரையைத்
திளைத்தலின் பெடைமயில் தெருட்டும் செம்மற்றே

என்னும் பாடல் சித்திரிக்கின்றது.

### 13.3.3.6 சிந்தாமணியின் மரபுக்குறிப்பு

சிலப்பதிகாரம், மணிமேகலை காப்பியங்கள் அகவற்பாவால் அமைந்தவை. சிலம்பில் உள்ள கானல் வரிப் பாடல்கள் விருத்தப்பாவால் அமைந்து தோற்றுவாய் செய்தது. பின்னர் வந்த பக்தி இலக்கியங்கள் விருத்தப்பாவால் பாடப்பட்டன. ஒரு பொருள் மேல் பத்துப் பாடல்கள் அடுக்கி விருத்தப்பாவால் பதிகங்கள் பாடினர். அம்முறையைத் தொடர்ந்து தமிழின் முதல் விருத்தக் காப்பியம் என்னும் சிறப்பினைச் சிந்தாமணி பெறுகிறது.

திருத்தக்கதேவரைத் தொடர்ந்து, சேக்கிழார் பெரியபுராணத்தையும், கம்பர் கம்பராமாயணத்தையும் விருத்தப்பாவால் கதை தழுவிய காப்பியங்களை இயற்றினார்.

சிந்தாமணியில் ஓர் அகப்பை முகந்து கொண்டேன் எனக் கம்பர் கூறியதாகச் செவிவழிச் செய்தி உண்டு.

ஷத்திர சூடாமணி, ஸ்ரீபுராணம், கத்ய (உரைநடை) சிந்தாமணி முதலான வடமொழி நூல்களில் சீவகனின் கதை தழுவி சீவகசிந்தாமணி எழுதப்பட்டது.

கண்டி என்னும் புலவர் தமது பாடல்கள் பலவற்றைச் சிந்தாமணியில் இடைச்செருகலாகச் சேர்த்துவிட்டார் என்று நச்சினார்க்கினியர் தமது உரையில் குறிப்பிட்டுள்ளார்.

சிந்தாமணிக்குப் பின் வந்த காப்பியங்கள் சிந்தாமணி வழியில் நாட்டுப்படலம், நகரப்படலம் என்னம் அமைப்புகளைக் கொண்டு எழுதப்பட்டன.

தமிழ்மொழிக்கு இலியட்டும் இதுவே, ஒடிசியும் இதுவே என ஜி.யு.போப் பாராட்டுகின்றார்.

உலகில் எத்தனை இன்பங்களையும் செல்வங்களையும் பெற்றிருந்தாலும் உலகம் நிலையாமையினை உடையது என்பதனைக் கூறுவதற்காக ஒன்று முதல் பன்னிரண்டு இலம்பகங்கள் கூறப்பட்டன. உண்மையான இன்பம் இறைவன் பாதமாகிய வீடுபேறே என்பதனை நிலைநாட்டக் கூறப்பெற்றது முத்தி இலம்பகம்.

மைசூர் மாநிலத்தில் உள்ள சிரவண பெலகொலாக் கல்வெட்டில் திருத்தக்கதேவர் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது.

## 13.3.4 வளையாபதி

### வளையாபதியின் உருவம்

ஆசிரியர்: பெயர் தெரியவில்லை

காலம்: கி.பி 9ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சீவக சிந்தாமணிக்கும் முற்பட்டது எனத் தெ.பொ.மீ கூறுகிறார்.

பாடல்கள்: 73 பாடல்கள் மட்டும் கிடைத்துள்ளன.

பாவகை: விருத்தப்பா

சமயம்: சமணக் காப்பியம்

### 13.3.4.1 வளையாபதியின் உள்ளடக்கம்

நவகோடி நாராயணன் என்னும் வணிகன் வேறு குலத்தைச் சேர்ந்த பெண்ணை மணக்கின்றான். அதனால் அவனது குலத்தோரால் நவகோடி நாராயணன் வெறுத்து ஒதுக்கப்படுகின்றான். மனம் வெறுத்த அவன் வேறு நாட்டிற்குத் தனியாகப் போய் காலங் கழிக்கின்றான். அவனுக்குப் பிறந்த மகன் தன் தாய் மூலம் தந்தையைப் பற்றிய உண்மையை அறிந்து நவகோடி நாராயணைக் கண்டுபிடித்துத் தன் தாயோடு சேர்த்து வைக்கின்றான். இது வளையாபதியின் சாரம்.

இக்கதையுடன் இளமை, இன்பம், பொருள் முதலானவற்றின் நிலையாமைக் கருத்துக்கள் விரித்துரைக்கப்படுகின்றன.

கள்ளன்மின் களவு ஆயின யாவையும்
கொள்ளன்மின் கொலை கூடிவரும் அறம்
எள்ளன்மின் இவர் என்று எண்ணி யாரையும்
நள்ளன்மின் பிறர் பெண்ணோடு நண்ணன்மின்

என்னும் பாடல்வழி வளையாபதியின் இனிமை மற்றும் எளிமையையும் உணரலாம்.

### 13.3.4.2 வளையாபதியின் மரபுக்குறிப்பு

புறத்திரட்டு, யாப்பருங்கல விருத்தியுரை, சிலப்பதிகார உரை, தொல்காப்பிய உரை ஆகியவற்றில் இருந்தே வளையாபதி செய்யுட் பகுதிகள் திரட்டித் தொகுக்கப்பட்டன.

நிக்கந்த வேடத்து இருடி கணம் மற்றும் அறிவன் என்னும் குறிப்புகள் நூலில் காணப்படுவதால் இக்காப்பியம் சமணசமயம் சார்ந்தது என்பர்.

தக்கயாக பரணியின் உரையாசிரியர் ஒட்டக்கூத்தர், கவியழகு வேண்டி வளையாபதியை நினைத்தார் எனக் குறித்துள்ளார். இதன்மூலம் வளையாபதியின் காப்பியச் சிறப்பை உணரலாம்.

வடமொழி வைசியபுராணத்தின் 35ஆம் அத்தியாயத்தில் வளையாபதியின் கதை காணப்படுகிறது.

நான்கடி விருத்தப்பாக்களோடு, ஆறடி விருத்தப்பாக்களும் வளையாபதியில் காணப்படுகின்றன. இதன்மூலம் விருத்தப்பா வளர்ச்சியினை உணரலாம்.

### 13.3.5 குண்டலகேசி

**குண்டலகேசியின் உருவம்**

ஆசிரியர்: நாதகுத்தனார்

காலம்: கி.பி 8ஆம் நூற்றாண்டு

பாடல்கள்: 19 பாடல்கள் மட்டுமே கிடைக்கின்றன.

பாவகை: விருத்தப்பா

சமயம்: பௌத்த காப்பியம்

#### 13.3.5.1 பெயர்க்காரணம்:

துறவியானபோது களைந்த கூந்தல் மீண்டும் வளைந்து சுருள்சுருளாகத் தொங்கியதால் 'சுருள் முடியினள்' எனப் பொருள்படும். குண்டலகேசி என்னும் பெயரினைப் பத்திரை என்பவள் பெற்றாள். இக்காரணம் பற்றி நூலும் இப்பெயர் பெற்றது.

#### 13.3.5.2 குண்டலகேசியின் உள்ளடக்கம்

பத்திரை என்னம் வணிகக் குலப்பெண் காளன் என்னும் கள்வனை மணம்புரிந்து கொள்ள விரும்பினாள். எனவே, அரசனால் காவலில் வைக்கப்பட்டிருந்த காளனைத் தன் தந்தையின் செல்வாக்கு பலத்தால் மீட்டு மணம் புரிந்து கொள்கின்றாள். நாட்கள் நகர்ந்தன. ஒருமுறை பத்திரை சினம் கொண்டிருந்த வேளையில் கணவனைக் 'கள்வன் தானே' என்று கூறி விடுகிறாள். வெகுண்ட காளன் பத்திரையை வஞ்சகமாகக் கொல்ல சதித்திட்டம் தீட்டுகின்றான்.

பத்திரையை வஞ்சகமாக மலை உச்சிக்குக் காளன் அழைத்துச் செல்கின்றான். மலையுச்சியில் இருந்து பத்திரையைத் தள்ளிவிடக் காளன் முயற்சிக்கின்றான். அவனது சூழ்ச்சியை அறிந்து கொண்ட பத்திரை 'தற்கொல்லியை முற்கொல்' என்னும் முடிவுக்கு வருகின்றான்.

சாகுமுன் தான் தெய்வமாக மதிக்கும் தன் கணவனை மும்முறை வலம் வர விரும்புவதாகத் தெரிவிக்கின்றாள். காளனும் இசைகின்றான். வலம் வருவது போல் நடித்த பத்திரை காளனை மலை முகட்டிலிருந்து கீழே தள்ளிக் கொன்று விடுகிறாள். பின்னர், வாழ்வை வெறுத்த பத்திரை துறவு மேற்கொண்டு புத்தசமயம் சார்ந்து சமயவாதம் புரிந்து பிற சமயத்தவரை வென்று வாகை சூடி வந்தாள்.

யாக்கை நிலையாமையைப் பற்றிக் குண்டலகேசி கூறும் நுட்பச் சிந்தனை மிக அழகானது, சிந்திக்கற்பாலது.

'பிறர் சாவதற்காக நாம் அழுகிறோம். ஆயின் தாயின் வயிற்றில் கருவான நிலை செத்து, பின் குழந்தையான நிலை செத்து, பின் இளைஞனான நிலை செத்து முடிவில் மூப்பெய்தி இவ்வாறு நாளும் நாளும் சாகின்றோம் நாம். இப்படியிருக்க நமக்கு நாமே அழாதது ஏன்? என்னும் சிந்தனையைக் குண்டலகேசி முன்வைக்கின்றது. இக்கருத்தினை,

பாளையாம் தன்மை செத்தும்
பாலனாம் தன்மை செத்தும்
காளையாம் தன்மை செத்தும்
காமுறும் இளமை செத்தும்
மீளும் இவ்வியல்பும் இன்னே
மேல்வரும் மூப்புமாகி
நாளும் நாம்சிகின் றாமால்
நமக்குநாம் அழாதது என்னோ?

என்னும் பாடல் பதிவு செய்கின்றது.

### 13.3.5.3 குண்டலகேசியின் மரபுக்குறிப்பு

இத்தகைய சிந்தனைகளின் மூலமாகக் குண்டலகேசி தருக்கநூல் என்று யாப்பருங்கல விருத்தியால் இனங்காணப்படுகிறது.

## 13.4 பிற்காலக் காப்பியங்கள்



### 13.4.1.1 கம்பராமாயணம் ஆசிரியர் குறிப்பு

கம்பர் எழுதிய இராமாயணம் கம்பராமாயணம். கம்பர் மயிலாடுதுறைக்கருகே உள்ள திருவழுந்தூரில் பிறந்தவர். கம்பங்கொல்லையைக் காத்ததால் கம்பர் எனப் பெயர்பெற்றார் எனக் கூறுவதுண்டு. காளி கோயிலில் கம்பத்தின் அருகே கண்டெடுக்கப்பட்டதால் கம்பன் என்ற பெயர் வந்ததாகக் கூறுவதுமுண்டு. காஞ்சியில் உள்ள ஏகம்பனாகிய சிவனை வழிபடும் குடும்பத்தில் பிறந்ததால் முதல் குறையுடன் கம்பர் என்ற பெயரைக் கொண்டதாகக் கூறுவோரும் உளர். கல்வியிற் பெரியவர் கம்பர், கம்பர் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும் போன்ற தொடர்கள் கம்பரின் கவிச்சிறப்பை எடுத்துரைக்கும். இவர் கவிச் சக்கரவர்த்தி என்ற பட்டம் பெற்றவர். கம்பராமாயணம் தவிர ஏர்எழுபது, திருக்கை வழக்கம், சரசுவதி அந்தாதி, சடகோபர் அந்தாதி என்பனவும் இவர் இயற்றியனவாகும். கம்பரின் காலத்தைக் கி.பி 9ஆம் நூற்றாண்டு எனவும் கி.பி12ஆம் நூற்றாண்டு எனவும் கூறுவர்.

### 13.4.1.2 நூற்குறிப்பு

கம்பராமாயணம் பால காண்டம், அயோத்தியா காண்டம், ஆரணிய காண்டம், கிட்கிந்தா காண்டம், யுத்த காண்டம், சுந்தர காண்டம் ஆகிய ஆறு காண்டங்களையும் 118 படலங்களையும் 10366 பாடல்களையும் கொண்டுள்ளது. மிகைப் பாடல்களாக 1293 பாடல்கள் உள்ளன. (கம்பராமாயணம் கம்பன் கழகப் பதிப்பு). தன்னை ஆதரித்து வளர்த்த வள்ளல் சடையப்பரை மறவாமல் ஆயிரம் பாட்டுக்கு ஒரு முறை அவரது புகழையும் பண்பையும் பெருமையையும் உவமையாக அமைத்துப் பாடியுள்ளார்.

### 13.4.1.3 கம்பராமாயணத்தின் பழமைச் சிறப்பு

இராமாயணக் கதைகள் பழங்காலத்திலேயே தமிழ்நாட்டில் வழங்கி வந்துள்ளன. சங்க இலக்கியங்களிலும் சில கதைப் பகுதிகள் உள்ளன. காட்டில் பர்ணசாலையில் இராவணன் சீதையைக் கவர்ந்து தன் விமானத்தில் எடுத்துச் சென்ற போது, சீதை தன் அணிகலன்களை எல்லாம் ஒரு மூட்டையாகக் கட்டிக் கிட்கிந்தையில் இட்டாள்.

அந்த அணிகலன்கள் குரங்குகளின் கையில் அகப்பட்டன. அப்போது அந்த வானரப்படைகள் அவற்றை வியப்போடு பார்த்து அவற்றைக் கொண்டு இன்னது செய்வது என்று தெரியாமல் தாறுமாறாக எடுத்து அணிந்து கொண்டனவாம். இது புறநானூற்றில் அமைந்துள்ளது. இலங்கைக்குப் புறப்படுமுன் இராமன் ஓர் ஆலின் கீழிருந்து கையமர்த்திப் பறவைகளை ஒலியடக்கியதாக வரும் செய்தி அகநானூற்றில் உள்ளது. இவற்றால் இராமாயணக் கதை தமிழ்நாட்டில் தொன்றுதொட்டு வழங்கி வருவது புலனாகும்.

**13.4.1.4 தமிழ் மரபைப் போற்றுதல்**

கம்பர் வால்மீகி இராமாயணத்தைத் தழுவி எழுதினாலும் தமிழ்ப் பண்பாட்டின் அடிப்படையில் இயற்றியுள்ளார். சீதையை இராவணன் கைகளால் பற்றித் தூக்கிச் சென்றதாக வால்மீகி கூறியுள்ளார். கம்பர் பஞ்சவடியில் பர்ணசாலையில் இருந்த சீதையை அந்தக் குடிசையோடு தரையைப் பெயர்த்துச் சென்று இலங்கையில் அசோக வணத்தில் சிறை வைத்தான் என்ற கூறுவர். இராவணன் சீதையைத் தொடவில்லை. இராமனுக்கும் சீதைக்கும் திருமணமாகும் முன்பு இருவரும் இதயம் மாறிப்புக்கனர் என்று கூறி, தமிழ் அகப்பொருள் காதலைப் பின்பற்றுகிறார்.

**13.4.1.5 கம்பரின் புதிய படைப்பு**

வாலியின் மகன் அங்கதன் அடைக்கலம், கம்பரின் புதிய படைப்பு. இராமன் வாலியின் வேண்டுகோளுக்கிணங்க அங்கதனை அடைக்கலமாகக் கொண்டதற்கு அறிகுறியாகத் தன் உடைவாளை அங்கதனிடம் அளிக்கிறான். அன்றுமுதல் அங்கதன் உடைவாளை ஏந்தி இராமன் பக்கத்தில் எப்போதும் இருக்கிறான். முடிசூட்டு விழாவில் ‘அங்கதன் உடைவாள் ஏந்த’ என்று கம்பர் அக்காட்சியைக் குறிப்பர். மாயாசனகப் படலம் வால்மீகியில் இல்லாதது. வாலி இறந்த பிறகு அவன் மனைவி தாரையைச் சக்ரீவன் தன் மனைவியாகக் கொண்டான் என்பது வால்மீகம். கம்பர் தமிழ்ப் பண்பாட்டின் அடிப்படையில் தாரை மங்கல அணிதுறந்து மலர் புனைதல் இன்றிக் கைம்பெண்ணாக விதவைக் கோலத்தில் காட்சி தருவதைக் கூறுகிறார். வால்மீகியில் இரணியன் பற்றிய விளக்கம் இல்லை. கம்பரே இரணியன் வதைப்

படலத்தைத் தனிப்படலமாக அமைத்துள்ளார். இவ்வாறு கம்பர் பல மாற்றங்களைச் செய்து இராமாயணத்தை இயற்றியுள்ளார்.



**13.4.1.6 கம்பராமாயணத்தில் இயற்கைக் காட்சிகள்**

இயற்கைக் காட்சிகளை எடுத்துரைக்கும் வருணனைப் பகுதிகளில் கம்பரின் தனித்திறன் விளங்குகிறது. மருத நிலத்தை வருணிக்கும் இடத்தில் ஓர் அரசன் அல்லது அரசி கலைமண்டபத்தில் வீற்றிருப்பதுபோல் மருதம் கலையின் சூழலில் வீற்றிருப்பதாகக் கூறுகிறார். குளிர்ந்த சோலையில் மயில்கள் தோகை விரித்து நடனம் ஆடுகின்றன. தாமரைகள் விளக்குகள் ஏந்துவனபோல் செந்நிற அரும்புகளையும் மலர்களையும் ஏந்துகின்றன. வானத்து முகில்கள் முழவுபோல் ஒலிக்கின்றன. குவளை மலர்கள் நாட்டியத்தைக் காண வந்தோரின் கண்கள் போல் உள்ளன. பொய்கையின் அலைகள் நாட்டிய அரங்கின் திரைகள்போல் உள்ளன. நாட்டியத்திற்கு ஏற்ற பாடல்களைப் பாடுவனபோல் வண்டுகள் ஒலிக்கின்றன. இத்தகைய கலையரங்கிலே மருதம் என்னும் அரசி வீற்றிருந்தாள் என்கிறார். இதனை,

“தண்டலை மயில்கள் ஆடத் தாமரை விளக்கந் தாங்கக்
கொண்டல்கள் முழவின் ஏங்கக் குவளைகண் விழித்து நோக்கத்
தெண்திரை எழினி காட்டத் தேம்பிழி மகரயாழின்
வண்டுகள் இனிதுபாட மருதம் வீற்றிருக்கும் மாதோ”

என்னும் பாடல் உணர்த்தும்.

**13.4.1.7 கம்பரின் கற்பனை வளம்**

சோழநாட்டு, வளமான வாழ்வை வருணிக்கும் இடத்தில் கம்பரது கற்பனையும் குறிக்கோளும் புலப்படும். நாட்டில் வறுமை இல்லாத காரணத்தால் வண்மை (வள்ளல் தன்மை) என்பதற்கு இடம் இல்லாமல் போயிற்று. பகைவர் என்று யாரும் இல்லாமையால் எதிர்த்துத் தாக்கும் வலிமையும் இல்லாமல் போயிற்று. யாரும் பொய் பேசாமையால் உண்மை என்பது சிறப்பாக விளங்கவில்லை. பலவற்றைக் கேட்டு அறியும் அறிவு எல்லோரிடமும் ஓங்கியிருப்பதால் அறிவின் சிறப்புக்கும் தனியிடம் இல்லை.

வண்மை இல்லைஓர் வறுமை இன்மையால்
திண்மை இல்லைநேர் செறுநர் இன்மையால்

உண்மை இல்லைபொய் உரை இன்மையால்
ஒண்மை இல்லைபல் கேள்வி ஓங்கலால்

இது கோசல நாட்டின் சிறப்பைக் கூறுவதோடு பொதுவாக நாட்டின் எதிர்காலத்தைப் பற்றி கண்ட ஒப்பற்ற கற்பனைக் காட்சியாகவும் உள்ளது.

**13.4.1.8 கம்பரின் சொல்லோவியம்**

கதைப் போக்கில் நிகழ்ச்சிகளை விளக்குவதில் கம்பர் இணையற்றவராக விளங்குகிறார். போர்க்களத்தில் இராமனுடைய அம்பால் முடியிழந்து அவமானப்பட்டுத் திரும்பும் நிலையில் இராவணனுடைய மனநிலையைக் கம்பர் ஒரு பாட்டில் விளக்குகிறார். வானுலம் சிரிக்குமே! மண்ணுலகம் சிரிக்குமே! நான் எள்ளி நகையாடிய பகைவர் எல்லோரும் நகைப்பார்களே என்றுதான் இராவணன் நாணம் அடைந்து வாடுகிறானாம். இதனை,

வான்நகும் மண்ணும் எல்லாம் நகும் நெடுவயிரத் தோளான்
நான்நகு பகைஞர் எல்லாம் நகுவர் என்று அதற்கு நாணான்
வேல்தரு நெடுங்கண் செவ்வாய் மெல்லியல் மிதிலை வந்த
சானகி நகுவள் என்றே நாணத்தால் சாம்புன்கிறான்

என்பர். இராவணன் நாணிய நிலையில் போர்க்களத்தை விட்டு ஊருக்குள் செல்லும் காட்சியையும் கம்பர் மிக நயமாகக் குறிப்பிடுகிறார். இராவணன் தன் முடியை மட்டுமல்லாமல் வீரத்தையும் போர்க்களத்தில் போட்டுவிட்டு வெறுங்கையோடு இலங்கைக்குள் புகுந்தான் என்கிறார். அவன் இங்கும் அங்கும் திசைகளைத் திரும்பிப் பார்க்கவில்லையாம். தன் வளமான நகரத்தையும் கண்ணெடுத்துப் பார்க்கவில்லையாம். கடல் போன்ற தன் பெருஞ்சேனையையும் கண்ணெடுத்துப் பார்க்கவில்லையாம். அவனுடைய தேவிமார் அவனைத் தனித்தனியே நோக்கிக் கொண்டிருக்க அவன் அவர்களில் ஒருவரையும் நோக்காமல் பூமி என்ற ஒரு பெண்ணையே நோக்கியவாறு சென்றான் என்கிறார் கம்பர். அவன் தன் வீரம் குலைந்த காரணத்தால் நாணம் அடைந்த நிலையில் யாரையும் நோக்காமல் நிலத்தைப் பார்த்தவாறே தலைகுனிந்து சென்றான் என்பதைக் கம்பர் இவ்வாறு உரைக்கிறார். இவ்வாறு கம்பரின் விளக்கங்கள் சிறந்த சொல்லோவியங்களாக ஒளிர்கின்றன.

#### 13.4.1.9 கம்பராமாயணத்தில் ஓசைச் சிறப்பு

கதை மாந்தர்களின் உணர்ச்சிகளுக்கும் பண்புகளுக்கும் ஏற்றவாறு பாட்டுகளின் ஓசைகள் பல்வேறு வகையாக வேறுபடுதலைக் கம்பராமாயணம் முழுக்கக் காணலாம். பிறர் காண வேண்டுமென்ற சூர்ப்பணகை நடக்கும் கவர்ச்சி மிக்க நடையழகை,

பஞ்சியொளிர் விஞ்சுகுளிர் பல்லவம் அனுங்கச்
செஞ்செவிய கஞ்சநிமிர் சீறடியள் ஆகி
அஞ்சொலின மஞ்ஞையென அன்னமென மின்னும்
வஞ்சியென நஞ்சமென வஞ்சமகள் வந்தாள்

எனப் பாடுவர். இதில் சூர்ப்பனகை நடக்கும் போது ஒலிக்கும் சலங்கை ஒலியை மெல்லெழுத்துக்களைக் கொண்டு உணர்த்தியிருக்கும் பாங்கு குறிப்பிடத்தக்கதாகும்.

இராமன் இலக்குவனனையும் சீதையையும் அழைத்துக் கொண்டு நடக்கிறான். அவனுடைய செம்மாந்த ஏறுபோற் பீடுநடை நன்கு வெளிப்படுமாறு மெய்ப்பாட்டுடன் கூடிய ஒசை நயம் பாட்டில் இழையோடுகிறது. இதனை,

வேய்யோன் ஒளிதன் மேனியின் விரிசோதியின் மறைய
பொய்யோ எனும் இடையாளொடும் இளையானொடும் போனான்
மையோ மரகதமோ மறிகடலோ மழைமுகிலோ
ஐயோ இவன்வடிவென்பதோர் அழியா அழகுடையான்

என்னும் பாடல் உணர்த்தும்.

இவ்வாறு கம்பராமாயணத்தின் ஒவ்வொரு பகுதியும் சொல் நயமும் பொருள் நயமும் கற்பனை வளமும் நிரம்பிச் சுவை மிகுந்த காப்பியமாகத் திகழ்கின்றது.

### 13.4.2 பெரியபுராணம்

#### 13.4.2.1 நூற்குறிப்பு

இது தொண்டர்சீர் பரவுவார் எனப்படும் சேக்கிழாரால் இயற்றப்பட்டது. இதற்குத் திருத்தொண்டர் புராணம் என்றும் பெயருண்டு. இது பிறமொழிச் சார்பின்றித் தமிழ்நாட்டுக்கே உரிய காப்பியமாக இடைக்காலத்தில் தோன்றியது.

கி.பி 9ஆம் நூற்றாண்டில் சுந்தரமூர்த்தி நாயனார் அறுபது நாயன்மார்களுக்கு வணக்கமாகத் திருத்தொண்டத்தொகை என்பதைப் பதினோரு பாடல்களில் பாடினார்.

கி.பி. 11ஆம் நூற்றாண்டில் நம்பியாண்டார் நம்பி என்பவர் அமைத்துத் திருத்தொண்டர் திருவந்தாதி என்னும் சிறு நூல் இயற்றினார். இது 89 பாடல்கள் கொண்டது. பிறகு பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் தோன்றிய அருண்மொழித்தேவர் என்ற சேக்கிழார் அந்தக் குறிப்புகளை விரிவுபடுத்தி இரண்டு காண்டங்களையும் 13 சருக்கங்களையும் 4286 பாடல்களையும் கொண்ட காப்பியமாக இயற்றினார்.

### 13.4.2.2 காப்பியச் சுருக்கம்

காப்பியம் பாயிரம் திருமலைச் சருக்கம் எனத் தொடங்கித் தடுத்தாட் கொண்ட புராணம் முதல் கதை தொடங்குகிறது. திருநாவலூரில் சுந்தரர் வந்து தோன்றியதும் இறைவனால் தடுத்தாட்கொள்ளப்பட்டுத் தலங்கள் பலவற்றை வழிபடுதலும், திருவாரூர் சென்று பரவையாரை மணந்து கொள்ளுதலும் பின்பு சிவபெருமான் அடியெடுத்துக் கொடுக்கத் திருத்தொண்டத் தொகை பாடி முடித்ததுமான செய்திகள் தடுத்தாட்கொண்ட புராணத்தில் கூறப்பட்டுள்ளன. பின்பு திருத்தொண்டத் தொகையில் கூறிய வரலாறுகளை அம்முறைப்படியே சொல்லுகிறார். சுந்தரர் உள்ளிட்ட 61 நாயன்மார்களைப் பாடி இறுதியில் சுந்தரரின் பெற்றோர்களாகிய சடைய நாயனாரையும் இசை ஞானியாரையும் ஒவ்வொரு பாடலால் பாடி அறுபத்து மூவர் என்ற எண்ணிக்கையை நிறைவு செய்கிறார். அதன்பின் வெள்ளானைச் சருக்கத்துடன் கதை நிறைவுறுகிறது. அச்சருக்கம் சுந்தரர் கதையை விளக்குவதாக அமைகிறது. சுந்தரர் வெள்ளானை மீதமர்ந்து கயிலை சென்ற வரலாறும் அவர் கடைசியாகப் பாடிய பதிகமொன்று அஞ்சைக்களத்தில் சேர்க்கப்பட்டமையும் சேரமான் பெருமாள் நாயனார் பாடிய திருக்கயிலாய ஞான உலாவைச் சாத்தனார் கேட்டுப் பிடவூரில் வெளிப்படக் கூறிய வரலாறும் வெள்ளானைச் சருக்கத்தில் கூறப்பட்டுள்ளன.

பெரிய புராணத்திற்கு முன்பு, சீவக சிந்தாமணி கதை நாடெங்கும் பரவியிருந்தமையையும் அதனை அறிந்த சோழ மன்னன் அந்நிலையை மாற்றுதற் பொருட்டுச் சிவநெறிக்கதை ஒன்று பாடுமாறு வேண்டினான் என்பதையும் உமாபதி சிவாச்சாரியாரின் சேக்கிழார் புராணம் விளக்குகிறது. மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை தாம் பாடிய சேக்கிழார் பிள்ளைத் தமிழில் சேக்கிழாரை, "பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவலவன்" எனச் சிறப்பித்துள்ளார். இறைவனே உலகெலாம் என அடியெடுத்துக் கொடுக்கச் சேக்கிழார் இந்நூலைப் பாடினார் என்பர்.

சேக்கிழார் தமிழகத்தின் பல ஊர்களில் வாழ்ந்த பல குலங்களைச் சார்ந்த அடியார்களின் வரலாற்றை அவரவர் இயல்பறிந்து, நேரிற் கண்டு, கேட்டுப் பழகிய பலருடைய கதைகளையும் கூறுவதால் இது காப்பிய அமைப்பில் குறைபடுமே என எண்ணச் சுந்தரரைக் காப்பியத் தலைவராக அமைத்துள்ளார். அதனால் சுந்தரர் கதையில் தொடங்கி அவர் கதையுடனேயே முடித்துள்ளார். சுந்தரர் கைலாயத்திலிருந்து புறப்பட்டு மண்ணுலகில் பிறந்து மனைவியருடன் வாழ்ந்து மீண்டும் கைலாயம் சென்று சேர்ந்தது வரை கதைக்கோப்பு அமைகிறது. இங்ஙனம் தன்னிகரில்லாத் தலைவனை உடையதாக இக்காப்பியம் அமைகிறது. மேலும் பிற பெருங்காப்பியத்திற்குரிய இலக்கணங்களும் இதில் அமைந்துள்ளன.

### 13.4.2.3 காப்பியத்தில் சில பகுதிகள்

நாயன்மார்களிடத்தில் சேக்கிழார் கொண்டிருந்த பக்தி அளவிடற்கரியது. அவர்களின் பெருமித வாழ்வை,

கூடும் அன்பினின் கும்பிடலேயன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்

எனச் சிறப்பாக எடுத்துரைக்கிறார். மேலும் சிவனடியார்கள் எப்படிப்பட்டவர்கள் என்று விளக்கும் போது அவர்களின் உயர்ந்த மனப்பான்மையையும் கொள்கையையும் எடுத்துரைக்கிறார். சிவனடியார்களின் பெருமையைச் சொன்னால் அவ்வகையில் அவர்களுக்கு நிகரானவர்கள் அவர்களே. ஒப்பற்ற தன்மையில் உலகை வெல்ல வல்லவர்கள். இடையூறு என்ற ஒன்றுமே இல்லாதவர்கள். மற்றவர்களால் அடைய முடியாத அருமையான நிலையில் நிற்பவர்கள். அன்பின் வழியாகவே இன்பத்தை நுகர்பவர்கள். நல்வினை, தீவினை முதலாக இரண்டு இரண்டாக உள்ள மாயையின் இடர்களைக் கடந்து நிற்பவர்கள் என்று சேக்கிழார் போற்றுகிறார். இதனை,

பெருமையால் தம்மை ஒப்பார்
பேணலால் எம்மைப் பெற்றார்
ஒருமையால் உலகை வெல்வார்
ஊனமேல் ஒன்றும் இல்லார்
அருமையாம் நிலையில் நின்றார்
அன்பினால் இன்பம் ஆர்வார்
இருமையும் கடந்து நின்றார்
இவரைநீ அமைவாய் என்று

என்னும் பாடல் உணர்த்தும்.

திருநாவுக்கரசரின் தோற்றப் பொலிவைச் சமயக் கண்ணோட்டத்துடன் சேக்கிழார் குறிப்பிடும் போது பக்திச் சுவை வெளிப்படுகிறது. இதனை,

தூய வெண்ணீறு துதைந்த பொன்மேனியும் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவரு சிந்தையும் நைந்துருகிப்
பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும் பதிகச் செஞ்சொல்
மேயசெவ் வாயும் உடையார் புகுந்தனர் வீதியுள்ளே

என்னும் பாடல் புலப்படுத்தும்.

சேக்கிழார் பலவகை மக்களின் வாழ்க்கை முறைகளையும் நன்கு கண்டறிந்து விளக்கியுள்ளார். எடுத்துக்காட்டாக, வேடர்கள் பற்றிய வருணனையைக் கண்ணப்ப நாயனார் பகுதியில் காணலாம். கண்ணப்பர் வேடர், வேடர்கள் மலையில் விலங்குகளை வேட்டையாடி வாழ்ந்தவர்கள்.

வேட்டைக்கு வேண்டிய தொங்கிய காதுகளை உடைய நாய்கள் அவர்கள் வாழும் பகுதியில் வளர்ந்த விளாமரத்தில் தொங்கும் வலைகள், காட்டு விலங்குகளைப் பிடிப்பதற்காக வீட்டு முற்றங்களில் பழக்கப்பட்டு வளரும் பன்றி, மான், கரடி முதலிய விலங்குகள் வீட்டின் எதிரே பாறைகளில் உலரும் தானியங்கள் முதலிய பலவற்றையும் வருணித்துள்ள பாடல்கள் சுவையானவை. இவ்வாறு பெரியபுராணம் இடைக்காலத்தில் தோன்றிய சிறந்த காப்பியமாக விளங்குகிறது.

## 13.5 தொகுத்துக் காண்போம்

- ஐம்பெருங்காப்பியங்கள் பற்றி அறிந்து கொண்டீர்கள்
- பிற்காலக் காப்பியங்களான் கம்பராமாயணம், பெரியபுராணம் பற்றி அறிந்து கொண்டீர்கள்

## 13.6 சோதித்தறியும் வினா விடைகள்

1.ஐம்பெருங்காப்பியங்கள் என்பவை எத்தனை?

………………………………………………………………………………
…

2. சிலப்பதிகாரம் உணர்த்தும் முப்பெரும் உண்மைகள் யாவை?

………………………………………………………………………………
…

3. சிலம்பும் மேகலையும் இரட்டைக் காப்பியங்கள் என்றழைக்கப்படுவதற்குக் காரணம் என்ன?

………………………………………………………………………………
…

4. மணிமேகலையின் காப்பியத் தலைவி யார்?

………………………………………………………………………………

…5. கம்பராமாயணத்தின் இடம்பெற்றுள்ள காண்டங்கள் எத்தனை?

………………………………………………………………………………
……………………………………………………………………………

6. பெரியபுராணத்தை இயற்றியவர் யார்?

..........................................................................................



## 13.7 பயிற்சி வினா

1. பெருங்காப்பியப் பண்புகள் ஐம்பெருங்காப்பியத்தில் இடம்பெற்றிருக்கும் காரணத்தைத் தொகுத்துரைக்க

2. கம்பராமாயணத்தின் தனிச்சிறப்புகளை விவரி?

3. பெரியபுராணம் திருத்தொண்டர் புராணம் என்று அழைக்கப்படுவதற்குரிய காரணத்தை விளக்குக

## 13.8 மேலும் படித்தறிக

முனைவர் பாக்கியமேரி, வகைமை நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை – 600 098, 2008.

# கூறு. 14

## இக்காலக் காப்பியங்கள் - பாரதியின் பாஞ்சாலி சபதம் - பாரதிதாசனின் பாண்டியன் பரிசு – கண்ணதாசனின் இயேசு காவியம்இ சிற்பியின் - மௌன மயக்கங்கள்.

## 14.1 அறிமுகம்

கி.பி 19, 20ஆம் நூற்றாண்டுகளில் தோன்றிய இலக்கியங்களை இக்கால இலக்கியங்கள் என்பர். கவிதை இலக்கியத்தைப் பாரதியார் காலம் முதல் வரையறை செய்வது மரபாக உள்ளது. இக்கவிதை இலக்கியங்களுள் காப்பியங்களுக்குத் தனி இடம் உண்டு. பாரதியார் பாஞ்சாலி சபதத்தையும், பாரதிதாசன் பாண்டியன் பரிசு, சஞ்சீவி பர்வதத்தின் சாரல், எதிர்பாராத முத்தம், புரட்சிக் கவி முதலியவற்றையும் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை ஆசிய ஜோதி, மருமக்கள் வழி மான்மியம் ஆகியவற்றையும், சுத்தானந்த பாரதியார் பாரத சக்தி மகா காவியத்தையம், ச.து.சு யோகியார் அகல்யா, மேரி மேக்தலேனா ஆகியவற்றையும் புலவர் குழந்தை இராவண காவியத்தையும், கவிஞர் முடியரசனார் வீர காவியம், பூங்கொடி, ஊன்றுகோல் முதலியவற்றையும், கவிஞர் கண்ணதாசன் இயேசு காவியத்தையும், சிற்பி பாலசுப்பிரமணியன் மௌன மயக்கங்கள் முதலியவற்றையும் காப்பியமாகப் படைத்துள்ளனர்.

## 14.2 குறிக்கோள்கள்

- இக்கால இலக்கியங்கள் பற்றித் தெரிந்து கொள்வீர்கள்
- பாஞ்சாலி சபதம் பற்றியும் பாரதியைப் பற்றியும் அறிந்து கொள்வீர்கள்

- பாண்டியன் பரிசு பற்றியும், பாரதிதாசன் பற்றியும் விளங்கிக் கொள்வீர்கள்
- கண்ணதாசன் பற்றியும், அவர் இயற்றிய இயேசு காவியத்தின் சிறப்பையும் உணர்ந்து கொள்வீர்கள்
- சிற்பியைப் பற்றியும், அவரின் மௌன மயக்கங்கள் கூறும் கருத்தையும் தெரிந்து கொள்வீர்கள்.
-

## 14.3 பாஞ்சாலி சபதம்

இதனை இயற்றியவர் மகாகவி பாரதியார். (1882 – 1921). இவரது இயற்பெயர் சுப்பிரமணியன் என்பதாகும். 1893இல் எட்டையபுர மன்னர் இவரது கவித்திறனை வியந்து ‘பாரதி’ என்ற பட்டத்தைச் சூட்டினார். இவரின் கவிதைகள் ஒரே தொகுப்பாக வெளிவந்துள்ளன. இவரது படைப்புகளுள் பாஞ்சாலி சபதம் காப்பிய வகைமையைச் சார்ந்ததாகும்.

### 14.3.1 அமைப்பு முறை

பாஞ்சாலி சபதம் வில்லிபாரதத்தின் சூது போர்ச்சருக்கத்தை அடிப்படையாகக் கொண்டு எழுந்தது. இது இரண்டு பாகங்களைக் கொண்டது. அழைப்புச் சருக்கம், சூதாட்டச் சருக்கம் ஆகிய இரண்டும் முதற்பாகமாகும். அடிமைச் சருக்கம், துகிலுரிதற் சருக்கம், சபதச் சருக்கம் ஆகிய மூன்றும் இரண்டாம் பாகமாகும். இக்காப்பியத்திலுள்ள பாடல்கள் அனைத்தும் நொண்டிச் சிந்து யாப்பில் அமைந்தன. முதற் பாகத்தில் 204 பாடல்களும், இரண்டாம் பாகத்தில் 104 பாடல்களுமாக மொத்தம் 308 பாடல்கள் உள்ளன.

### 14.3.2 காப்பியச் சுருக்கம்

**காப்பியத்தின் பாடுபொருள்**

மகாபாரதத்தில் உள்ள சிறு பகுதியைப் பாரதியார் தம் காவியத்துக்குப் பொருளாகக் கொண்டிருப்பினும் அது விளக்கும் பொருள் புதியதாகும். பாஞ்சாலி சபதம் தேச விடுதலையை நோக்கமாகக் கொண்டது என்பது திறனாய்வாளர்கள் பலரின் கருத்து மாறாகப் பெண் விடுதலையைக் குறிப்பது என்ற கருத்தும் உண்டு. இவ்விரு கருத்துக்கள் இருப்பினும் விடுதலை வேட்டை உணர்வைக் கருத்தில் கொண்டே பாரதியார் இக்காவியத்தைப் படைத்தார் என்பது பொருத்தமானதாகும்.

பாரதி வாழ்ந்த காலம் பாரதம் ஆங்கிலேயரிடம் அடிமைப்பட்டுக் கிடந்த காலம். ஆங்கிலேயரின் கொடுமையும், இந்தியாவின் நிலையும், பாரதியின் கண்களில் மாறிமாறித் தாக்கின. இந்நிலையில் அவனிடமிருந்த சிறந்த ஆயுதமாகிய கவிதையால் பாஞ்சாலி சபதத்தைப் பாடியுள்ளார். பாஞ்சாலி சபதத்தின் அடிநாதமாக விடுதலை உணர்வு விளங்குகின்றது. அடிமைப்பட்ட காலத்தில் அவர் பெற்ற உணர்வை ஒவ்வொரு பாடல்களும் உணர்த்துகின்றன. இதில் பாண்டவர் போன்றோர் நாட்டு மக்களாகவும், துரியோதனாதியர் ஆங்கிலேயர்களாகவும், திரௌபதி இந்தியத் தாயாகவும், திரௌபதியின் சபதம் நாட்டு விடுதலை உணர்வை வெளிப்படுத்துவதாகவும் அமைகிறது.

### 14.3.3 காப்பியத்தின் தனித்தன்மை

திரிதராட்டிரன் விதுரனிடம் பாண்டவர்களை விருந்துக்கு அழைக்கச் செல்லுமாறு கூறி துரியோதனன் சதிச் செயலைக் குறிப்பால் உணர்த்துமாறு கூறினான். இதனைக் கேட்ட விதுரன்,

போச்சது போச்சுது பாரதநாடு
போச்சுது நல்லறம் போச்சுது வேதம்
ஆச்சரியயக் கொடுங்கோலங்கள் காண்போம்
ஐய இதனைத் தடுத்தல் அரிதோ?

எனத் துயர் கொண்டான். இதில் பாரதி பாரநாட்டின் மீது கொண்ட பற்று புலப்படும்.

பாஞ்சாலி சபதம் சபதச் சருக்கத்தில் இடம்பெறும் கவிதைகள் உணர்ச்சி மிக்கனவாகும். வீமனிடம் அர்ச்சுனன்,

தருமத்தின் வாழ்வுதனைச் சூதுகவ்வும்
தருமம் மறுபடி வெல்லும் எனுமியற்கை
மருமத்தை நம்மாலே உலகங் கற்கும்
வழி தேடி விதிஇந்தச் செய்கை செய்கைதான்
கருமத்தை மென்மேலுங் காண்போம் இன்று
தருமத்தை அப்போது பொறுத்திருப்போம் காலம் மாறும்
தனுஉண்டு காண்டிவம் அதன்பேர்
என்று கூறும் பகுதியும், பாஞ்சாலி
ஆம், தேவி பராசக்தி ஆணையுரைத்தேன்

பாவிதுச்சாதனன் செந்நீர் - அந்தப்
பாழ்த்துரியோதனன் ஆக்கை இரத்தம்
மேவி இரண்டுங் கலந்து – குழல்
மீதினிற் பூசி நறுநெய் குளித்தே
சீவிக் குழல் முடிப்பேன் யான் - இது
செய்யு முன்னே முடியேன்

எனச் சபதமுரைக்கும் பகுதியும் குறிப்பிடத்தக்கனவாகும்.

பாஞ்சாலி சபதத்தில் எளிய உவமைகள் அடுக்கடுக்காகக் கூறப்பட்டுள்ளமை தனிச் சிறப்பாகும். தருமன் திரௌபதியைப் பணயமாக வைத்தலைப் பாரதியார்,

வேள்விப் பொருளினையே – புலைநாயின்முன்
மென்றிட வைப்பவர் போல்
நீள்விட்டப் பொன்மாளிகை – கட்டிப்பேயினை
நேர்ந்து குடியேற்றல் போல்
ஆள்விற்றுப் பொன்வாங்கியே செய்த பூணையோர்
ஆந்தைக்குப் பூட்டுதல் போல்

என அடுக்கடுக்கான உவமைகளால் கூறுவர். இதில் வேள்விப் பொருள் பொன்மாளிகை, பொன் அணி ஆகியன திரௌபதிக்கும் புலைநாய், பேய், ஆந்தை என்பன துரியோதனனுக்கும் உவமைகளாகும்.

## 14.4 பாண்டியன் பரிசு

இதனை இயற்றியவர் பாரதிதாசன் (1891 – 1964). இவரது இயற்பெயர் சுப்புரெத்தினம் என்பதாகும். இவரது கவிதைகள் நான்கு தொகுதிகளாக வெளிவந்துள்ளன. இவர் பல காப்பியங்களைப் படைத்துள்ளார். அவற்றுள் குறிப்பிடத்தக்கது பாண்டியன் பரிசு. இது 1943ல் எழுதி வெளியிடப்பட்டது. நானூறு எண்சீர் விருத்தங்களைக் கொண்டது. 94 இயல்களைக் கொண்டது.

### 14.4.1 காப்பியச் சுருக்கம்

கதிர்நாட்டைக் கதிரைவேல் என்னும் அரசன் அண்டு வந்தான்.அவன் மனைவி கண்ணுக்கினியாள். இவள் உடன்பிறந்த அண்ணன் நரிக்கண்ணன். வேழ நாட்டுப் படைத்தலைவனாக விளங்கினான். இவன் கதிர் நாடு தன் மூதாதையரின் நாடு என்றும் அது

தனக்கே அந்நாட்டின் உரிமை சேரவேண்டும் என்றும் வேழ மன்னனிடம் கூறி அவனைக் கதிர்நாட்டின் மீது படையெடுக்கச் செய்தான். வேழப்படை கதிர்நாட்டை நோக்கிச் சென்றது. கதிர் நாட்டில் வேவுபார்ப்போர் பகைப்படை வருவதைப் பார்த்து அரசனிடம் கூறினர். கதிரைவேலன் தன் மனைவியிடம் நரிக்கண்ணன் சூழ்ச்சியாலேயே வேழ மன்னன் தன் நாட்டின் மீத படையெடுத்தான் என்று கூறினான். அதனால் தன் சகோதரனை மாய்க்க அரசி எண்ணம் கொண்டாள். வீரப்பன் என்னும் திருடர் தலைவனின் மனைவியும், வேலன் என்னும் வீரனின் தாயுமாகிய ஆத்தாக்கிழவி கதிர் நாட்டரசனின் மகன் அன்னத்திடம் நாட்டின் நிலையை எடுத்துரைத்தாள்.

இரு நாட்டுப் படைகளும் மோதின. கடும்போர் நிகழ்ந்தது. கண்ணுக்கினியாள் தன் அண்ணனைத் தேடிச் சென்றாள். வேழ மன்னனுடன் போர் செய்து கொண்டிருந்த கதிரைவேலனை நரிக்கண்ணன் பின்னால் நின்று கொன்றான். இறந்து கிடந்த தன் கணவனது உடலைக் கண்டு கண்ணுக்கினியாள் அழுது புலம்பினாள். அவன் புறப்புண் கண்டு நாணி வெறுத்தாள். அப்பொழுது வேழ மன்னன், ’எவனோ ஒருவன் பின்பக்கமாக வந்து மன்னனைக் கொன்று விட்டான் என்று கூறினான்.

கதிர்நாட்டுஅரண்மனைக்குள் வேழப்படை புகுந்தது. நரிக்கண்ணன் தன் தங்கை கண்ணுக்கினியாளிடம் நல்லவன் போல் நடித்துப் பேசினான். இவ்வமயத்தில் கரிய உடை பெற்ற ஒருவன் வந்து, ‘நரிக்கண்ணனே அரசனைக் கொன்றான்’ என்று கூறினான். உடனே நரிக்கண்ணன் அரசியை வாளால் வெட்டிக் கொன்று விடுகிறான். பின்னர் நரிக்கண்ணன் அன்னத்தைத் தேடிச் சென்றான். நரிக் கண்ணனின் இச்செயல்களைக் கரிய உடை பெற்ற வேழ நாட்டு வீரன் வேழ மன்னனிடம் கூறினான். வேழ மன்னன் வியப்படைந்தான்.

வேழப்படை அரண்மனைக்குள் புகுந்து கொள்ளையிட்டபோது நரிக்கண்ணனும் புகுந்து அரண்மனைப் பேழையாகிய பாண்டியன் பரிசை எடுத்துப் பக்கத்திலிருந்த ஒரு வீரனிடம் கொடுத்துத் தேரோட்டிக் குப்பனிடம் சேர்க்குமாறு கூறினான். ஆனால் அதனைப் பெற்றவன் மாறுவேடத்தில் நின்று கொண்டிருந்த வீரப்பனே ஆவான். நரிக்கண்ணன் அன்னத்தைத் தேடித்திரிந்த போது குப்பன் வந்தான்.

அவனிடம் நரிக்கண்ணன் பேழை கிடைத்ததா? என்றான். நரிக்கண்ணன் தான் ஏமாந்ததை உணர்ந்தான்.

நரிக்கண்ணன் வேழ நாட்டு மன்னனிடம் கதிர்நாட்டு உரிமையைத் தனக்கே வழங்குமாறு இரக்கம் தோன்றப் பேசினான். அவனிடம் வேழ மன்னன் கதிர்நாடு உன்னுடையது என்பதற்கு ஏதேனும் பட்டயம் உண்டா? என்று கேட்டான். நரிக்கண்ணனோ இல்லை என்றான்.

வீரப்பன் என்னும் திருடர் தலைவன் தன் தோழர்களிடம் தன் வரலாற்றினைக் கூறிப் பேழை தன்னிடம் வந்ததையும் கூறினான். அப்பேழையைத் தானே ஓரிடத்தில் பாதுகாப்பாக வைத்திருக்க இருப்பதாகக் கூறிப் புல்லூர்ச் சிறுகுடிசைக்கு வந்தான். அங்கு ஆத்தாக்கிழவி அன்னத்திடம் பாண்டியன் பரிசுப்பேழையின் வரலாற்றைக் கூறிக் கொண்டிருந்தாள். அதனை மறைந்திருந்து வீரப்பன் கேட்டான். பேழையைத் தன் பாதுகாப்பிலேயே வைத்துக்கொள்ள எண்ணித் திரும்பினான்.

நரிக்கண்ணனைக் கதிர்நாட்டு மன்னனாக முடிசூட இருப்பதை ஒருவன் முரசறைந்து மக்களுக்குத் தெரிவித்தான். இந்நிலையில் பேழையை அரண்மனையில் தேடிய நரிக்கண்ணனின் ஆட்கள் புல்லூர்ச் சிறுகுடிசையை நோக்கி வந்தனர். தன் தாய்க்கும் அன்னத்திற்கும் ஆபத்து நேரக்கூடும் என்பதை சீனிக்கணக்காயர் மூலம் அறிந்த வேலன் புல்லூரை நோக்கி விரைந்தான். வேலனும் நரிக்கண்ணனின் ஆட்களும் மோதினர். இச்சமயத்தில் ஆத்தாவும் அன்னமும் உருமாறி வெளியேறினர். சீனிக்கணக்காயர் இவர்களுக்குத் துணைநின்றார். மூவரும் அரண்மனைக்குச் சென்று வேழ மன்னனிடம் அனைத்தையும் எடுத்துரைத்தனர். ஆத்தாக்கிழவியையும் அன்னத்தையும் எடுத்துரைத்தனர். ஆத்தாக்கிழவியையும் அன்னத்தையும் பாதுகாக்க வேழ மன்னன் முடிவு செய்தான். அன்னம், ‘என் பேழை அரண்மனையில் இருக்கும், அதைக் காட்டச் செய்யுங்கள்’ என்றாள். வேழ மன்னன் படையினை அனுப்பிப் பேழையைத் தேடச் செய்தான். அரண்மனையில் பேழை இல்லை. அரசர் பேழையைத் தேடச் சொல்லியுள்ளார் என்பதை மாறுவேடத்தில் இருந்த வீரப்பன் கேட்டதும் அவ்விடத்தைவிட்டு ஓடினான்.

ஓடியவனின் கணுக்காலை ஆத்தா வெட்டினாள். அவளது இடதுகையை அவன் வெட்டினான். பின்னர் இருவரும் ஒருவரை ஒருவர் அறிந்து கொண்டனர்.

அன்னத்தின் மூலம் உண்மை உணர்ந்த வேழ மன்னன் நரிக்கண்ணனைச் சீறினான். ஆன்னம் ‘என் பேழையைத் தேடித் தருபவனையே மணப்பேன்’ என்றாள். இச்செய்தி முரசறையப்பட்டது.

நரிக்கண்ணனும் அவன் அமைச்சனும் தனித்துப் பேசினர். பேழை தென்மலையிலேயே இருக்க வேண்டும் என்று முடிவு செய்தனர். ஆங்கு பிறரை வரவிடாமல் செய் ‘எட்டி’ என்பவனைப் பூதம்போல் வேடம் பூணச் செய்து மலைஏறிக் கூச்சலிடச் செய்தனர். நரிக்கண்ணனின் ஆட்கள் தவிர மற்றவர்கள் அஞ்சி ஓடினர். நரிக்கண்ணனின் ஆட்கள் தென்மலையில் பேழையைத் தேடினர். நரிக்கண்ணனின் அமைச்சன் மகன் நீலனும் பேழையைத் தேடினான்.

அன்னமும் தோழி நீலியும் படகில் ஏறி உலாவினர். பெருங்காற்றும் மழையும் பெய்யவே படகு கவிழ்ந்தது. ஆத்தாக்கிழவியின் மகன் வேலன் இருவரையும் காப்பாற்றித் தன் குடிசைக்குக் கொண்டு வந்தான். வேலனும் அன்னமும் அன்பு கொண்டனர்.

நீலன் நீலியைக் கண்டு, பேழை பற்றிப் கேட்டான். தக்க செய்தி கிடைக்கவில்லை. அன்னம் ஒரு சோலையை அடைந்து தனித்திருந்தாள். அவளிடம் துறவி ஒருவன் வந்து பேழை அகப்படும் என்றான்.

வீரப்பன் தன் தோழர்களின் எண்ணப்படி, பல பூதங்களைத் தென்மலையில் தோன்றச் செய்து நரிக்கண்ணனின் ஆட்களை விரட்டினான். நரிக்கண்ணனின் பூதச் சூழ்ச்சி பலிக்கவில்லை. துறவி ஒருவன் அன்னத்தின் ஆட்களுக்கு உதவுகிறான் என்பதை நீலி நீலனிடம் கூறினான்.

நீலன் நரிக்கண்ணனிடம் சென்று அஞ்சாதிருக்கச் சொல்லி விட்டு, அரண்மனையில் நரிக்கண்ணனின் ஆட்கள் பூதமாக வரவிருப்பதைக் கூறினான். அன்னம் வேழ மன்னனிடம் பூதங்களை அடித்துக் கொல்வதற்கு அனுமதி கேட்டாள். அவனும் வழங்கினான். அன்னம் பூதமாக வந்த நரிக்கண்ணனைக் கொன்றாள். அவனது அமைச்சனை மட்டும் கொல்லாது விட்டு வைத்தனர்.

நாளைக்குப் பேழை வரும் என்பதை நீலன் நீலி வாயிலாகக் கேட்டறிந்தான். அவ்வாறு பேழையுடன் வருவோனை மறித்துப் பறிக்கச் சொல்லித் தன் ஆட்களை ஏவினான். வேலன் பேழையினைத் தூக்கிக் கொண்டு குதிரையில் வந்தான். நீலனின் ஆட்களும் வேலனின் ஆட்களும் மோதினர். வேலன் பேழையைப் பாதுகாக்கக் குதிரையைத் தட்டினான். குதிரை தெற்கு நோக்கிச் சென்றது. இச்செய்தியைத் துறவிக்குத் தெரிவித்தனர்.

ஆத்தாவுடன் படுத்திருந்த அன்னத்தை விடியும் போது காணவில்லை. அன்னம் கொலை செய்யப்பட்டுப் புன்னை மரத்தடியில் புதைக்கப்பட்டாள் என்று அவளிடம் சொல்லப்பட்டது. பேழையுடன் வந்த வேலன் இச்செய்தியை உண்மை என்ற நம்பிப் பலவாறு அழுதான். இடுகாட்டிற்குச் சென்றும் புலம்பினான். பெண்ணுலகை வெறுத்துப் பேசினான். அப்பொழுது அவனுக்குப் பின்னால் அன்னம் வந்து நின்று வேலனை அழைத்தாள்.

அன்னம் நீலன் வீட்டில் தான் இருந்ததைக் கூறினான். வேலன் உண்மை உணர்ந்து நீலனின் சூழ்ச்சியைத் தெரிவித்தான். அனைவரும் ஒன்று சேர்ந்தனர். பேழை வேழ மன்னனிடம் காட்டப்பட்டது. முடிசூட்டு விழாவும் அன்னம் வேலன் திருமணமும் நடைபெற்றன. அனைவரும் வாழ்த்தினர். இவ்வாறு பாண்டியன் பரிசு காப்பியத்தின் கதை அமைந்துள்ளது.

### 14.4.2 காப்பியத்தின் தனித்தன்மை

பாரதிதாசன் உணர்ச்சிமிக்க நடையையும், பொதுவுடைமைச் சிந்தனையையும், மூடநம்பிக்கையை நையாண்டி செய்து படைத்திருப்பதும் இக்காப்பியத்தின் தனிச்சிறப்பாகும்.

அன்னத்திடம் வேலன்,

எனைஈன்ற தந்தைக்கும் தாய்க்கும் மக்கள்
இனம்என்ற தமிழ்நாடு தனக்கும் என்னால்
தினையளவு நலமேனும் கிடைக்கு மென்றால்
செத்தொழியும் நாள் எனக்குத் திருநாளாகும்

என்று கூறும் பகுதி வேலனின் உணர்ச்சியை வெளிப்படுத்துகிறது.

வீரப்பன் தன் தோழர்களிடம்,

இருட்டறையில் உள்ளதடா உலகம் சாதி
இருக்கின்ற தென்பானும் இருக்கின்றானே
மருட்டுகின்ற மதத்தலைவர் வாழ்கின்றாரே
வாயாடியும் கையாடியும் மறைவது எந்நாள்
சுருட்டுகின்றார் தம் கையில் கிடைத்தவற்றைச்
சொத்தெல்லாம் தமக்கென்று சொல்வார் தம்மை
வெருட்டுவது பகுத்தறிவே இல்லையாயின்
விடுதலையும் கெடுதலையும் ஒன்றேயாகும்
எல்லாருக்கும் எல்லாம் என்று இருப்பதான
இடம்நோக்கி நடக்கின்றது இந்த வையம்
கல்லாரைக் காணுங்கால் கல்வி நல்காக்
கசடர்க்குத் தூக்குமரம் அங்கே உண்டாம்
இல்லாரும் அங்கில்லை பிறன் நலத்தை
ஏனதென்று தனியொருவன் சொல்லான் அங்கே
நல்லாரே எல்லாரும் அவ்வையகத்தில்
நமக்கென்ன கிழியட்டும் பழம் பஞ்சாங்கம்

என உரைப்பதில் பாரதிதாசனின் பொதுவுடைமைக் கருத்தக்களும் சமுதாய அவலத்தை எள்ளும் போக்கம் இலட்சிய சமுதாயத்தைப் படைக்கும் வேகமும் விளங்கும். மேலும் வீரப்பன் தன் தோழர்களிடம்,

பொருளாளி திருடர்களை விளைவிக்கின்றான்
பொதுவுடை மையோன் திருட்டைக் களைவிக்கின்றான்

எனக் கூறுவதும் பாரதிதாசனின் பொதுவுடைமைக் கருத்தை விளக்குவதாகும

பாரதிதாசன் பூதம் பற்றிய மக்களது மூடநம்பிக்கைகளை அழகாக நையாண்டி செய்துள்ளார். நரிக்கண்ணன் ஏற்பாட்டின் படி எட்டி என்பான் பூதம் போல் மலை மேல் நின்று கூச்சலிட்டான். அதனைக் கண்ட மக்கள்,

தொத்துகின்ற வெளவால்போல் மரத்தின்மீதும்
தூங்குகின்ற புனுைபொல் பரண்கள்மீதும்
முத்தெடுக்கும் மனிதர்போல் கிணற்றினுள்ளும்
மூட்டையினைப் போல் வீட்டின் இடுக்கி னுள்ளும்

மொய்த்திருந்தனர் எனக் கவிஞர் எளிய உவமைகளால் காட்டியுள்ளார்.

## 14.5 இயேசு காவியம்

இது கவிஞர் கண்ணதாசனால் (1927 – 1981) இயற்றப்பட்டது. முத்தையா என்பது இவரது இயற்பெயர். சிவகங்கை மாவட்டம் சிறுகூடல்பட்டியில் தோன்றியவர். மாங்கனி, ஆட்டனத்தி-ஆதிமந்தி, தைப்பாவை, கவிதாஞ்சலி ஆகிய சிறுகாப்பியங்களையும் எழுதியுள்ளார்.

### 14.5.1 நூற்குறிப்பு

இயேசு காவியம் 1982இல் முதற்பதிப்பாக வெளிவந்துள்ளது. இயேசுவின் வாழ்க்கை வரலாற்றைப் பாடுவதாக இக்காப்பியம் அமைந்துள்ளது. இது பாயிரத்துடன் ஐந்து பாகங்களைக் கொண்டது. முதற்பாகத்தில் இயேசுவின் பிறப்பு பாடப்பட்டுள்ளது. இது ஆதியிலே வார்த்தை இருந்தார் என்பது முதல் எருசலேம் திரு யாத்திரை வரை 16 பாடல்களாக உள்ளது. இரண்டாம் பாகத்தில் தயாரிப்பு பாடப்பட்டுள்ளது. இதில் மனந்திரும்புங்கள், இவரே என் அன்பார்ந்த மகன், தங்கம் புடமிடப்படுகிறது ஆகிய மூன்று பாடல்கள் உள்ளன. மூன்றாம் பாகத்தில் இயேசுவின் பொதுவாழ்வு பாடப்பட்டுள்ளது. இதில் வாருங்கள் என் பின்னே என்பது முதல் சாவு மகிமையின் வாயில் என்பது வரை 97 பாடல்கள் உள்ளன. இவை சாதனையும் போதனையும், எருசலேமை நோக்கி, எருசலேமிற்குள் ஆகிய மூன்று பகுதிகளாகப் பகுக்கப்பட்டள்ளன. நான்காம் பாகத்தில் இயேசுவின் பாடுகள்

இடம்பெற்றுள்ளன. இதில் பன்னிருவரில் ஒருவன் என்பது முதல் அன்னையில் மடியில் என்பது வரை 25 பாடல்கள் உள்ளன. இவை நேரம் நெருங்குகிறது, பாடுகளின் பாதை ஆகிய இரு பகுதிகளாகப் பகுக்கப்பட்டுள்ளன. ஐந்தாவது பாகத்தில் இயேசுவின் மகிமை பாடப்பட்டுள்ளது. இது உயிர்த்தெழுந்தார் என்பது முதல் மங்களம் ஈறாக எட்டுப் பாடல்களாக அமைந்துள்ளது. இவ்வாறு 149 பாடல்களையுடையதாக இயேசு காவியம் பாடப்பட்டுள்ளது.

### 14.5.2 காப்பியத்தின் தனித்தன்மை

கவிஞர் கண்ணதாசன் இயேசு காவியத்தை,

ஆதியில் இருந்தார் அவர்பெயர் வாக்கு
ஆண்டவ ருடனே அவர்தாம் இருந்தார்
ஆண்டவ ராகவும் அவரே இருந்தார்
அவரிட மிருந்தே அனைத்தும் தோன்றின
ஆவி என்பது அவருள் இருந்தது
உயிரெனும் அஃதே ஒளியாய் நின்றது

எனத் தொடங்கியுள்ளார். இயேசுவை தாலாட்டும்பொழுது

சோதிமணிப் பெட்டகமே சுடரொளியே யூதருக்கு
ஆதிமகனாய்ப் பிறந்த அருந்தவமே தாலேலோ

எனத் தாலாட்டும் பாங்கு போற்றுதற்குரியதாகும். இயேசு மாளிகையிலோ மஞ்சத்திலோ வந்து பிறக்காமல் ஏழையின் தொழுவத்தில் வந்து பிறந்துள்ளமையை,

மாளிகையும் இல்லைகாண் மஞ்சமில்லை என்றாலும்
ஏழைத் தொழுவில் வந்த இறைமகனே தாலேலோ

எனத் தாலாட்டுகின்றார். இயேசு எளிய மனத்தோர் பேறுபெற்றோர், துயரம் உருவோர் பேறுபெற்றோர், சாந்தம் உடையோர் பேறுபெற்றோர், நீதியின் பால் தாகங் கொண்டோர் பேறு பெற்றோர், இரக்கம் உடையோர் பேறுபெற்றோர், தூய மனத்தோர் பேறுபெற்றோர், அமைதி கொடுப்போர் பேறுபெற்றோர்,

நீதிக்காகத் துன்பம் உறுவொர் பேறுபெற்றோர் என எண்வகை மனிதர்களைப் பற்றிக் கூறிய மலைப் பொழிவைக் கண்ணதாசன் அழகாகப் பாடியுள்ளார். ஊதாரணமாக

தூயமனத் தோர் பேறுபெற் றோரெனத்
தூயமகன் சொன்னார் - அவர்
தோன்றும் கடவுளை நேரில் காண்பார்
சொர்க்கம் வருமென்றார்
காயும் உடலை வாட்டி யெடுப்பது
காமம் கனவுகளே – ஒரு
காலம் மயக்கும் இன்பங்கள் எல்லாம்
மறுநாள் கவலைகளே
வாயும் வயிறும் ஆசையில் விழுந்தால்
வாழ்க்கை பாலைவனம் - அவர்
தூய மனத்தில் வாழ நினைத்தால்
எல்லாம் சோலைவனம்

என்னும் பாடல் சான்றாகும். இயேசு குமாரன் பாரச் சிலுவையைத் தாங்கி நடத்தலை,

தலையினிலே முன்வலியும் தாளாத உள்வலியும் தாக்கி னாலும்
நிலையினிலே குன்றாமல் நெடுஞ்சிலுவை சுமந்தபடி தேவ நேயன்
அலைஅலையாய் வருவோர்முன் அசைந்தாடி நடக்கின்றார் அதனைப் பார்த்து
நிலைகுலையா வஞ்சகரும் உதிரத்தால் அழுதனரே நெஞ்சம் வெர்த்து

எனப் பாடுவதில் உணர்ச்சி பொங்குதல் புலனாகும்.

இவ்வாறு இயேசு காவியம் எளிய இனிய நடைகளைக் கொண்டதாய் உணர்ச்சி மிக்கதாய் காணப்படுகிறது.

## 14.6 மௌன மயக்கங்கள்

இது சிற்பி பாலசுப்பிரமணியன் அவர்களால் இயற்றப்பட்டது. இவர் 1936இல் கோவை மாவட்டம் ஆத்துப் பொள்ளாச்சியில் பிறந்தவர். 1989 முதல் கோவை பாரதியார் பல்கலைக்கழகத்தில் தமிழியல் துறைத் தலைவராகப் பணியாற்றியவர். 1963இல் இவரது முதல் கவிதைத்

தொகுதி 'நிலவுப்பூ' வெளிவந்தது. இதுவரை எட்டுக் கவிதைத் தொகுப்புகள் வெளிவந்துள்ளன. நிலவுப்பூ, சிரித்த முத்துக்கள், ஒளிப்பறவை, சர்ப்பயாகம், மௌன மயக்கங்கள், புன்னகை பூக்கும் பூனைகள், சூரிய நிழல், இறகு என்பன அக்கவிதைத் தொகுப்புகளாகும்.

**14.6.1 நூற்குறிப்பு**

இவற்றுள் மௌன மயக்கங்கள் 1982இல் வெளிவந்துள்ளது. இது புதுக்கவிதையில் வெளிவந்த முதல் கதைக்கவிதை (Fiction Poetry) ஆகும். இந்நூலின் என்னுரையில் சிற்பி, 'பரத்தமை என்ற மாறாத சாபத்திலிருந்து பெண்குலம் விடுதலை அடையமுடியாதபடி, பற்றிப் படர்ந்திருக்கும் இன்றைய சமூகச் சூழ்நிலை ஏற்படுத்திய சலனங்கள்தான் இந்தக் கதையின் அவனும் அவளும்' எனக் கூறுவது இக்காப்பியத்தின் கருவை விளக்கும். இக்காப்பியம் 56 கவிதைகளைக் கொண்டதாக அமைந்துள்ளது.

**14.6.2 காப்பியச் சுருக்கம்**

அவன் கைநிறையச் சம்பளம் தரும் நிதி நிறுவனத்தில் பணிபுரிபவன். அவனைக் குங்குமப் பொட்டுத் தரகன் சிங்காரம் பிள்ளைத் தெருவில் இருக்கும் விபச்சார விடுதிக்கு அழைத்துச் செல்கிறான். அங்கு அவன் அவளைச் சந்திக்கிறான். அவள் தன் பெயர் லதா என்று கூறுகிறாள். ஆனால் அவளது உண்மையான பெயர் மல்லிகா. அவன் மல்லிகாவை மனதார விரும்புகிறான். ஒவ்வொரு மாதமும் சம்பளம் வாங்கிய முதல் வாரத்தில் அவளைச் சந்திப்பதை வழக்கமாகக் கொள்கிறான். அவன் அவளை மூன்றாம் முறை சந்திக்கும்போது அவன் அவளிடம் தன் காதலைக் கூறுகிறான். அவன் அவளது காதலை ஏற்க மறுக்கிறாள். தந்தை இறந்த பின் குடும்பச்சூழல் காரணமாக, சமூகத்தால் இந்த இழிதொழிலுக்குத் தள்ளப்பட்ட அவலத்தை விவரிக்கின்றாள்.

மல்லிகாவின் நினைவு அவனை வாட்டுகிறது. அதனால் அவனுக்கு அலுவலகத்தில் வேலை செய்ய இயலவில்லை. தடுமாற்றம் ஏற்படுகிறது. அவனது இந்நிலையைத் தொழிற்சங்கத் தலைவராகிய தோழர் கண்டுகொள்கிறார். அவனது நிலைக்குக் காரணம் கேட்கிறார

. அவன் மல்லிகா மீது கொண்ட காதலைக் கூறுகிறான். தோழர் எவ்வளவோ எடுத்துக் கூறியும் மல்லிகாவைத் திருமணம் செய்து கொள்வதில் பிடிவாதமாக இருக்கின்றான். தோழர் அவனுக்கு மல்லிகாவைத் திருமணம் செய்து வைப்பதாக உறுதி கூறுகிறார். மல்லிகாவை வைத்து விபச்சாரம் செய்யும் தரகர்களைச் சென்று சந்திக்கின்றார். சட்டத்தை எடுத்துக் கூறி மிரட்டி அவர்களிடமிருந்து மல்லிகாவை மீட்டு வருகிறார். அவனுக்கம் மல்லிகாவுக்கும் பதிவுத் திருமணம் செய்து வைக்கிறார்.

அவனும் மல்லிகாவும் இனிமையாக இல்லறம் நடத்துகின்றனர். ஆனால் அவர்களைச் சுற்றி வாழும் மக்களும் அவனது அலுவலக நண்பர்களும் இகழ்ச்சியாக நோக்குகின்றனர். அவர் அவர்களைப் பற்றிக் கவலை கொள்ளாமல் வாழ்க்கையை இன்பமாக நடத்துகிறான்.

மல்லிகாவை வைத்து விபச்சாரம் செய்தவர்கள் திரும்பவும் தொழிலுக்கு வராவிட்டால் அவளது கணவனைக் கொன்று விடுவதாகக் கூறி மிரட்டுகின்றனர். அவர்களுக்குப் பயந்த மல்லிகா கணவன் அன்பாய் வாங்கித்தந்த மோதிரத்தையும் வளையல்களையும் கழுத்துச் சங்கிலியையும் இழக்கிறாள். மிரட்டல் தொடர்கிறது. வேறு வழியின்றித் தன்னைத் தேட வேண்டாம் என்று கடிதம் வழுதி வைத்துவிட்டு, மல்லிகா அவனை விட்டுச் சென்றுவிடுகிறாள். அவன் பெரிதும் துன்பம் கொள்கிறான். தோழரை நாடி நடந்ததைக் கூறுகிறான். அவர் எப்படியும் தேடிவிடலாம் என்று ஆறுதல் கூறுகிறார். அவனும் தோழர் வீட்டிலேயே தங்கியிருக்கிறான். தோழருக்கு ஒரு கடிதம் வருகிறது. அதில் மல்லிகா தனக்கு அவன் மேல் உள்ள அன்பை விளக்கி, நெருக்கடி காரணமாக அவனை விட்டு ஊருக்கு வந்துவிட்ட செய்தியை எழுதியிருக்கிறாள். தோழர் மறுநாளே அவளது ஊருக்குச் சென்று அவளை அழைத்து வருவதாகக் கூறுகிறார். அதன்படி அவனை அழைத்துவரச் செல்கிறார். அவனை எப்படியும் தோழர் அழைத்து வந்து விடுவார் என்று அவன் ஆவலோடு காத்திருக்கிறான். அவனை அழைத்து வர இயலாமல் வெறுங்கையோடு திரும்பும் தோழர் ஒரு நாளிதழில் புகைப்படத்தோடு கூடிய செய்தியைக் காட்டுகிறார். அதில் விபச்சாரத் தொழிலில் ஈடுபட, தாய் வற்புறுத்தியது தாங்காமல் இளம்பெண் மல்லிகா தூக்கிட்டுத்

தற்கொலை என்ற செய்தி உள்ளது. அதனைக் கண்டு மயங்கிய அவனைத் தோழரும் தோழரின் மகள் கல்பனாவும் கண்ணை இமை காப்பது போல் காக்கின்றனர். அங்கு இருக்கும் அவன் தோழரின் வீட்டில் இருந்த நூல்களைப் படிக்கின்றான். மனம் தெளிவடைகின்றது. கல்பனாவின் பேச்சும் அவனைத் தெளிவடையச் செய்கின்றது. அவனது மௌன மயக்கங்கள் கலைகின்றன. பெண் விடுதலைக்காகவும் சமூக விடுதலைக்காகவும் கல்பனா செய்யும் போராட்டங்களில் அவனும் கலந்து கொள்கின்றான். தோழர் அவனுக்கு

இரண்டு கண்கள்
இரண்டு கண்களில்
மயங்கிக் கிடப்பது
அல்ல வாழக்கை
நான்கு கண்கள்
ஒரே திசை வழியில்
நோக்கி நிற்பதே
லட்சிய வாழ்க்கை

என்று அறிவுரை கூறுகிறார். அவன் மௌன மயக்கங்கள் நீங்கித் தெளிந்த மனத்துடன் சமூக விடுதலை இயக்கத்தில் பங்கு கொள்கிறான். இவ்வாறு இக்காப்பியத்தின் கதை அமைந்துள்ளது.

### 14.6.3 காப்பியத்தின் தனித்தன்மை

விபச்சாரத்திற்கு நிற்கும் பெண்கள் அரைகுறை ஆடையில் இருக்க அவர்கள் இருக்கும் வீட்டின் கதவுகளும் ஜன்னல்களும் திரைச்சீலைகளால் அலங்கரிக்கப்பட்டிருக்கும் முரண்பாட்டைக் கவிஞர்,

திரைச் சீலைகளால்
ஜன்னலும் கதவும்
பத்தினி வேடம் பூண்டிருந்த
அடுத்த அறையில்
வியாபாரப் பொருள்கள்
அரைகுறை ஆடையில்

என்று கூறுவது நயமானதாகும். சிங்காரம் பிள்ளைத் தெருவிலிருந்த விபச்சாரம் செய்தவர்கள் நெருக்கடி காரணமாக இடத்தை மாற்றுகின்றனர். இவ்வாறு மாற்றப்படும் இடத்தின் முகவரியைக் கவிஞர்,

போலீஸ் முற்றுகையில்
இடமாற்றம்
17, ராமர் கோயில் தெரு

எனக் குறிப்பிடுவது, அவரது அங்கத உணர்வை விளக்கும். இராமன் ஒருவனுக்கு ஒருத்தி என்ற கொள்கையைப் பின்பற்றியவன். அவனை வழிபடும் கோவில் உள்ள தெருவில் விபச்சாரம் நடப்பது கொடுமையானது என்பதைக் கவிஞர் அங்கதமாகக் கூறியுள்ளார்.

கவிஞர் இக்காப்பியத்தில் அதிக அளவில் உவமைகளைப் பயன்படுத்தியுள்ளார். அவர் காட்டும் உவமைகள் எளிமையானவையாகும்.

கோட்டும் மழையில்
இடிவிழுந்த பனைமரம்
தீப்பிடித்துக் கொண்டதுபோல்
என் உடலெல்லாம்
எரிந்து தகித்தது'
பாலில் ஊறிய
ரொட்டியைப் போல்
விடிகாலையின் முகம்
அழுதழுது
கனத்துப் பருத்திருந்தது'
'கூட்டத்தில் துழாவும்
ஜேப்படிக்காரன் விரல்கள்போல்
தோட்டத்தை என்
விழிகள் துழாவின

இவ்வாறு கவிஞர் பயன்படுத்தும் உவமைகள் காலத்திற்கேற்ப அமைந்துள்ளமை விளங்கும். ஆவன் மல்லிகாவும் நினைத்துத் தனக்குள் பேசிக்கொள்ளும்போது

திரும்பத் திரும்ப நான்
பார்க்கவும் கேட்கவும்

அறவே விரும்பாத
அவையும் இரண்டு
ஒன்று
என் வள நாட்டின்
தீரா வறுமை
இன்னொன்று
உன்தரிசனம் பெறாத
வாழ்வின் வெறுமை

என்று கூறுகிறான். இதில் கவிஞர் சமுதாயத்தின் மீது கொண்டுள்ள அக்கறை புலனாகும். கவிஞர் இக்காப்பியத்தில் அவன் கனவு காணுதலையும் கடிதங்களையும் உத்திகளாகக் கொண்டு கதையைச் சொல்லிச் செல்லும் முறை அமைந்துள்ளது. பின்னோக்கு உத்தியும் காணப்படுகிறது.

## 14.7 தொகுத்துக் காண்போம்

- இக்கால இலக்கியங்கள் பற்றித் தெரிந்து கொண்டீர்கள்
- பாஞ்சாலி சபதம் பற்றியும் பாரதியைப் பற்றியும் அறிந்து கொண்டீர்கள்
- பாண்டியன் பரிசு பற்றியும், பாரதிதாசன் பற்றியும் விளங்கிக் கொண்டீர்கள்
- கண்ணதாசன் பற்றியும், அவர் இயற்றிய இயேசு காப்பியத்தின் சிறப்பையும் உணர்ந்து கொண்டீர்கள்
- சிற்பியைப் பற்றியும், அவரின் மௌன மயக்கங்கள் கூறும் கருத்தையும் தெரிந்து கொண்டீர்கள்.

## 14.8 சோதித்தறியும் வினாக்கள்

1. பாஞ்சாலி சபதத்தின் காப்பியக் கருப்பொருள்களைக் கூறுக

..........................................................................................................................

2. பாண்டியன் பரிசு காப்பியத்தின் முதன்மைக் கதைமாந்தர் பெயர்களைச் சுட்டுக

...........................................................................................................................................
...............

3. கண்ணதாசன் பற்றிக் குறிப்பு வரைக

...........................................................................................................................................
...........

4. மௌன மயக்கங்கள் உணர்த்தும் காப்பியத்தின் பாடுபொருளைக் குறிப்பிடுக

14.9 பயிற்சி வினா

1. பாரதிதாசனின் மொழிநடையையும் மொழி ஆளுமையையும் பாண்டியன் பரிசு காப்பியத்தின் வழிநின்று ஆராய்க

2. பாஞ்சாலி சபதத்தின் கதைப் பொருளை விளக்குக

14.10 மேலும் படித்தறிக

1. கமலா முருகன், பாஞ்சாலி சபதம் - மூலமும் உரையும், சாரதா பதிப்பகம், திருச்சி

2. கமலா முருகன், பாண்டியன் பரிசு, கௌரா பதிப்பகக் குழுமம், திருச்சி

## மாதிரி வினாத்தாள்

**பகுதி - I 41A – பொதுத்தமிழ் - தாள் - IV**

**காலம்: 3மணி மதிப்பெண்- 75**

**I. அனைத்து வினாக்களுக்கும் விடையளி** 10 ×2 = 20

1. யாப்பு என்றால் என்ன? விளக்குக
2. யாப்பின் உறுப்புகள் யாவை?
3. பாவகைகள் எத்தனை? அவை யாவை?
4. படிமம் குறியீடு பற்றி விளக்குக
5. அறத்தொடு நிற்றல் என்றால் என்ன?
6. செவியறிவுறூஉ துறை விளக்கத்தைக் குறிப்பிடுக
7. தண்டி கூறும் அணிஇலக்கணங்கள் எத்தனை?
8. ஐம்பெரும் காப்பியங்கள் எத்தனை? அவை யாவை?

9. பாரதிதாசனின் படைப்புகளைக் கூறுக

10. சிற்பி பற்றிக் குறிப்பு வரைக

குறிப்புகள்

**II. ஒரு பக்க அளவில் விடையளி** **5×5 = 25**

11. அ) பா வகைகள் பற்றி விளக்குக

(அல்லது)

ஆ) புதுக்கவிதையில் குறியீடு பற்றிச் சுட்டுக

12. அ) வரைவு கடாதலைச் சான்றுகளுடன் விளக்குக

(அல்லது)

ஆ) வஞ்சினக் காஞ்சியைப் பற்றிக் குறிப்பிடுக

13. அ) வேற்றுமை அணிகளை எடுத்துக்காட்டுகளுடன் விளக்குக

(அல்லது)

ஆ) பிறிதுமொழிதல் அணி பற்றிய விளக்கத்தினை வரைக

14. அ) தற்குறிப்பேற்ற அணிகள் பற்றி விளக்கு

(அல்லது)

ஆ) நிறுத்தற்குறிகள் இடம்பெறுமாற்றைக் குறிப்பிடுக

15. அ) சங்ககாலம் பற்றி வரையறுக்க

(அல்லது)

ஆ) கம்பராமாயணத்தின் தனிச் சிறப்புகளைக் கூறுக

**III. ஏதேனும் மூன்று வினாக்களுக்கு மட்டும் கட்டுரை வடிவில் விடையளிக்க** **3×10 = 25**

16. செய்யுள் உறுப்புகளை விவரித்து எழுதுக

17. பா வகைகளை கட்டுரை வடிவில் விடையளிக்க

18. புறப்பொருள் துறைகளைச் சான்றுகளுடன் நிறுவுக

19. அணி இலக்கணங்களை விவரிக்க

20. சிலப்பதிகாரத்தின் மாண்புகளைத் தொகுத்துரைக்க